VANI VILASANI SERIES No 1.

1.8.0

# சு க தே வி.

ஓர் நவீந நாவல்.



1910

உ

சிவாப்யாம் நமஃ

# சுகதேவி.

(ஓர் இனியதமிழ் நாவல்).



இது

மாயவரம் - வக்கீல்

எ. நடேசபிள்ளை

அவர்களால் இயற்றப்பட்டு

திருவல்லிக்கேணி

வாணீவிலாஸினீ புஸ்தகசாலையாரால்

சென்னை

கோமளேசுவரன் பேட்டை

சச்சிதாநந்த அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.





1910.

விலை  [redacted] 1-8-0

# முகவுரை.

இவ்வுலகில், மனிதராய்ப் பிறந்தவர்கள் அடையவேண்டிய பேறு நான்கு; அவை அறம் பொருள் இன்பம் வீடெனப்படும். இவைகளை யடைவதற்குப் புண்யபலம் மிகுதியாய் வேண்டும். பாபம் செய்வதற்கு மனமே முக்கிய காரணம். ஆதலால் ஒவ்வொருவரும் தங்கள் ஓய்வு நேரங்களில் நீதியைப் புகட்டும் கதைகளைப்படித்து மனதை இன்பப்படுத்தி நல்வழிக்குள்ளாக்கவேண்டும். இதையுத்தேசித்தே அநேகம் வித்வான்கள் கதைகளை யெழுதி வெளியிடுகிறார்கள். நீதியைப்புகட்ட அநேக சாஸ்திரங்கள் இருக்க, இவை தேவையோ வெனில்; சர்க்கரை தின்பதைப்பார்க்கிலும் அதைப்பணியாரமாகச் செய்து புசித்தல் எப்படி உருசியைத்தருமோ அதுபோலவேயாம். நாமும் அதையுத்தேசித்தே இப்புஸ்தகத்தை அச்சிட்டு வெளிப்படுத்தினோம். இதிலுள்ள சொற்குற்றம் பொருட்குற்றம் அச்சுப்பிழை முதலியவைகளைக் கருதாது அனைவரும் இதிலுள்ள நல்லவிஷயங்களை மாத்திரம் கவனித்து ஆசீர்வதிக்கக் கோருகிறோம்.

இங்ஙனம்

டி. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியார்.

உ

கடவுள் துணை.

# சுகதேவி.

---

## முதலாவது அத்தியாயம்.

கலியுகாதி நாலாயிரத்துத் தொளாயிரத்து எண்பத்தைந்தாம் வருடம் ஆவணிமாதம் ஓர்தினம் சாயங்கால வேளையில் காசிமாநகரம் பகீர்தாஸ் வீதியிலுள்ள ஓர்பெரிய வீட்டின் 3வது மாடியில் சந்திரன்போன்ற முகமும் பசும்பொன்போன்ற திரேகமுமுள்ள அதிசுந்திரமான மங்கை யொருவள் தனது அழகிய நீண்ட கருங்கூந்தலின் சிக்குகளை யெடுத்துக்கொண்டு அன்னம் நடப்பது போல் உலாத்திக்கொண்டிருக்க மற்றொருவள் நாற்காலியி லுட்கார்ந்துகொண்டு பேசிக்கொண்டிருந்தாள். இவள் சுகதேவியைப் பார்த்து "அம்மா! உன்தகப்பனார் இன்னும் சொற்பகாலம் ஜீவித்திருக்கும் பட்சத்தில் அவருடைய சொத்துக்களைப் பரிபாலித்து வரும்படி யினங்களை மென்மேலும் விருத்திசெய்ய, வர்த்தகத் திறமையும் யோக்கியதையும் நற்குண நற்செய்கைகளும் ஆன்ற வறிவும் தேர்ந்த கல்வியும் அதிரூபலாவண்ணியமுமுள்ள ஓர் யௌவன புருஷனை யுனக்கு விவாகஞ்செய்துவைத்திருப்பாரே? இப்போது உனக்கிருக்கும் ஆஸ்திகளுக்கு இச்சைப்பட்டு அனேக தரகர்கள் மூலமாய் உன்மாமன்மார்களிடம் பெருத்த செல்வவந்தர்கள் சிபார்சுசெய்து வருகிறார்கள். அவர்கள் ஜாதகங்களைச் சோதிப்பதும் செல்வம் கல்வி அறிவு வொழுக்க முதலியவற்றை விசாரிப்பதும் உன் தாயாருக்குப் பிரதிதினமும்வேலையாக விருக்கிறது. நல்லது கெட்டதென்பதைப் பகுத்தறியுஞ்சாமார்த்தியம் போதாமையாக விருப்பதாலும், மிகுந்த சஞ்சலபுத்தியையுடையவளாகவு மிருப்பதாலும், யார் எதுசொன்னபோதிலுந் தட்டாமல் "சரி" "சரி" யென்று கேட்கிறாள். உன் குடும்ப காரியங்களைப் பார்க்கத்தகுந்த மனுஷாளில்லாமல் வரும்படிகள்நஷ்டப்படுகிறதுந்தவிர வரவேண்டிய வினங்கள் வசூலிக்கப்படாமல் நஷ்ட முண்டாகவு மேதுவாயிருக்கிறது. உனக்குரிய நாயகன் எவ்வித அந்தஸ்தும் யோக்கியதையு முடையவராக விருக்கவேண்டுமென்பது உனதுகருத்து. அதையென்னிட மொளிக்காமற்சொல்லும் பட்சத்தில் அவ் விபரங்களை யுன்தாயாருக்குத் தெரிவித்து

உனதிஷ்டத்தைப் பூர்த்திசெய்து வைக்கிறேன். இல்லறவாழ்க்கையிலுள்ள சுகதுக்கங்கள் பலவகைப்பட்டன. அதிகலக்ஷண முள்ளவர்களா யிருப்பவர்களுக்குப் படிப்புங் குணமும் பூஜ்ஜியமா யிருக்கும்; லக்ஷணக் குறைவுடையவருக்குக் கல்வியும் விவேகமும் ஜாஸ்தியாயிருக்கும்; எல்லா விஷயங்களிலுஞ் சிறந்தவர்களுக்குக் கோபமேலிட் டிருக்கும்; அதனால் பலவித துன்பங்கள் நேரிடும்; ஸ்திரீயி னிச்சைப்படி நடக்கக்கூடியவர்கள் பலரிருக்கிறார்கள்; அவர்களால் அவமான முண்டாகுமேயன்றி புகழுண்டாகாது; ஆகையால், எல்லாவிஷயங்களையும் யோஜித்துச் சொல்" என்று கேட்டாள்.

சுகதேவி:—இல்லறவாழ்க்கையி லிருப்பவர்கள் பிரமசாரி, சன்னியாசி, வானப்ரஸ்தர் என்னும் மற்றமூன்று ஆசிரமத்திலுள்ளவர்களைக் காப்பாற்றக் கடமைப் பட்டவர்களா யிருக்கிறார்கள்; பிதிர்க் கருமங்களையும் தேவாராதனைகளையும் தவறாமல் செய்யவேண்டும்; அதிதிகள் அப்பியாகதிகளுக்கு அன்ன மளிக்க வேண்டும்; ஜெபதப ஹோமசிவபூஜை சிவார்ச்சனை முதலிய நித்திய கருமங்களைத் தவறாமற் செய்யவேண்டும்; பழிபாவங்களுக்கஞ்சி நல்லவழியிலே பொருளைச் சம்பாதிக்கவேண்டும்; பிதிரார்ச்சித சொத்துக்களை விருத்தியாம்சஞ் செய்துவர வேண்டியதுடன் தன் திரேகத்தை யுழைத்துச் சம்பாதிக்கும் பொருள்களே மேலானதாகக் கொள்ளவேண்டும்; ஒவ்வொருவரும் அவரவர்கள் குலாசார மதாசாரங்களுக்குத் தக்க தொழில்களைச் செய் கணவனும் மனைவியு மொற்றுமையாய்ச் செய்யவேண்டும்; ஒருவருக்குக் கீழ்பட்டு வழிபட்டு எந்தத் தொழில்களையும் செய்யக்கூடாது; நமக்கு மானம் பெரிதாகக் கொள்ளவேண்டியதேயன்றி பணத்தைத் திரணமாக மதிக்கவேண்டும்; ஸ்திரீ புருஷர்கள் ஒருவரையொருவர் நேசித்து வாழவேண்டி யிருப்பதால் அழகு குணஞ் செய்கைகளெல்லா மொற்றுமையாகத்தா னிருக்கவேண்டும்.

அநந்தி:—நீ சொல்வது உண்மையே; எல்லா விஷயங்களிலுஞ் சிறந்த புருஷரைத் தேர்ந்தெடுப்பது எவ்விதத்திலுஞ் சாத்தியமானதல்ல; ஒருவரிடத்தில் பலநற்குணங்க ளிருக்கலாம், சில துர்க் குணங்களுஞ் சேர்ந்திருக்கும்; நீதான் எல்லாவற்றிலுஞ் சிறந்தவளென்று சொல்லமுடியுமா? உன்னிடத்திலுஞ் சில குற்றங்களிருக்கலாம்; பெண் பிள்ளை யிவ்விருவர்களின் குண குணங்

கள் சற்றேறக்குறைய வொற்றுமையாக விருக்கிறதா வென்பதைப் பார்த்துத்தான் பெற்றோரு மற்றோரும் விவாகத்தை முடித்து வைப்பார்கள்; ஆயிரங்காலத்துப் பயிராகையால் கூடியவரையில் எல்லா விஷயங்களையும் யோஜித்துத்தான் முடிவு செய்வார்கள். பிறகு, தம்பதிகள் தங்களுக்குள்ள துர்க்குணங்களைமாற்றி மிகுந்த வொற்றுமையாக எவ்விஷயங்களையு மிருவருங் கலந்து யோஜித்து இல்லற தருமங்களை நடத்தவேண்டும்.

சுகதேவி:—தகப்பனார் சொற்படி கேட்கக்கடமைப்பட்டவ ளென்பதற்குச் சந்தேகமே கிடையாது. "தாய் சொற்றுறந்தால் வாசகமில்லை" என்னும் ஆன்றோர் வாக்கியத்தை நான் அறியா தவளல்ல; அவள் பேதமை குணமுள்ளவளாயிருக்கிறாளே; நான் என்னசெய்வேன்! யாருமற்ற பாவியாகிவிட்டேனே! என்னுடைய புத்தியைக்கொண்டுதானே நான் மானமாகக் காலங் கழிக்கும்படி யான ஸ்திதியி லிருக்கிறேன்!

அநந்தி:—உன்மனதுக்குப் பிடித்த புருஷன் யாரென்பதை நீ நேரில் எவ்விதந்தெரிந்துகொள்ளமுடியும்; பிறர் வாய்மொழி யை நம்பித்தானே செய்யவேண்டும்; ஐரோப்பியர்களைப்போல் நேரில் கலந்துபேசி அபிப்பிராயங்களைத் தெரிந்துமுடிக்கமுடியு மோ? அப்படிச் செய்யப்புகின் அபவாதமான பேருண்டாகி பெய ருங் கீர்த்தியு மழிந்துவிடுமல்லவா?

சுகதேவி:—பிறர் வார்த்தைகளை நம்புவது எப்போதும் பிசகு தான்; நேரிலுறவாடிப் பேசுவதுங் கூடாத விஷயமே; ஆனால் நேரில் பாராமல் அபிப்பிராயஞ் சொல்ல முடியாது; எல்லா விஷ யங்களையும் புத்தி சாதுர்யத்தினால் தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

இவர்களிவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் இவள் தாயார் மகதேவி அவ்விடம் வந்து விட்டபடியால் இவர்கள் பேச்சை நிறு த்திவிட்டார்கள். இந்த மகதேவியின் புருஷன் ராம்நாராயன். வைசிய குலத்தைச் சேர்ந்தவர்; ஓர் பெருத்த ஜவளி வியாபாரி; நெசவுசாலைகளேற்படுத்திப் பட்டுநூல் பருத்திநூல் இவ்விரண்டு வகையிலும் பலதினிசு வஸ்திரங்கள், புடவைகள் முதலியன நெய்து வந்ததுமன்றி கூலித்தறிக்காரர்களிடத்தில் நூல் பட்டு இவைகளைக் கொடுத்து நெய்யச்செய்து அவைகளை வாங்கிக் கொண்டு அவர்களுக்குக் கூலியுங் கொடுத்துவந்தார். இவருடைய

ஜவளிதினிசுகள் சாயத்திலு முறுதியிலுந் திரமான தென்று இவ்
விந்தியா வெங்கும் மிகுந்த பெயருண்டாகிவிட்டதால் இவருக்குப்
பெருத்த வியாபாரம் நடந்து ஏராளமான லாபங்கள் கிடைத்து
வந்தன. இவர் இறந்துபோகுங் காலத்தில் இவருக்கு ஐம்பது
லட்சத்திற்குச் சொத்துக்களிருந்தன; இவருக்குச் சுகதேவியைத்
தவிர வேறே சந்ததி கிடையாது ; இவர் தனக்குள்ள லாவாதேவி
யில் ஒரு லட்சரூபாய் தன் மனைவி மகதேவி யெடுத்துக்கொள்ளு
கிறதென்றும், மற்ற சொத்துக்களில் இரண்டு லட்சரூபாயின்
வட்டிகளைக்கொண்டு காசி முதலிய விடங்களில் சில தருமங்களை
நடத்திவருகிற தென்றும்,மீதியாயுள்ளதைத் தன்பெண் சுகதேவி
யடைந்து அதன் விருத்தியாம்சங்களை அவளிஷ்டப்படிச் செலவு
கள் செய்து வருகிற தென்றும், இவள் ஜீவதிசைக்குப்பின் இவளு
டைய வார்சுகள் இச்சொத்துக்களை சர்வசுதந்தரமாக அனுபவித்து
வருகிறதென்றும் உயில்செய்துவிட்டுக் காலமாயினர். இது ரிஜிஸ்
டர் செய்யப்படவில்லை. மகதேவி யதிகமாகப் படிக்காவிட்டாலும்
லாவாதேவி வியாபாரம் இவைகள் சம்பந்தமான யாவற்றுக் கணக்
குகளையும் தன் புருஷனுத்திரவுப்படி தணிக்கை செய்து வருவது
வழக்கம். தன் வீட்டுவேலை யொழிந்த காலங்களில் தஸ்தா வேஜி
களின் பதிவுபுஸ்தகங்களைப் பார்வையிட்டு ஒரு வருஷகெடுவுக்கு
மேற்பட்டதற் கெல்லாம் வட்டி போட்டு அதை வசூலிக்கும்படி
ஜாப்தாவெடுத்து ஏஜண்டுகளுக்கு அனுப்பச்செய்வாள் ; காலங்
கடந்து போகக்கூடிய தஸ்தாவேஜிகள் டிக்கிரிகள் இவைகளை
யெடுத்துக்கொடுத்து பிராது செய்யவும், டிக்கிரிகளை நிறைவேற்
றச்செய்யவு மேற்பாடு செய்வாள். இவளிவ்விதம் தன் புருஷருக்
குரிய வேலைகளைக் கவனித்து வந்ததால் அவர் தன் கடைகளில்
விற்று முதல் நிலுவை முதலிய கணக்குகளையும் நெசவு வேலை
செய்பவர்களிடம் வரவேண்டியது அவர்களுக்குக்கொடுக்கவேண்
டியது முதலிய கணக்குகளையும்கவனித்துப்பார்க்கவும்,தறிவேலை
செய்பவர் முதலிய சிப்பந்திகளைச் சரிவரவேலை வாங்கிவரவும் சவு
கரியமாக விருந்தது. இவர் இறந்த பின்பு இவ்வேலைகளனைத்தும்
தான் நேரில் பார்த்து வருவது மகதேவிக்கு மிகுந்த கஷ்டமாக
விருந்தபடியால், லாவாதேவி கோர்ட்டு நடவடிக்கைகள் இவைக
ளிரண்டையும் தன் பெண் சுகதேவி பார்த்துவரும்படி செய்து
அவ்வேலைகளை, அவள் சரியாகப்பார்த்து வருகிறாளாவென்பதைக்
கவனித்துவருவாள். சுகதேவி உருடுபாஷையில் நன்றாய்ப்படித்

துத் தேர்ந்தவள்; இங்கிலீஷிலும் நன்றாய் எழுதவாசிக்கத்தெரியும்; கணக்கில் மிகுந்த கெட்டிக்காரி; மிகுந்த புத்திகூர்மையுடையவள்; தன் குடும்பகாரியங்களைப் பார்த்த காலங்கள் தவிர மற்ற நேரங்களில் தங்கள் இந்துமத சம்பந்தமான சாஸ்திரங்கள், புராணங்கள் முதலிய வற்றை வாசித்துக்கொண் டிருப்பாள்; வம்புவார்த்தைகள் பேசி வீண்காலம் போக்காள்; இவளுடன்கூடி வாசித்துவந்த பெண்கள் தன்னைப்பார்த்துப் பேசவிரும்பினால் அவர்கள் தன்னைப் பிரதிதினமும் சாயங்கால நேரங்களில் 25நாழிகைமுதல் அஸ்தமனசமயத்துக்குள் பார்க்கலாமென்றும், மற்றெக்காலங்களிலும் அன்னியர் தன்னைப்பார்க்க வரும்படி விடக்கூடாதென்றும் தனது சிப்பந்திகளுக்குக் கண்டிப்பா யுத்திரவு செய்திருந்தாள். இவளுடன் பேசிக்கொண்டிருந்த அநந்தி இவளுக்கு ஆதியில் படிப்பு சொல்லிக்கொடுத்தவள்; இவளிடத்தில் சுகதேவிக்கு மிகுந்த பற்றுதலிருந்து வந்தபடியால் இவள் தன்னைப் பார்க்க வராதிருந்தாலும் அவளைத் தன் வேலைக்காரியை யனுப்பி அழைத்துவரச் செய்து அவளுடன் பேசிக்கொண்டிருப்பாள். இவள் தாயார் மகதேவிக்கும் இந்த அநந்தியிடத்தில் மிகுந்த பிரியமுண்டு. இவளிடத்தில் மகதேவி வேறு சில விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தபின் சுகதேவியை அநேகர் வந்து கேட்பதாகவும், அவர்களுக்கெல்லாம் கொடுப்பதில்லை யென்று சொல்லிவிட்டதாகவும், சர்க்கார் உத்தியோகஞ்செய்பவராகவும், மாதம் ஒன்றுக்கு ரூ. 250க்குக் குறையாத சம்பளம் வாங்குகிறவராகவும், நல்ல குடியிற் பிறந்தவராகவும், அழகுடையவராகவு மிருப்பவரைப் பார்த்துத் திட்டஞ்செய்யும்படி தன் சகோதரர்களுக்குத் தெரிவித்திருப்பதாகவுஞ் சொன்னாள். இதைக் கேட்ட அநந்தி புன்னகை கொண்டு எந்த விஷயங்களையும் சுகதேவியை யோசித்துக்கொண்டு முடிவு சொல்லுங்கள்; அவளுடைய சம்மதமின்றி முடிவு செய்தால் அவமானத்திற் கிடமாகு மென்றாள். அதற்கென்னதடை; அவளுடைய நன்மையை யுத்தேசித்துத் தான் என்னுடைய உறவினர்களுடைய தாக்ஷண்ணியங்களை யெவ்வளவும் பாராமல் அவர்கள் கேட்டுக்கொள்ளுதலை நிராகரித்துவிட்டேன். இந்தப் பெரிய குடும்பத்தை வகித்துப் பார்க்கக் கூடிய புத்தி கூர்மையுடையவர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும். உங்களையுங் கலந்து யோஜித்தேமுடிவுசெய்கிறேனென்று மகதேவி பதிற் சொன்னாள். அநந்தி தன் வீட்டுக்குப் போனபின்பு சுகதேவி

அன்றயதினம் பார்த்த வேலைகள் ஒவ்வொன்றையும் மகதேவி சரியாய் கவனித்து மறுநாள் அவள்செய்ய வேண்டிய வேலை யின்னதென்பதை யறிவித்து விட்டுச் சென்றாள்.

மகதேவிக்கு ஹரிநாத் உமான்பிரசாத் என்னும் இரண்டு சகோதரர்கள் உண்டு. இவர்கள் தகப்பன் அப்பட்டணத்தில் ஓர் பெரியமளிகை வியாபாரி; இரண்டு லட்சத்திற்குமேல் சொத்துக்க ளிருந்தன; தகப்ப னிறந்தபின் இவர்களுக்கு வியாபாரத்தைச் சரி வர நடத்தத் தெரியாமையால் பலவிதங்களில் நஷ்டமுண்டாயின; இவர்களிருவருக்கும் நல்லவர்கள் சிநேகங் கிடையாது; துன்மார்க் கச் செலவுகளு மிகுதியாக உண்டு; அதனல் இவர்களுடைய சொத்துக்க ளனேகமா மெல்லாவற்றையு மிழந்துவிட்டார்கள். மகதேவிக்கு ஏராளமான சொத்துக்களிருந்தும் அவைகளி லெவ் வளவேனும் இவர்களுக்குக் கொடுக்கச் சம்மதிக்காதபடியால் எந்தவிதத்திலாவது யிவளை யேமாற்றிப் பொருள் பறிக்கப் பல வித தந்திரங்கள் செய்தார்கள்; சுகதேவிக்குத் தகுந்த மாப்பிள்ளை பார்த்துத் திட்டஞ் செய்யவேண்டுமென்று அநேக தரகர்களிடஞ் சொன்னர்கள்; அவர்கள் தக்க யோக்கியதையுடைய தனவந்தர்க ளா யுள்ள வர்த்தகர்களுக்காக சிபார்சுசெய்ய ஹரிநாத் தனக்கும் தன் தம்பிக்கும் இரண்டு லட்சரூபாய் யார் கொடுக்கிறர்களோ அவர்களுக்குத்தான் சுகதேவியைக் கொடுக்கச் செய்வேனென் றும், அத்தொகையில் தரகர்களுக்கு 100 க்கு 5 வீதம் கமிஷன் கொடுப்பதாகவுஞ் சொன்னர். சுகதேவிக்கு ஐம்பது லட்சத்திற்கு மேற்கொண்ட சொத்துக்க ளிருப்பதால் பலவிதபோட்டா போட் டிகளேற்பட்டு ஹரிநாத்துக்குத் தகுந்த தனங்கொடுப்பதாக வாக் குறுதி செய்தார்கள்; இவர் இந்தத் தனவந்தர்க ளொவ் வொருவ ரையும் பற்றித் தன் தமக்கை மகதேவிக்குச் சிபார்சு செய்யஅவள் இங்கிலீஷ் நன்றாய்கற்று பெரிய உத்தியோகஞ் செய்பவருக்குத் தான் சுகதேவியைக் கொடுக்கவேண்டு மென்றும் மற்றவர் களுக்குக் கொடுக்கமாட்டேனென்றுங் கண்டித்து விட்டாள். இவள் வார்த்தையை மீறிச்சொல்ல முடியாததால் அவளிஷ் டப்படிக்கே வரன்கள் பார்த்துவருவதாக ஹரிநாத் ஒப்புக் கொண்டு தரகர்களைத் தருவித்துத் தனது தமக்கையின் கோ ரிக்கைகளைச் சொல்லி தனவந்தர்களாயுள்ள பெரிய உத்தியோ கஞ் செய்பவர்களைத் திட்டஞ் செய்யும்படிக்கும், அவர்கள் ஐம் பதிஞயிரத்திற்குக் குறையாமல் கமிஷன் கொடுக்கக் கூடியவர்க

ளாக விருக்க வேண்டுமென்றுஞ் சொன்னார். அத்தரகர்கள் தங்களால் கூடியமுயற்சி செய்து தெரிவிப்பதாகச் சொல்லி மேற்கே டில்லி, கிழக்கே கல்கத்தா, தெற்கே நாகப்பூர், இதன்மத்தியிலுள்ள பட்டணங்களொவ்வொன்றிலுமுள்ள வைசியகுல அதிபாரிய பெரிய உத்தியோகஸ்தர்கள் யாரிருக்கிறார்களென்று விசாரித்து வந்தார்கள்.

கிருஷ்ணாஜி யென்னும் தரகன் அலகபாத் ஜில்லாவில் போலீஸ் இனிஸ்பெக்டர் வேலைபார்த்துவரும் வேங்கடநாராயணப்பாவென்ற 25 வயதுள்ள அதிக சுந்திரமான புருஷனைக்கண்டு சுகதேவியின் ரூப லாவண்ணியங்களையும் அவளுக்குக் கிடைத்திருக்குஞ் செல்வங்களையும் விசேஷமாக வெடுத்துச்சொல்லி அவளை விவாகஞ்செய்து வைக்கிறேன்; அதற்கு சொற்பச் செலவுகள் செய்யவேண்டும்; அச்செலவுகளதிகமாக விராது; அவள் குடும்பவொருவருஷவருப்படியில் பாதிக்குமேல் விருக்கமாட்டாது. அதாவது ஒருலட்சரூபாய் முன்னடி கொடுக்கவேண்டும்; அத்தொகையைப் பல சில்லரையா சாமிகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தால்தான் அவர்களெல்லாரும் பெண்ணின் தாயாருக்குச் சிபார்சு செய்வார்கள்; அவர்கள் விட்டு சிப்பந்திகளில் ஒருவருக்குக் கொடுத்து மற்றொருவருக்குக் கொடாதிருந்தாலும், அவரவர்கள் அந்தஸ்துக்குத் தக்கபடி மரியாதைகள் செய்யாவிட்டாலும் அவர்கள் அந்த அம்மாவுக்குப் பலவிதமாகத் துற்போதனைகள் செய்து கலைத்துவிடுவார்கள்; அத்தொகை கொடுத்தால்தான் நான் தயிரியமாகப் பேசி காரியத்தை முடிக்கலாமென்றார்.

இந்த வேங்கட நாராயணப்பாவின் தகப்பன் ஓர்பெரிய இங்கிலீஷ் கம்பெனியில் துபாஷா யிருந்து மிகுந்த திரவியங்களைச் சம்பாதித்தார்; அவருக்கு இரண்டு லட்சத்துக்குமேல் சொத்துக்களுண்டு; அச்சொத்துகளில் பாங்கியில்போடப்பட்டிருந்த தொகையில் நாற்பதினாயிர ரூபாயும், கட்டடங்களில் பதினாயிரரூபாயும் இந்தவேங்கடநாராயணப்பாவுக்குக்கொடுத்ததுமன்றி இவர் பீ.ஏ. பரிட்சை கொடுத்திருந்ததால் போலீஸ் கமிஷனருக்குத் தகுந்த சிபார்சுசெய்து மாதம்ஒன்றுக்கு ரூ150 சம்பளத்தில் இனிஸ்பெக்டர் வேலைசெய்து வைத்தார்; அவ்வேலையில் ஐந்துவருடம் சர்விஸானதால் மாதம் 1 க்கு ரூபா 250 சம்பளத்தில் இனிஸ்பெக்டர் வேலை பார்ப்பிட்டது. ஷை. தரகன் கிருஷ்ணாஜிசொன்ன வார்த்தை

களைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் காதுற்றுக்கேட்டு மிகுந்த சந்தோஷ மடைந்து "நான் பூர்வஜென்மத்தில்செய்த புண்ணியத்தினால் இந்தவரன் வலுவில் கிடைத்திருக்கிறது; இந்தப் பெண் மிகுந்த லட்சணமுடையவளென்றுந் தெரிகிறது; இவளுக்குள்ள திரவியங்களைக்கவர்ன்மெண்டுபாங்கியில்போட்டாலும்மாதம்1க்கு முப்பத்தையாயிரம் ரூபாய்க்குமேல் வட்டி கிடைக்குமே. தினம் 1 க்கு ஆயிரரூபாய்க்குமேலாகிறதே; இராஜாவைப்போல் சகல சுகங்களையு மனுபவித்துக்கொண்டு காலங் கழிக்கலாமே; ஏனிந்த இன்ஸ்பெக்டர் வேலையிலிருந்துகொண்டு கஷ்டப்படவேண்டும்? தரகன் ஒரு லட்சரூபாய் முன்னடி செலவிட வேண்டுமென்று சொல்கிறாரே; இதற்கென்ன செய்கிறது என்று பலவாறாக யோசித்து கிருஷ்ணஜியைப் பார்த்து "நீங்கள் சொல்வது சரிதான். நீங்கள் சொல்லும் பெண்ணை விவாகஞ் செய்துகொள்ள எனக்கெவ்வித ஆக்ஷேபனையுமில்லை; பெற்றோரும் உறவினர்களும் சம்மதிக்காவிட்டாலும், அவர்கள் தயவை நான் எதிர்பார்க்கமாட்டேன், பெண் படித்தவளாகவும், நற்குண நற்செய்கைக ளுடையவளாகவும், கூடியவரையில் லக்ஷண முடையவளாகவு மிருக்கவேண்டும்; இவ்விஷயங்கள்மட்டில் நான் நன்றாய்விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும்; நீங்கள் சொல்லும் கமிஷன்தொகைதான் மிகவும் ஜாஸ்தியாயிருக்கிறது; அவ்வளவு கொடுக்கக்கூடாதென்று நான் சொல்லவரவில்லை; அட்வான்ஸாகக்கொடுக்கசாத்தியப்படாதென்று சொல்கிறேன். என்தகப்பனார் எனக்கு ஐம்பதினாயிர ரூபாய் சொத்துக்கள்தான் கொடுத்திருக்கிறார்; அவையனைவற்றையுங் கொடுக்கத் தடையே கிடையாது; மற்றதொகையை விவாகமான மறுமாதத்திலேயே கொடுத்துவிடுகிறேன்; என்வார்த்தையில் நம்பிக்கை யில்லாவிட்டால் அத்தொகைக்கு நீங்கள்கேட்ட தஸ்தாவேஜியெழுதித் தருகிறேன்; காலதாமதஞ் செய்யாமல் காரியத்தை முடியுங்கள்; கல்யாணம் நிச்சயமானவுடன் என்னுடைய யாவற்று சொத்துக்களையுந் தருகிறேன்; வாங்கிப்போங்கள் என்னுடைய நாணயத்தைப் பாருங்களென்றார். இவைகளைக்கேட்ட கிருஷ்ணஜி "தங்களுக்காக என்னால் கூடிய முயற்சி செய்து பார்க்கிறேன்; அப் பெண்ணின் மாமன் ஹரிநாத் என்பவர், ஒருபெரிய ஆசாமி! அவருக்கு வாய்ப்பூட்டுப் போட்டுக்கொண்டே யிருக்கவேண்டும்; அவர் சொற்படித்தான் அவர்தமக்கை நடக்கிறாள்; இதுவரையில் என்கையிலிருந்து இருநூறு ரூபாய் அவருக்குக்

கொடுத்துவிட்டேன்; படிச்செலவு முதலியனவற்றில் மூன்னூறு ரூபாய்க்கு மேலாய்விட்டது; கறையான் தன் வாயீரங்கொண்டு பிசைப்பதுபோல் ஒவ்வொருவரையு மடுத்து அவரவர்களுக்கு நய வார்த்தைகளைச் சொல்லிப் பிழைப்பவனு யிருக்கிறேன்; நான் அதிக ஐவேஜி யுடையவனுமல்ல; தாங்கள் ஐந்நூறு ரூபாய் கொடுத்தால் அதையந்த ஹரிநாத்துக்குக் கொடுத்து எவ்விதத்திலாவது காரியத்தைச் சரிட்டுக்கொண்டு தங்களுக்குக் கடிதம் போடுகிறேன்; நீங்கள் எந்த வேலையிருந்தபோதிலும் உடனே புறப்பட்டு வரவேண்டும்; சிலவிஷயங்கள் நேரில் பேசிக்கொண்டு முடித்து வைக்கிறே னென்றார். வேங்கடநாராயணப்பாவிடம் அந்தகாலத்தில் ஜாஸ்தி தொகை கையிருப்பில்லையாதலால் அவரிடமிருந்த இருநூறு ரூபாயு மெடுத்துக்கொடுத்து "போய் விஷயங்களைப் பேசி கடிதம் போடுங்கள், நான்வந்து சேருகிறேன்" என்று மகதேவி வீட்டின் விலாசத்தைக் கேட்டுத் தனது டயிரியி லெழுதிக் கொண்டார்.

கிருஷ்ணஜி தனக்குக் கிடைத்த இருநூறு ரூபாயைப்பற்றி மிகுந்த சந்தோஷமடைந்து இவருக்கு விவாகமுடித்துவைத்தால் இவர்பேசிய தொகை கொடுப்பாரென்ற நம்பிக்கையின் பேரில் ஹரிநாத்வீட்டுக்குவந்து தான் பார்த்துவந்த மாப்பிள்ளையின் உத்தியோகம் அழகு செல்வ முதலியனவற்றைச் சொன்னதுமன்றி கமிஷன் இருபத்தையாயிரந்தான் முன்னடி கொடுக்கமுடியுமென்றும் மற்ற பாதித்தொகை விவாகமான ஒருமாத கெடுவுக்குள் கொடுத்துவிடுவதாக வாக்குறுதி சொல்லி யிருப்பதாகவுஞ்சொன்னார். இந்தரகன் சாமர்த்தியவானென்று ஹரிநாத் தன்தமக்கை வீட்டுக்குப்போய், போலீஸ் இனிஸ்பெக்டரின் யோக்கியதைமுதலியனவற்றைப் பற்றிச் சொல்ல, அவள் அந்த உத்தியோகஸ்தரை நேரில் வரச்சொல், பார்த்துப் பேசிக்கொள்ளலாமெனச் சொல்லிவிட்டாள். மகதேவி சொன்ன வார்த்தைகளை ஹரிநாத் கிருஷ்ணஜிக்குத் தெரிவித்தவுடன் அவர் உடனே போலீஸ் இனிஸ்பெக்டருக்கு ஓர் கடிதமெழுதித் தன்னை வீட்டில்வந்து கூடிய சீக்கிரம் பார்க்கவேண்டுமெனத் தெரிவித்தார்.

தரகருடையகடிதம் எப்போதுவரும் எப்போதுவருமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த வேங்கடநாராயணப்பா கிருஷ்ணஜியுடைய கடிதத்தைப் பார்த்தவுடன் மிகுந்த சந்தோஷமடைந்து

அன்றயதினமே புறப்பட்டு அத்தாகர் வீட்டுக்கு வந்துசேர்ந்தார். கிருஷ்ணஜி தானும் ஹரிநாத் என்பவரும் உங்களுடைய குலகோத்திரங்கள் குணாதிசயங்களைப்பற்றி பெண்ணின் தாயார் மகதேவியம்மாளுக்கு நிரம்பவெடுத்துச்சொல்லியிருக்கிறோம்; அவர்கள் அநேகமாய் சம்மதித்துவிட்டார்கள்; ஆகிலும் நேரில்பார்த்துப்பேசவேண்டுமென்கிற அவாக்கொண்டு தங்களைத் தருவிக்கச்சொன்னார்கள்; நாளையதினம் காலை அவர்கள் வீட்டுக்கு அழைத்துப்போகிறேன்; நீங்கள் சொற்பம் அமைத்தலாகவே பேசவேண்டும்; படபடப்புடன் பேசவே கூடாது; கோபமான வார்த்தைகளைச் சொல்லக் கூடாது என்று பலவித புத்திமதிகளைப் போலீஸ் இனிஸ்பெக்டருக்குச் சொன்னார்.

மறுநாட்காலையில், கிருஷ்ணஜி இனிஸ்பெக்டரை யழைத்துக்கொண்டு ஹரிநாத் வீட்டுக்குச்சென்று அவருக்கு இனிஸ்பெக்டர் வந்திருக்கிற விபரம் தெரிவித்தார்; உடனே ஹரிநாத் இனிஸ்பெக்டரை மிகுந்த மரியாதையுடன் வரவேற்று அவருக்குச் சிற்றுண்டிகள் கொடுத்து உபசரித்தார். பின்பு மூவரும் மகதேவி வீட்டிற்குப் புறப்பட்டுப் போகையில் ஒரு வேலைக்காரனை முன்னதாக அனுப்பி இனிஸ்பெக்டர் அவ்விடம் வருகிறவிபரம் தன்தமக்கைக்கு அறிவிக்கச் செய்ததுமன்றி அந்தவீட்டிற்கு அவர்கள் வந்து சேர்ந்தவுடன், ஹரிநாத் மற்றிருவரையும் முன்கட்டு ஹாலிலுள்ள நாற்காலிகளி லுட்காரச்செய்து தான் மகதேவியம்மாளிடஞ்சென்று, "இனிஸ்பெக்டரவர்கள் இவிடம்வரச் சம்மதிக்கவேயில்லை; அவருக்கு அனேக லட்சங்கணக்கு சொத்துக்களிருக்கின்றன; கௌரவத்திற்காக மட்டில் சர்க்கார் உத்தியோகஞ்செய்கிறார்; மிகுந்த புத்திசாலி; நல்லயோக்கியதையுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவர்; இவரைப்போல் கிடைப்பது அரிது; என்னுடைய சினேகிதர் கிருஷ்ணஜி மிகுந்த சிரமப்பட்டு அவருக்கு நல்ல வார்த்தைகள் சொல்லி அழைத்துவந்திருக்கிறார்; அவரைநீங்கள் எவ்விடத்தில் எப்போது பார்க்கலாம்" எனக் கேட்டார். மகதேவியம்மாள் சற்றுநேரம்யோசித்து, "இரண்டாவதுமாடியில் திரையைக் கட்டச்சொல்லு; அந்தத்திரைக்கு 10 கெஜத்துக் கப்பால் நாற்காலிகள் போடச்செய்து அவர்களை யழைத்துப்போய் உட்கார்ந்திரு; நான்வந்து பேசிக்கொள்ளுகிறேன்" எனச்சொல்ல; ஹரிநாத் அந்தப்படியே வேலைக்காரர்களைக் கொண்டு திரைகட்டவும் நாற்காலி

கள் கொண்டுவந்து போடவுஞ் செய்து இனிஸ்பெக்டரையும் கிருஷ்ணஜியையு மவ்விட மழைத்துப்போய் மூவரு முட்கார்ந் திருந்தார்கள்.

இனிஸ்பெக்டர் வேங்கடநாராயணப்பா 5 அடி 11 அங்குல உயர முடம், அகண்டமார்பும், பருத்த தேகமுமுடையவர்; அவருடைய மீசையும் கிருதாவும்பட்டாளத்து சிபாய்போலிருந்தது; போலீஸ் டிபார்டுமெண்டு யூனிபாரம் போட்டிருந்ததுடன் செகப்புப்பட்டில் சரிகைபோட்ட தலைப்பாகையும் வைத்திருந்தார்; இவர் இடுப்பில் கட்டித் தொங்குங் கத்தி குதிகாலில் அடிபட்டுக்கொண்டிருந்தது. இவர்கள் உட்கார்ந்திருந்த இரண்டாவதுமாடியின் சுவர்களில் ஸ்ரீ ராமாவதாரம்ஸ்ரீ கிருஷ்ணவதாரங்களில்ஸ்ரீமந்நாராயணன் செய்த லீலைகள் ஒவ்வொன்றிற்கு மொவ்வொரு படமெடுத்துத் தொங்கவிடப்பட்டிருந்ததுடன் நிலைக்கண்ணாடிகளும்வைக்கப்பட்டிருந்தன. அம்மாடியி னலங்காரங்களை கிருஷ்ணஜியும் இனிஸ்பெக்டரும் பார்த்து சந்தோஷித்துப் பேசிக்கொண்டிருக்கையில், கிண் கிண்ணென்ற மணிச்சத்தங் கேட்டவுடன்ஹரிநாத் எழுந்திருந்து இவர்களுக்கு ஜாடைகாட்டி பேசாமலிருக்கச்செய்து திரைக்குச் சமீபமாகப்போய்ச் சற்றுநேர முற்றுக் கேட்டுக்கொண்டு நின்று இனிஸ்பெக்டரைப் பார்த்து "உங்களுக்கு ஜனனபூமியெது? உங்கள் தகப்பனாருக்கு ஜீவன மார்க்கமென்ன? உங்கள் கோத்திரப் பெயரென்ன" வென்று கேட்டார்.

இனிஸ்பெக்டர்:—எங்களுக்கு ஜனனபூமி கல்கத்தா;எங்கள் கோத்திரத்தார்களுக்கு பல்டியோ வென்ற பட்டப்பேர்; எங்கள் தகப்பனாருக்கு ஒரு இங்கிலீஷ் கம்பெனியில் துபாஷ் வேலை.

ஹரிநாத் அந்தத் திரைக்குச் சமீபத்திலேயே நின்றுகொண்டு உற்றுக்கேட்டுக் கேள்விகள் கேட்டதால் மகதேவியம்மாள் அந்தத்திரைக்கப்பால் உட்கார்ந்துகொண்டு இவரிடஞ் சொல்லிக் கேள்விகள் கேட்கும்படிச் சொன்னதாக கிருஷ்ணஜியும் இனிஸ்பெக்டருந் தெரிந்துகொண்டார்கள்.

ஹரிநாத்:—தங்களுக்கு இப்போ தென்னவேலை ? மாதம் 1-க்கு சம்பளமென்ன ?

இனிஸ்பெக்டர்:—போலீஸ் டிபார்டுமெண்டில் இனிஸ்பெக்டர்வேலை; மாதம் 1-க்கு ரூ 250 சம்பளம்.

ஹரிநாத்:—இந்தவேலை யில்லாவிட்டால் எவ்விதமான ஜீவனமார்க்கஞ் செய்வீர்கள்?

இனிஸ்பெக்டர்:—வேறெந்த சர்க்கார் வேலையாவது பார்ப்போம்.

ஹரிநாத்:—கவர்ண்மெண்டு வேலையே இல்லையென்று வைத்துக்கொள்வோம், வேறென்ன ஜீவனமார்க்கஞ் செய்வீர்கள்?

இனிஸ்பெக்டர்:—சற்றே கோபத்துடன் என்னுயுள் பரியந்தம் கவர்ண்மெண்டு வேலையே பார்ப்பேன்; ஒருநாளும் வேறு வேலைக்குப் போகேன்.

ஹரிநாத்:—தெய்வகதியாக உங்களுக்கு எந்தகவர்ண்மெண்டு வேலையுங் கொடுக்கக்கூடாதென உத்திரவு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். அதன்மேல் என்னசெய்வீர்கள்?

இதைக் கேட்டவுடன் இனிஸ்பெக்டருக்கு மீசை துடிதுடிக்க தேகம் படபடத்து மிகுந்த ஆத்திரத்துடன் "என்னை யீஸ்வரன் அந்தவழிக்கு விடவேமாட்டார்; தெய்வச்செயலாக நேர்ந்தால் என்தகப்பனுருடைய துபாஷ்வேலையைப் பார்ப்பேன்; பட்டினி யாய்க்கிடக்க நேர்ந்தாலும் வேறெந்த வேலையும் பார்க்கமாட்டேன்" எனச் சொன்ன கோபமான வார்த்தைகளைக் கேட்டு இவருடைய முகக்குறிப்பையும் மகதேவியம்மாள் பார்த்து தன் தம்பியுடன் இனி இவ்வித கோபமுள்ளவர்களையாவது முரட்டுத்தனமான உத்தியோகம் பார்ப்பவர்களையாவது என்னிடம் அழைத்துவரவேண்டாமென்று மெதுவாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டாள். ஹரிநாத் வாடியமுகத்துடன் இவர்களுட்கார்ந்திருந்த விடத்திற்குவந்து இனிஸ்பெக்டருக்கு என்னசமாதானஞ் சொல்லலாமென வாலோசித்துத் தெளிந்து, அம்மா தன்பெண்ணின் சம்மதத்தைத் தெரிந்துகொண்டு கடிதம் போடுவதாகவும் அதன்பிறகு வரலாமென்றுஞ் சொல்லுகிறார்கள் எனச் சொல்ல இருவரும் எழுந்து வெளியேவந்து விட்டார்கள். இனிஸ்பெக்டர் லீவன்றி வந்துவிட்டபடியால் காலதாமதஞ் செய்யாம லுடனே ரயிலேறித் தன்னூர்வந்து சேர்ந்தார்.

[illegible]நாஸென்னும் மற்றொருதரகன் பலவிடங்களினுஞ்சுற்றித் திரிந்து [illegible]க்குச் சென்று விசாரித்ததில் அந்தப் பட்டணத்

தில் டோனோஜி என்ற டிப்டிகலெக்டரிருப்பதாகவும், அவர் தகுந்த தனதனவானுடைய பிள்ளை யென்றும், ஸ்டாச்சியூடரி சீவில் ஸர்விஸ் பரீட்சை கொடுத்து இந்த உத்தியோகங் கிடைத்ததென்றும், இவருக்கு வயது இருபத்திரெண்டென்றும், மாதம் 1-க்கு ரூ 250 சம்பளம் வாங்குவதாகவுங் கேள்விப்பட்டு அவரைக்கண்டு சுகதேவியின் செல்வ முதலியவற்றையு மவளழகையும் வர்ணித்துத் "தங்கள் குணாதிசயங்களைப்பற்றி யனேகர் கொண்டாடிப் பேசிக்கொண்டிருந்தார்கள்; அந்தப்பெண்ணின் மாமன் ஹரிநாத் எனக்கு முக்கிய சிநேகிதர்; தங்கள் முகத்தைப் பார்த்தவுடன் அந்தப்பெண்ணை தங்களுக்குத் தகுதியுடையவளெனவெண்ணித் தங்களுடைய அபிப்பிராயந்தெரிந்து போகலாமென வந்தேன்" என்றார். இதைக்கேட்ட டோனோஜி சற்றே யாலோசித்து இவர் நம்மிடம் வலுவில் வந்து பேசவேண்டிய காரணமென்ன; இவர் தரகராயிருக்க வேண்டும்; நம்மிடத்திலோ பெண்வீட்டுக்காரிடத்திலோ பணம்வாங்க வுத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது; அது விபரத்தை யறிவோமென்று, அந்தத் தர்மதாசைப்பார்த்து "உங்களை யார் இவிடம் வரச்சொன்னார்கள்; அந்தப்பெண்ணின் தாயாரா? அல்லது வேறு ஆசாமிகளா? அந்தப்பெண்ணுக்குத் தகுந்த வரன் பார்த்து முடித்துவைத்தால் உங்களுக்கேதேனும் பிரயோஜனங் கிடைக்குமா? அப்படிக் கிடைக்குமாகில் அது யாரிடத்தில் கிடைக்குமென்ற வுத்தேசம்? அந்த அம்மாள் உங்களுக்கு உறவினரா? அல்லது உங்களுக்கு அந்த அம்மாளிடத்தில் ஏதாவது உத்தியோகமுண்டா" என்று கேட்டார். இவர் கேட்ட எல்லாக் கேள்விகளுக்கும் பதில் சொல்ல முடியாமல், "நான் ஸ்தல யாத்திரையாக வந்தேன்; வந்தவிடத்தில் தங்களைப்பற்றிக் கேள்விப்பட்டேன்; தங்களிடத்தில் இந்த விஷயத்தைச் சொல்லலாமென்று சொல்லிவிட்டேன்; நீங்கள் சொல்லுகிறபடி எவரும் வீணான காரியத்துக்கு வேலை செய்யமாட்டார்கள்; அவரவர்களும் சொந்தபிரயோஜனத்தை யுத்தேசிப்பார்களேயன்றிப் பரோபகாரத்தைக் கவனியார்கள்; அந்தப்பெண்ணைக் கலியாணஞ் செய்கிறவர்களுக்கு ஐம்பது லட்சத்துக்குமேல் கிடைக்குமல்லவா? அவர்கள் ஒரு லட்சத்துக்கு மேற்கொண்ட தொகை முன்னால் சொல்லிவிட்டுத்தான் காரியமுடிக்கவேண்டும்; அந்த அம்மாவீட்டில் அநேக பிடாந்திகளிருக்கிறார்கள்; நாய்களுக்குத் தேங்காய்க்கீற்று போடுவதுபோல் ஏதாவது கொடுத்துத்தான் தீரவேண்டும்.

பெண்பிள்ளைகளுக்குச் சபலபுத்தியாகையால் யார்யெதுசொன்னு லுங்கேட்பார்கள்; எல்லோரையுங் கட்டிக்கொள்ளத்தான்வேண்டு ம்;"பெண்ணுக்குப்போகிறவர்கள்பொன்னுக்குப்பின்தாங்கலாமா? எல்லாக்காரியமும் பணத்தின்மேலதானிருக்கிறது" என்று சொன்னார். இந்தப்பெண்ணுக்கு ஐம்பது லட்சத்துக்குமேல் சொத்துக்களிரு ப்பதால் ஒருலட்சமாவது செலவிட்டு விவாகஞ் செய்யலா மென் றதைக்கேட்ட டோனேஜி "தனக்கு ஒரு லட்சத்துக்குத் தானே சொத்துக்களிருக்கிறது; அது முழுவதும் எவ்விதஞ் செலவிட முடியும்; தெய்வகதியாகக் கலியாண முடியாமல் நின்றுவிட் டால் "வாய்த்தவிடும்போய் எரிந்த நெருப்பும் அவிந்துபோயி ற்று" என்ற பழமொழிபோல் நம்முடைய சொத்தெல்லாமழிந்து விட்டால் என்ன செய்கிறது; பணஞ் செலவழிக்காவிட்டால் எந்த வார்த்தையும் பேசமுடியாதென்றுந் தெரிகிறது; இதற்கென்ன செய்யலாம்; இருபது இருபத்தையாயிர ரூபாய் போனுற்போ கிறது; செலவழித்துப் பார்ப்போம்; ஜாஸ்திதொகை கேட்டால் நம்முடைய சொத்தின் பேரிலாவது எழுதிக் கொடுப்போமெனத் தீர்மானித்து, அந்தத்தரகரைப் பார்த்து, அந்தப்பெண் அங்க வீனமில்லாமலும் நற்குண நற்செய்கைக ளுடையவளாகவு மிருக் கும் பட்சத்தில் நான் விவாகஞ் செய்துகொள்ளுகிறேன். எனக்கு ஜாஸ்தி சொத்துக்களில்லை; உயர்ந்த தொகை இருபத்தையா யிரஞ் செலவிடலாம்; வேறே ரொக்கங்கிடையாது; ஸ்தாவர சொ த்துக்களும் ஜாஸ்தியாகவில்லை; காரியமுடிந்த பின்புதான் அல் லாவது கலியாணம் நிச்சயமானபின்புதான் இத்தொகை கொடுப் பேன்; இதற்கு இஷ்டமிருந்தால் அவிடம்போய் யார்யாரைக் கொண்டு அந்த அம்மாவுக்குச் சொல்லவேண்டுமோ அவரவர் களைக்கொண்டு சொல்லும்படி செய்யுங்கள்; அந்த அம்மாளுக்கு மனம்பிடித்து என்னை நேரில்பார்க்கவேண்டுமென்ற அபிப்பிராய மிருந்தாலும் எனக்குக் கடிதம்போடுங்கள்; நான்வந்து தங்களைப் பார்க்கிறேன் என்றுசொல்ல; தர்மதாஸ் நீங்கள் சொல்கிறபடி இரு பத்தையாயிர ரூபாயில் முடியாது; ஐம்பதுக்குக் குறைந்து எந்தக்காரியமு முடியாது; நீங்கள் சொன்ன தொகைபோக பாக் கிக்குநோட்டாவது எழுதிக் கொடுக்கவேண்டும்; எல்லோருக்கும் ஒருவித வுற்சாக மிருந்தால்தானே காரியமுடியும்; நீங்கள் அந் தப்படிச் செய்யத்தான் வேண்டும்; நான் இன்றையதினமே போய் காரியத்தைச் சீட்டுத் தெரிவிக்கிறேன்; அந்த அம்மாளிடத்தில்

இரண்டுபேர் பரிசாரகர்களிருக்கிறார்கள்; அவர்களுக்கு ஏதாவது கொடுத்தால்தான் அந்த அம்மாளிடம் பேட்டி செய்துவைப்பார்கள்; அவர்களுக்கும் ஏஜெண்டு சுரேந்திரனாத்பானர்ஜிக்கும் ஏதாவது தொலைக்கவேண்டும்; என்கையில் பணமில்லை; அச்செலவுகளுக்கு இருநூறு ரூபாயாவதுவேண்டும் எனக்கேட்டார். டோணேஜி உடனே தன் பெட்டியைத்திறந்து நூறுரூபாய் நோட்டொன்றை யெடுத்துக்கொடுத்து "இதுதான் என்கையி லிருக்கிறது! இதை வைத்துக்கொண்டு செலவுசெய்யுங்கள்; தங்கள் கடிதம் பார்த்தவுடன் ஜாஸ்தித்தொகையுடன் வந்து தங்களைப் பார்க்கிறே னென்று சொல்லித் தர்மதாசை யனுப்பிவிட்டார்.

இந்தத் தாசர் தான் குறிப்பிட்டுப்போன காரியம் நிறைவேறிவிடு மென்ற நம்பிக்கையின்பேரில் ஹரிநாத்வீட்டுக்கு வந்து தான் கண்டுபேசிய டிப்டிகலெக்டர் டோணேஜியுடைய யோக்கியதை முதலியவற்றைப்பற்றியும், அவர்கொடுப்பதாக ஒப்புக்கொண்ட தொகையைப் பற்றியுஞ் சொன்னார். தர்மதாஸ் கண்டு பேசியவர் ஜட்ஜியா யிருப்பதால் பொறுமை யுடையவராகத்தா னிருப்பார்; தன்தமக்கைக்குச் சொல்லி முடிவு செய்துவிடலாமென்று ஹரிநாத் மகதேவியின் வீட்டிற்குள் சென்று டிப்டிகலெக்டரின் பாலியம், அழகு, குணமுதலியவற்றைப்பற்றி விசேஷமாக வர்ணித்துச் சொல்ல, அவள் கலெக்டரை இவிடம் வரும்படி எழுதுங்கள்; நான் நேரில்பார்த்துப் பேசிமுடிவு சொல்லிவிடுகிறேனென்றாள். இதைக்கேட்ட ஹரிநாத் டிப்டிகலெக்டரை யிவிடம் வரும்படி எழுதவேண்டுமென்று தர்மதாசுக்குத் தெரிவிக்க, அவரந்தப்படிக் கடிதமெழுதிவிட்டார்.

இக்கடிதம் பார்த்தவுடன் டோணேஜி, கலெக்டரிடம் நாலுதினங்களுக்கு ரஜாவாங்கிக்கொண்டு காசிப்பட்டணம்வந்து தர்மதாசைப் பார்த்தார். இவர் டிப்டிகலெக்டருக்கு மிகுந்தவுபசாரஞ் சொல்லித் தன்வீட்டிலிருக்கச்செய்து ஹரிநாத்திடம் விஷயங்களைத்தெரிவித்தார்; அவர்தான் மகதேவியின் வீட்டுக்கு முன்னதாகப் போய் அந்த அம்மாவுக்குத் தெரிவிப்பதாகவும், டிப்டிகலெக்டரை யவ்விட மழைத்துக்கொண்டு வரும்படிக்குந் தாசரிடஞ் சொன்னார். அந்தப்படியே தர்மதாஸ் டிப்டிகலெக்டருக்குக் போஜனஞ் செய்வித்துப்பிட்டன்கொண்டுவரச்செய்து அதில் இருவரு மேறிக்கொண்டு மகதேவி வீட்டுக்குச்சென்றார்கள். இவர்கள் வாவை

பெதிர் பார்த்திருந்த ஹறிநாத் இவர்களை இரண்டாவது மாடிக்கு அழைத்துப்போய் சோபாவில் உட்காரச்செய்துவிட்டு இவர்வந்திருக்கிற விபரத்தைத் தன்தமக்கைக்கு அறிவித்தார். அவள் வழக்கம்போல் அம்மாடியில் திரைகட்டச்செய்து அத்திரைக்கப்பாலுட்கார்ந்துகொண்டு தன்தம்பியிடம் காதுடன் சொல்லி டிப்டி கலெக்டரை அடியிற்கண்ட கேள்விகள் கேட்டாள்.

ஹறிநாத்:—தங்களுக்கு ஜனனபூமியெது? தங்கள் கோத்திரமென்ன? தங்களுக்கு எவ்வளவு சொத்துக்களிருக்கின்றன?

டோனேஜி:— எங்களுக்கு பூர்விகம் டில்லிநகரம்; எங்களுக்கு சத்தியகோத்திரம்; எங்களுக்கு பூஸ்திதிகள் ஒருலட்சத்துக்கிருக்கின்றன.

ஹறிநாத்:—தங்களுக்குள்ள இந்த வேலையில் எவ்வளவு காலமிருக்கச் சம்மதம்; இந்தவேலையில் எவ்வளவு ரூபாய் வரையில் சம்பள முயரும்?

டோனேஜி:—என்னுயுள் பரியந்தம் இந்த வேலையிலேயேயிருக்கச் சம்மதம்; இந்தவேலையில் ரூ 600வரையில் சம்பளமிருக்கிறது; சர்வீஸ் ஜாஸ்தியானல் சம்பளமுயரும்.

ஹறிநாத்:—இதேவிதச் சம்பளம் பெற்றுக்கொண்டு ஒருவர் குடும்பத்துக்கு மானேஜராக வேலைபார்க்க முடியுமா? இந்தக் கேள்வி இன்ன காரணத்துக்காகக் கேட்கப்பட்டதென்பதைத் தெரிந்துகொண்டு டோனேஜி "ஒருகுடும்பத்தாரை நம்பி வேலைபார்க்கப்போனல் அவர்களிஷ்டப்படித்தானே வேலைபார்க்கவேண்டும்; அவர்கள் வேலைபார்க்கவேண்டாமென்றுசொன்னல், விட்டுக்குப் போகவேண்டியதுதானே. கவர்ன்மெண்டு வேலை யப்படிக்கல்ல; இராஜாத்திவரையில் அப்பீலுண்டு; ஒருவரை யகாரணமாகத் தள்ளமுடியாது; குடும்பத்தில் வேலைபார்க்க வேண்டுமானல் சர்க்கார் சம்பளத்தைப் பார்க்கிலும் இரண்டுமடங்கு ஜாஸ்தியான சம்பளம்வாங்கவேண்டியதுடன் இருபது வருடங்களுக்குக் குறையாமல் தகுந்த சம்பளங் கொடுத்து வரவேண்டியதென்றும் அவ்விதங் கொடாவிட்டால் அன்னஷ்டங்களுக்குப் பாத்தியப்படுகிறதென்றும் தகுந்ததஸ்தாவேஜி முடிந்துக்கொண்டு வேலைபார்க்கலாம்" என்று சொன்னர்.

ஹரிநாத்:—நீங்கள் எவ்வித நிபந்தனைகள் கேட்கிறீர்களோ அதேவித நிபந்தனைகள் அந்தக் குடும்பத்தார்களுங் கேட்பார்களல்லவா? உங்களாலாவது உங்கள் சிப்பந்திகளாலாவது குடும்பச் சொத்துக்களுக்கு ஒருவித நஷ்டங் கெடுதிமுதலியன வந்தால் அவைகளுக்கு நீங்களே ஜவாப்தாரியாவீர்களென்றும், உங்களை வேலையினின்றும் தள்ளும்படி செய்து விடலாமென்றும் உங்களிடம் உடன்படிக்கை கேட்பார்களல்லவா? தெய்வ கெதியாக அவ்விதம் நேரும்பட்சத்தில் உங்களுக்கு பெருத்த நஷ்டமும் வியாகூலமு முண்டாகுமே அதற்கென்ன செய்வீர்கள்?

டோஜோஜி:—என்னைப் போன்றவர்கள் அவ்விதப் பிசகுகள் எந்தக்காரணங்களை முன்னிட்டுஞ் செய்யார்கள்; சிப்பந்திகளாலவ்விதப் பிசகுகள் நேர்ந்தால் அந்நஷ்டங்களை யவர்களிடம் வசூலிக்கும்படியான வேற்பாடுகள் செய்துகொண்டுதா னவர்களை வேலையில் நியமிப்பார்கள்.

இவ்விதம் டிப்டிகலெக்டர் மிகுந்த சாமர்த்தியமாகச் சொன்ன ஜவாப்புகளைக் கேட்டு மகதேவியம்மாள் மிகச்சந்தோஷித்தும், இவருடைய பாலியத்தையும் அழகையுங் கண்ணுற்றும், இவர் நம்முடைய குடும்பத்தைப் பார்க்கும்படி செய்யலாம்; இவரைப் போல் குணசாலியானவர் கிடைப்பது அரிது; இவருடைய விஷயங்களைச் சுகதேவிக்கு அறிவித்து அவளுடைய அபிப்பிராயங்களைத் தெரிந்துகொண்டு பதில் சொல்லவேண்டுமென நினைத்து, அந்த டிப்டிகலெக்டரை நாலுதினங் கழித்துவரும்படி செய்ய வேண்டுமென்று தன் சகோதரிடஞ் சொன்னாள். ஹரிநாத் அந்தப்படி டிப்டிகலெக்டருக்குச் சொன்னவுடன் அவர் அடுத்த ஞாயிற்றுக்கிழமை தினம் வந்துபார்ப்பதாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டார்

அன்றைய தினம் அஸ்தமிக்க நாலுநாழிகைப் பொழுதிருக்கும் போது அநந்தியம்மாள் மகதேவிவீட்டுக்கு வந்தவுடன் இவளை மகதேவி தனிமையி லழைத்துப்போய் டோஜோஜியின் உத்தியோகம் குணநிசயம் பாலியம் அழகு முதலியவற்றைப் பற்றி அவளுக்கு விபரமா யெடுத்துச்சொல்லி, சுகதேவியின் சம்மதியை யறிந்து தனக்குத் தெரிவிக்கும்படிச் சொன்னாள். அநந்தி அந்தப்படியே தெரிவிப்பதாகச் சொல்லி சுகதேவியிடம் வந்து அவள் தாயார் சொன்ன விஷயத்தைச் சொன்னாள்?

சுகதேவி:—நம்முடைய குடும்பக் காரியங்களைப் பார்ப்பதற்குத் தகுந்தவரென்று பொறுக்கி யெடுத்திருக்கிறார்களோ! இவரை மாமா நிறம்ப சிரமப்பட்டு அழைத்துவந் திருக்கலா மென்று தோன்றுகிறது.

அநந்தி:—எப்படியிருந்தால் உனக்கென்ன; அவருக்கு வாழ்க்கைப்பட உனக்கு இஷ்டமா? இல்லையா? இரண்டி லொன்று சொல்லு.

சுகதேவி:—அவர்களுக்காக வேண்டிய விஷயங்களை அவர்கள் விசாரித்துக் கொண்டார்கள்; அதுபோல் எனக்காக வேண்டிய விஷயங்களைப்பற்றி நான் தெரிந்துகொள்ள வேண்டாமா?

அநந்தி:—உனக்கென்னென்ன விஷயந் தெரிந்து கொள்ள வேண்டும்.

சுகதேவி:—எங்கள் குடும்பச் சொத்தினின்றும் ஒரு பைசா வேனும் அவர்கள் அபேக்ஷிக்கக் கூடாது; எங்கள் சொத்துக்களைப் பரிபாலித்துவர எங்களுக்கிருக்கும் சாமர்த்தியம் போதுமானது. அதை யவர்களிட மொப்பிவித்துவிட்டு வரவு செலவுகளுக்கு அவர்களைக் கணக்குக் கேட்டுக்கொண்டிருக்க முடியாது; அவர்கள் ஒழுங்காக நமக்கு யாதொரு பதிலுஞ் சொல்லார்கள்; நம்முடைய வேலைக்காரராக நினைத்துக் கண்டித்து வேலைவாங்க முடியாது; அப்படிக் கண்டித்தால் கையிலகப்பட்டதை யெடுத்துக்கொண்டுபோய் விடுவார்கள்; ஒருவரிடத்தில் வேலை பார்ப்பவர்கள் ஒருவருக்குப் பயந்தாவது விசுவாசத்தின் பேரிலாவது வேலை பார்க்கவேண்டும்; இவர்களிடத்தி லிந்த விரண்டு விஷயமு மிராது; மிகுந்த மனஸ்தாபங்கள் நேரும்.

அநந்தி:—நீ சொல்வது உண்மைதான்; ஒரு துரும்பைக் கிள்ளிப்போட்டு மாப்பிள்ளை யென்று சொல்லிவிட்டால் அது சற்று நேரந் துள்ளித் துள்ளிக் குதித்து விறப்பாகத்தா னிருக்கும்.

சுகதேவி:—அந்த விறப்புக்காக நான் சொல்லவரவில்லை; நம்முடைய சொத்துக்கள் அவர்கள் கையில் சிக்கிக்கொண்டால் நம்மை அவர்க ளடிமையாகவே பாவித்து வேலை வாங்குவார்கள்; நாமேதாவது தடுத்துச் சொன்னால் பெண்பிள்ளைகளா நமக்குப் புத்தி கற்பிக்கிற தென்று கோபித்துக்கொண்டு வேறு விவாகஞ் செய்தாலுஞ் செய்வார்கள்.

அநந்தி:—அவர் உன் குடும்பக்காரியமே பார்க்கவேண்டாம்; அவருக்குத்தான் தருந்த உத்தியோகமிருக்கிறதே; நீ யாதொன் றும் அவருக்குக் கொடுக்க வேண்டாம்; அவருக்கு மாத மாதங் கிடைக்கிற சம்பள முதலியவற்றை உன்னிடங் கொடுத்துவிடச் சொல்லுகிறேன்; நீ அவருடைய குடும்ப வேலையைப்பார்; அதற் காகத் தனிமையில் சம்பளம் வேண்டுமென்று லதைக்கொடுக்கும் படிச் செய்கிறேன்.

சுகதேவி:—அவருடைய சொத்தை எனக்குக் கொடுக்கவும் வேண்டாம்; என்னுடைய சொத்துக்களை அவருக்குக் கொடுக்க வேண்டிய அவசியமுமில்லை.

அநந்தி:—அவரைக் கலியாணஞ் செய்து கொள்வதில் உனக் கென்ன ஆக்ஷேபணை யிருக்கிறது? அதைச்சொல்லாமல் கதை யெல்லாம் பேசுகிறாயே?

சுகதேவி:—அவருடைய தற்கால உத்தியோகத்திற்கும் நான் குடித்தனஞ்செய்வதற்குங் கொஞ்சமேனு மொற்றுமையில்லை.

அநந்தி:—எதனால் ஒற்றுமையில்லை யென்று சொல்லுகிறாய்?

சுகதேவி:—அவருடைய உத்தியோகம் விக்கிரமாதித்தன் வாழ்ந்ததுபோல் காடாறுமாதம் வீடாறுமாதமிருக்க வேண்டும்; ஆதலால், அவர் இல்லறவாழ்க்கைக் குரிய நாயகனாகமாட்டார்.

அநந்தி:—வெளியிற் போய்ச் சுற்றும் வேலையில்லாமல் ஸ்தி ரமா யொரு விட்டிலிருந்துகொண்டு தருந்த சம்பளம் பெற்றுச் சர்க்கார் உத்தியோகஞ் செய்பவர் தேவையா?

சுகதேவி:—சர்க்கார் உத்தியோகம் மிகச் சிறந்ததென்று நினைக்கிறீர்களா?

அநந்தி:—எல்லோருடைய அபிப்பிராயமு மப்படித்தா னிருக் கின்றது.

சுகதேவி:—இந்த மானிட ஜென்மத்திற்கும் மிருகாதிகளுக்கு முள்ள வித்தியாசமென்ன?

அநந்தி:—மானிடர்களுக்குப் பகுத்தறிவு உண்டு; மற்றவைக ளுக் கஃதில்லை.

சுகதேவி:—அப்பகுத்தறிவால் நாம்செய்யக் கடமைப்பட்ட முக்கியவிஷயம் யாது?

அநந்தி;—நாம் செய்யுங்காரிய மொவ்வொன்றிலும் பாவமானவை யின்னவையென்றறிந்து அவைகளை யொழித்துப் புண்ணியமானவற்றைச் செய்வதே பகுத்தறிவென்று சொல்லவேண்டும்.

சுகதேவி:—மானிடர்கள் இச்சென்மத்திற் செய்யவேண்டிய மிகுந்த புண்ணியமான காரியங்கள்யாவை?

அநந்தி:—இல்லற தருமங்களைச் சரிவர நடத்தி இவ்வுலகத்தில் அனுபவிக்கவேண்டிய சுகங்களை யனுபவித்துப் பரலோக சாதகங்களுக்குரிய மார்க்கங்களை யனுசரிக்கவேண்டியதே மிகுந்த புண்ணியம்.

சுகதேவி:—இல்லறதருமங்களை நடத்துவதெப்படி? பரலோக சாதகங்களைத் தேடுவதெவ்விதம்?

அநந்தி:—தான தருமங்களைச் செய்வதும், ஈஸ்வரபக்தி செய்வதுந் தான்.

சுகதேவி:—தான தருமங்களென்பன வென்ன? பக்தியென்பதென்ன?

அநந்தி:—எனக்குத் தெரியவில்லை; தெரிந்துக்கொண் டிருக்கிற நீ எனக்குத்தான் கற்பி; நான் நன்றாய்ப் பாடம்பண்ணி ஒப்பிவிக்கிறேன்.

சுகதேவி:—இதுவிஷயந் தெரியாதவர்களை மானிடராக வெண்ணக் கூடாது; வறுமை பிணி இவ்விரண்டுந் துன்பங்களில் பெரிதானவை; வறுமைக்கும் பிணிக்கு மிகுந்த சம்பந்தங்களுண்டு; வறுமை யில்லாவிட்டால் பிணி வாராது; தன் தேகத்தைக் காப்பாற்ற வகைதெரியாமல் புத்திக் குறைவினால் வியாதிகளுண்டாவது முண்டு; அந்த வியாதிக்குத் தகுந்த அவிழுதங்கள் கொடுத்தால் நீங்கிவிடும்; வறுமையில்லாதவர்கள் அவ்வித மருந்துகளைத் தருவித்துத் தங்களுக்குற்ற வியாதிகளை சவுக்கியஞ் செய்துகொள்ளலாம்; வறுமையுள்ளவர்களுக்குப்பிணிவந்தாலென்ன செய்வார்கள்? தகுந்தமருந்து வாங்கிச் சாப்பிடப் பணமில்லாமல் வியாதி மேன்மேலு மதிகரித்துக் கொன்றுவிடும்; வறுமையால் பீடிக்கப் படுகிறவர்களுக்குக் காலாகாலத்தில் ஆகாரஞ்சாப்பிடச் சவுகரியங்களிருக்கமாட்டா; வசிப்பதற்குச் சுத்தமான காற்றுள்ள விடங் கிடைக்காது; சுகாதாரமுள்ள வீடுகளுங்கிடைக்கா; நல்ல தண்ணீருங் கிடைப்பதரிது; இக் காரணங்களினால்தான் நம் தேசவாசிக

ளுக்கு அகாலமரணங்க ளுண்டாகின்றன; ஐரோப்பியர்கள் அவர்கள் சொந்ததேசத்திலும் அப்படியே வேறிடங்களிலும் தங்கள் திரேகத்தைக் காப்பாற்றுவதற்காக எவ்வளவு சவுகரியங்கள் செய்து கொள்ளுகிறார்கள்; அதுபோல் நம்மவர்களுக்குச் சவுக்கியஞ் செய்து கொள்ளும் படியான புத்தி நுட்பங் கிடையாது; புத்தியிருந்தாலுந் திரவியங்கிடையாது; ஆகையால் நம்மேழை யிந்தியர்களுக்குற்ற வறுமையை நீக்குவதே பெருத்த புண்ணியமென்பது எனது துணிவு.

அநந்தி:—உன்னுடைய புத்தி மிகுந்த தீக்ஷண்ணியமாகத்தானிருக்கிறது; நீ சொல்கிறயோசனை இராஜாக்கள் செய்யவேண்டிய காரியம்; நீயும்நானும் என்னசெய்யக்கூடும்?

சுகதேவி:—இராஜாக்களால்தான் அந்தபுண்ணியஞ் செய்யக்கூடும், மற்றவர்களால் செய்யமுடியாதென்று நினைக்கிறீர்களா? என்ன? இராஜாவென்பவர் யார்? நம்மைப்போன்ற மானிடர்களிலொருவர்தானே! ஒவ்வொருவருஞ் செய்யவேண்டிய தொழிலுக்குத் தக்கவதிகாரங் கொடுக்கப்பட்டிருக்கிறது; எல்லாத்தேசங்களிலும் அரசனிருந்துதானு ஆள்கின்றான்; நம்முடைய தேசத்தைத் திருஷ்டாந்தமாக வெடுத்துச்சொல்வோம்; நம்முடைய தேசம் ஆறாயிர மேழாயிர மயிலுக்கப்பால் லண்டன்மானகரினுள்ள மாது ஸ்ரீவிக்டோரியா மகாராணியவர்களாலாளப்படுகிறது; அவர்களுக்கு இப் பூமண்டலத்திலுள்ள தேசங்களைக் கணக்கிட்டுச் சொல்வோமானல் ருஷியாச் சக்ரவர்த்திக்கு இரண்டாவதாகச் சொல்லலாம்; அவர்களுக்கு27மந்திரிகளிருக்கிறார்கள்; இவ்விந்தியாவும் இன்னுமிரண்டொரு தேசம் நீங்கலாக மற்றெல்லாத் தேசங்களிலும் அவர்க ளினத்தவர்களும் அவர்கள் மதஸ்தர்களுமாயிருக்கிறார்கள்; நம்முடையதேசமோ பலவிதமத பலவிதஜாதிகளையுடைய கண்காட்சிச்சாலை யென்று சொல்லலாம்; நம்முடைய மதாசார குலசார நடவடிக்கைகளைத் தெரிந்துகொள்வது யாவருக்கு மருமையானது; நம்முடைய இந்தியாதேச நடவடிக்கைகளனைவற்றையுங் கவனித்துவர ஒரேமந்திரிதானிருக்கிறார்; மகாராணியவர்கள் தன்னுடைய இராஜாங்க காரியங்களெல்லாம் மேற்சொன்ன 27 மந்திரிகளைக்கொண்டும் பார்லிமெண்டு என்ற சபையார்களைக் கொண்டும் நடத்திவருகிறார்கள்; இராஜாங்கக் காரியங்களில் யுத்தமுதலிய பெருத்தவிஷயங்களில் சிலமுக்கியமானவற்றை

மட்டில் அவர்கள் கவனிக்க சாவகாசமிருக்கும்; மற்றெல்லா விஷயங்களையும் அச்சபையாரும் மந்திரிகளும் தங்களுடைய சொந்த அபிப்பிராயங்களின்படி நடத்தவேண்டியதா யிருக்கிறது. மகாராணியவர்களுக்குச் சந்ததி சொற்பம்ஜாஸ்தியாயேற்பட்டுக்குடும்ப வாழ்க்கையிலுள்ள சுகதுக்கங்களை அனுபவத்தினால் நன்றாய்த் தெரிந்துக்கொண் டிருக்கிறார்கள்; பிரஜைகளிடத்தில் மிகுந்த பச்சாதாபமும் கருணையு முடையவர்கள்; ஜனங்கள் பஞ்சத்தினாலாவது யுத்தத்தினாலாவது இறப்பதாகக் கேழ்விப்பட்டால் அவர்களுக்குண்டாகும் மனத்துன்பங்களை அளவிட்டுச் சொல்லமுடியாது; தன்னுயிர்போல் மன்னுயிரைக் காப்பாற்றுங் கவலை இந்த மாதுசிரோன்மணி யவர்களுக்கு மட்டிலிருக்கின்றது; அவர்களால் எல்லா விஷயங்களையுங் கவனிக்க சாத்தியமில்லையே; நம்முடைய விஷயங்களை அந்த அம்மாளவர்களுக்கு எடுத்துச் சொல்பவர்க ளில்லையே; பார்லிமெண்டு சபையாரவர்கள் சொற்படித்தானே அவர்கள் கேட்கவேண்டி யிருக்கிறது.

அநந்தி:—மற்ற தேசங்கள் பரிபாலிக்கப்பட்டு வருகிறது போல் தானே நம்முடைய தேசமு மாளப்படுகிறது?

சுகதேவி:—அப்படிக்கல்ல; அந்தப் பார்லிமெண்டு சபையார்கள் இங்கிலாந்து, ஸ்காட்லெண்டு, ஐர்லெண்டு சபையார்களில் ஒவ்வோர் வகுப்பு ஜனங்களுங்கூடி தங்களுக்குள் கல்வி அறிவு ஒழுக்க முடையவர்களைத் தேர்ந்தெடுத்துப் பார்லிமெண்டு சபை மெம்பர்களாக நியமிக்கிறார்கள். அதனால் அவர்கள் தங்கள் தங்களினத்தவர்களுக் காகவேண்டிய காரியங்களைச் சரியாய் கவனித்து வருகிறார்கள்.

அநந்தி:—அதைப்போல் நம்மவர்களுக்குள் படித்தவர்களைத் தேர்ந்தெடுத்து அந்தச் சபைக்கு மெம்பர்களாக அனுப்பக்கூடாதோ?

சுகதேவி:—நம்மவர்கள்போய்ச் சேர்ந்துக்கொண்டால்தான் நம் தேசத்துக்கு நன்மை கிடைக்கும்.

அநந்தி:—அந்தப் பார்லிமெண்டு மெம்பர்களுக்கு நம்முடைய நிலைமைகளைத் தெரிவித்துப் பேசும்படியாகச் செய்யக் கூடாதா?

சுகதேவி:—செய்யவேண்டும்; முயற்சிப்பாரில்லை.

அநந்தி:—இந்தியாவின் இராஜாங்கக் காரியங்க ளெப்படித் தான் நடத்தப்படுகிறது?

சுகதேவி:—இந்தியா மந்திரியும் இராஜப் பிரதி நிதியுஞ் சேர்ந்துதான் நம்தேசத்தை யாளுகிறார்கள்.

அநந்தி:—இராஜப் பிரதி நிதியவர்கள் சட்ட நிரூபணச் சபையிலும் கவர்னர்களுடைய சபையிலும் நம்மவர்களி லனேகர் மெம்பர்களாக விருக்கிறார்களே; அவர்கள் நம்முடைய தேச க்ஷேமங் களைப்பற்றி யெடுத்துச் சொல்லமாட்டார்களா?

சுகதேவி:—அவர்க ளெடுத்துச் சொல்லி என்ன பிரயோஜனமாகிறது; அந்த சபையில் வெள்ளைக்கார மெம்பர்கள் ஜாஸ்தியாக விருப்பதால் மெஜாரட்டி அபிப்பிராயப்படித்தானே தீர்மானங்கள் செய்யப்படுகிறது.

அநந்தி:—நம்மவர்களி னபிப்பிராயங்களைக் கலந்துகொண்டு இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்யாததால் நம்மவர்களுக்கு வறுமை நேரிட்டிருக்கிறதென்று சொல்கிறாயா யென்ன? இராஜாங்க விஷயத்துக்கும் வறுமைக்கும் சம்பந்தமென்ன விருக்கிறது? வரிபளுவால் வறுமை ஜாஸ்தியென்று நீ சொல்லலாம்; இராஜாங்கத்தார் விதிக்கும்வரியைத் தடுப்பதற்குக் கூடுமோ? எந்தவரி போட்டாலும் கொடுத்துத் தீரவேண்டியதுதானே?

சுகதேவி:—அரசர் யாராக விருந்தால் நமக்கென்ன? நமக்கு விதிக்கப்பட்ட வரியைக் கொடுக்கக் கடமைப்பட் டிருக்கிறோம்; நம்மவர்களுக்குண்டாகும் வறுமையை நமது இராஜாங்கத்தார் நிவர்த்திக்க முன்வரவேண்டும்.

அநந்தி:—நம்மவர்களில் யாராலாவது அவ்வறுமையை நிவர்த்திக்கமுடியுமா? நம்தேசத்தவர்கள் யாவருக்காவது எந்தத் தொகையாவது இனமாகக் கொடுப்பார்களா? ஏழைகளுக் கெல்லாம் பணக்காரர்கள் தொகைகொடுத் துதவுவதற்குத்தான் இவ்விந்தியாவில் திரவியமேது? பஞ்சத்தி லடிபட்டுச் சாகிறவர்களுக்குக் கஞ்சி கொடுத்துதவக் கூடப் பணமில்லையே?

சுகதேவி:—நம்தேசத்துச் செல்வங்களை விருத்திசெய்வது மன்றி அவைகளைப் பிறரன்னிய தேசத்திற்குக் கொண்டு போகாதபடி காப்பாற்றவும் வேண்டும்.

அநந்தி:—நம்மவர்கள் திரவியங்கள் ஜாஸ்தியாகச் சம்பாதிக்கும்படி யான வழிதுறைகள் யாவை?

சுகதேவி:—நம்முன்னோர்கள் கையாண்டுவந்த கிருஷி, கைத்தொழில், வர்த்தகம் என்னும் இம்மூவகைத் தொழில்களினாற்றான் நாம் ஏராளமான செல்வங்களைத் தேடலாம்; ஐரோப்பியர், அமேரிக்கர், ஜப்பானியர் முதலியவர்கள் இம்மூவகைத் தொழில்களாலு மேராளமாகத் திரவியங்களைச் சம்பாதித்து வருகிறார்கள்.

அநந்தி:—நம் தேசத்தவர்கள் பெரும் பாலும் கிருஷித்தொழில் செய்பவர்கள்தானே? அத்தொழிலினால் மிகுந்த கஷ்டநஷ்டங்க ளிருக்கிறதே? அதனால்தானே நம்மவர்களுக் கெல்லாம் தரித்திரம் தலைகொண்டு விட்டது.

சுகதேவி:—நம் தேசத்தவர்கள் ஆரியர் திராவிடர் என்கிற இரண்டு வகுப்பினர்களல்லவா; அவர்களில் ஆரியர் யாவர் எதற்காக அவர்களுக்கு அந்தப்பெய ருண்டாயிற்று; இவ்விருவர்களுக்குள் யார் எல்லாவற்றினுஞ் சிறந்தவர்கள் தெரியுமா?

அநந்தி:—உன்னைப்போல் பணக்காரியாக விருந்தால் எல்லாம் படித்திருக்கலாம்; எனக்கு வாசிக்க நேரமுமில்லை; புத்தகங்கள் வாங்கப் பணமுமில்லை; அந்த விஷயங்கள் உனக்குத்தான் தெரிந்திருக்கும் சொல்லு.

சுகதேவி:—படிப்புக்குப் பணக்காரி ஏழை யென்பது கிடையாது; கற்கவேண்டுமென்ற கவலையுண்டானால் எவ்விதமாயாவது கற்றுக் கொள்ளலாம்; திராவிடர்கள் தான் இவ்விந்தியா தேசத்துப் பூர்வீககுடிகள்; ஆரியர்கள் பார்சிக தேசத்துக் குடிகள்; இவர்கள் ஆகசஸ் என்னும் நதியின் சமீபத்தில் மேகங்கள் தவழும்படியான பூமியில் கிருஷித்தொழில் செய்துக்கொண் டிருந்தவர்கள்; ஆரிய என்ற பதத்துக்கு கிருஷியென்ற அர்த்தம்; இத்தொழிலையனுசரித்ததால் ஆரியரெனப் பெயர்பெற்றார்கள்; இவர்கள் மிகுந்த முயற்சியுந் தயிரியமுமுள்ளவர்கள்; ஜனத்தொகை விரித்ததின்பேரில் சிலர் ஐரோப்பா தேசத்தைச் சேர்ந்து ஐரோப்பியர்களானார்கள்; கிழக்கே பிரிந்துபோனவர்கள் இந்தியாவுக்கு வந்து இந்தியரானார்கள்.

அநந்தி:—ஐரோப்பியர்களும் இந்துக்களும் ஒரு ஜாதியர்களா? தாயாதிகளா? அப்படியிருந்தால் அவர்கள் வெள்ளையா

யிருப்பானேன்? இவர்கள் செவப்பும் கருப்புமாக விருப்பானேன்? வித்தியாசத்துக்குக் காரணமென்ன?

சுகதேவி:—இருக்கு வேதம் முதலாவது அஷ்டகம் 7 வது அத்தியாயம் 11 வது வருக்கையை நீங்கள் வாசித்துப்பாருங்கள்; அதில் இந்திரன் சுதேசகண்டகர்களை அதஞ் செய்து அவர்கள் புலங்களை வெண்மை நிறமுள்ள நண்பர்களுக்குப் பாகித்துக் கொடுத்தான் என்று எழுதப்பட்டிருக்கிறது; இதனால் இந்த ஆரியர்களும் ஆதியில் வெண்ணிற முடையவர்களாகத்தா னிருந்தார்கள்; இந்தியாதேசம் சீதோஷ்ணமான தேசமாதலால் அவரவர்கள் வசிக்குமிடங்களுக்குத் தக்கப்படிச் செவப்புங் கருப்புமாக விருக்கிறார்கள்; நம்தேசத்தில் கருப்புநிறமுள்ளவர்களைக் காண்பதரிது; தென்தேசங்களில் மிகஜாஸ்தியாயிருக்கிறார்கள்.

அநந்தி:—வடமேற்கி லிருந்து வருகிறவர்கள்தான் இவ்விந்தியாதேசத்தை யாளவேண்டு மென்று சாஸ்திரங்க ளேற்பட்டிருக்கிறாப்போல் தோன்றுகிறது; ஆரியர்கள் வடமேற்கி லிருந்து வந்ததால் அவர்கள் ஜெனன பூமிக்கு வடமேற்கே யிருந்த ஆங்கிலேயர் இவ்வாரியர் தேசத்தைக் கைக்கொண்டு ஆளவேண்டியது சகஜந்தானே?

சுகதேவி:—தயாதிகளின் பாத்தியதைகளை யனுசரித்துத்தான் வந்திருக்கிறார்கள்; இவர்கள்பூர்வகாலத்தி லொன்றாயிருந்தபோது கிருஷித் தொழிலினால் மட்டில் சகலசெல்வங்களையும் பெற்றார்கள்; "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந் தொழுதுண்டு பின் செல்பவர்" என்றபடி கிருஷித்தொழிலே மிகச்சிறந்தது; மானிடர்களுக்குத் தாய்தந்தை யாவரெனின் ஜெகத்கர்த்தாவாகிய ஸ்ரீமன் நாராயணன் நமக்குத் தந்தை; அவர் பாரிகள் பூதேவி ஸ்ரீதேவி இருவரும் நமக்குத் தாயார்; அந்தப் பூதேவியாகிய பூமாதேவி தான் நமக்கு அன்ன மாகாரங் கொடுத்து வளர்ப்பவள்; அவள் தங்கை ஸ்ரீதேவி மற்றச் செல்வங்களைக்கொடுத்து ரக்ஷிப்பவள்; நம்முடைய தாயிடத்தில்தான் நாம் மிகுந்த அன்பும் பிரியமு முடையவர்களாயிருக்கவேண்டும்; நாம் நம்முடைய தாயிடத்தில் மிகுந்த பற்றுதலா யிருப்பதற்குத்தான் தேசபக்தியென்று பெயர்; இத்தேசபக்தியுடையவர்களே மானிடர்களிற் சிறந்தோராவார்.

அநந்தி:—கிருஷித் தொழிலைக்கொண்டு ஜீவிப்பவர்கள்தான் தேசபக்தர்களென்ச் சொல்கிறீர்?

சுகதேவி:—கிருஷித்தொழில் செய்பவர்கள் நம்தாய்க்குமூத்த பிள்ளை; நம்தேசத்தி லுற்பத்தியாகும் இயற்கைப் பொருள்களை செயற்கைப் பொருள்க ளாக்குகிறவர்கள்; அஃதாவது கைத்தொழில் செய்பவர்கள் இரண்டாவதுபிள்ளை; இயற்கைப் பொருள்களையும், செயற்கைப் பொருள்களையும் வாங்கிவிற்று ஜீவிப்பவர்கள் மூன்றாவதுபிள்ளை; இம்மூவகைத் தொழில்தவிர வேறெத் தொழில்களையு மனுசரித்து ஜீவிக்காதிருப்பதுடன் நம்தேசச் சாமான்கள், நம்தேசத்து விளைபொருள்கள் இவைகளையே வாங்கவேண்டும்; பரதேசச் சாமான்களை வாங்கக்கூடாது; நம்தேசத்துத் திரவியங்களை அன்னியதேசத்தவர்கள் கொண்டுபோகும்படி இடங்கொடுக்கக்கூடாது என்றவைராக்கிய முடையவரா யிருப்பதுடன் நம்மவர்கள் அவ்விதமே செய்யும்படிப் போதித்து வருபவர்கள் தேசபக்தர்களெனச் சொல்லப்படுவார்கள்.

அநந்தி:—இத்தேச பக்தர்களால் நம்மவர்களுக் கென்ன நன்மை கிடைக்கும்?

சுகதேவி:—அன்னிய நாட்டு வர்த்தகர்கள் தளுக்கு மினுக்குள்ள சாமான்களை நம்தேசத்தவர்களிடம் விற்று வருடம் 1 க்கு 70 கோடி 80 கோடி ரூபாய்கள் நம்மேழை யிந்தியர்களிடமிருந்து கொண்டு போவது நின்றுபோய்விடும்; அத்திரவியங்கள் நம்முடைய தேசத்திற் றங்கும் பட்சத்தில் நம்தேசத்தவர்களுக்குற்ற வறுமை நோய் நீங்குமல்லவா?

அநந்தி:—பணக்காரர்களுக்கு மென்மேலுந் திறவியங்கள் விருத்தியாகும்; ஏழைகளுக்கு எந்த விதத்தில் நன்மை யுண்டாகும்?

சுகதேவி:—திரவியங்களை யாராவது சேர்த்துவைத்துப் பூஜிப்பார்களா? குறைந்த வட்டிக்காவது கொடுத்து விருத்தி செய்வார்களா? இப்போது ஒருவட்டி இரண்டு வட்டியாக விருக்கிற பணம் ஐரோப்பாவைப் போல் கால்வட்டிக்கு வந்துவிடும்; மிகுந்த ஏழைகளும் கடன்வாங்கித் தொழில்களைச் செய்து தக்கதிரவியங்களைச் சம்பாதிப்பார்கள்; கூட்டுபங்குகள் சேர்ந்து ஐரோப்பியர், அமெரிக்கர்களைப் போல் பெரிய கம்பெனிக ளேற்படுத்தித் தொழில் செய்வார்கள்; நம்தேசத்தில் பஞ்சமாவது கொடிய வியாதிகளாவது நம்மவர்களுக்கு எவ்வித துன்பங்களையுஞ் செய்யாது.

அநந்தி:—மேற்சொன்ன மூவகைத் தொழில் செய்பவர்கள் தான் தேசபக்தர்கள்; அவர்கள்தான் நல்வழியிற் பணஞ்சம்பாதிப்பவர்கள்; மற்றவர்களெல்லாங் கெட்ட வழிகளிற் பொருள் சம்பாதிப்பவர்கள்; இந்த டிப்டிகலெக்டரும் அதில் சேர்ந்தவரென்று சொல்லுகிறாயா என்ன?

சுகதேவி:—அதற்கென்ன ஆக்ஷேபனை! சர்க்கார் உத்தியோகஞ் செய்பவர்கள் பாபத் தொழில்களைத்தான் செய்யவேண்டியிருக்கும்.

அநந்தி:—அதெப்படி? எந்த ஆதாரத்தைக்கொண்டு அவர்கள் பாவஞ் செய்கிறார்களென்று சொல்லுகிறாய்?

சுகதேவி:—ஆங்கிலேயர் நம்மை யெவ்வித மாளுகிறார்களென்பதை யேற்கனவே சொன்னேனல்லவா? அவர்களின் நன்மைக்காகவே நம்தேசத்தை யாளுகிறார்கள்; நம்தேசத்தவர்களின் பூர்விகத் தொழில்களெல்லாம் நசித்துக்கொண்டே வருகின்றன; அவர்களினத்தவர்களுக்கு வியாபாரத் தொழிலால் மிகுந்த லாபங் கிடைத்து வருவதைத்தடுக்க ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள் முன் வருவார்களா? அவ்வுத்தியோகஸ்தர்கள் சொற்படித்தானே நம்தேச உத்தியோகஸ்தர்கள் நடக்கவேண்டியதாக விருக்கிறது. அப்படி நடப்பது நம் தேசத்தவர்களின் நன்மைகளுக்கு விரோதமான காரியமல்லவா? இவர்கள் சுதேசத் துரோகிகளாகிறார்களல்லவா?

அநந்தி:—இந்த டிப்டிகலெக்டரைச் சர்க்கார் உத்தியோகத்தை விட்டு விடும்படிக்கும், நீ சொன்ன மூவகைத் தொழில்களிலெந்தத்தொழிலையாவது செய்து ஜீவிக்கும்படிக்குஞ் செய்து விடுகிறேன்; அவ்விதஞ் செய்யும்பட்சத்தில் இவரை உனக்கு விவாகஞ்செய்துகொள்ள இஷ்டமா இல்லையா?

சுகதேவி:—இவர் அதிபாலியமுதல் இங்கிலீஷ் படிக்கத் தொடங்கி அப்படிப்புள்ளவர்களிடத்திலேயே சம்பாஷித்து ஆங்கிலேயர் நடையுடை முதலியனவற்றை யனுசரித்து நடப்பார்கள்; அவர்கள் புத்தியை மாற்றுவது எவ்விதத்திலும் சாத்தியமானதல்ல; அவர்களுக்கு நம் தேசத்தவர்களின் தொழில்களின்னதெனத்தெரியாது; நம்மவர்களிடத்தில் நன்றாய்ப்பேசி அவர்களின் வழக்கங்களையாவது வார்த்தைகளை யாவது தெரிந்துகொள்ள முடியாது; இவர் உத்தியோகத்திலிருந்தும் இந்த உத்தியோ

கம் பெருமல் பெரிய பரீட்சை கொடுத்து இந்த உத்தியோகத்தி லமர்ந்திருப்பதால் இவருடைய வேலையே இவருக்கு சரியாகப் பார்க்கத் தெரியாதென்று நினைக்கிறேன்; இவருத்தியோகஞ் செய்வது உடப்பு அடைக்கக் குதிரையை விடச்சொன்னதுபோல் முடியுமென்று நினைக்கிறேன்.

அநந்தி:—அஃதென்னகதையா? உண்மையில் நடந்ததா?

சுகதேவி:—உண்மையில் நடந்த விஷயந்தான்; தென்னிந்தியாவி லொருவர் சீமைக்குப்போய் சிவில்சர்விஸ் பரீட்சை கொடுத்துவிட்டு வந்தவுடன் அவருக்கு அஸிஸ்டெண்டு கலெக்டர் வேலை கொடுத்து ரெவனியுவேலை கற்றுக்கொள்ளும்படி ஒரு டிப்டிதாசில்தார் பிருகா சார்ஜைக் கொடுத்தார்கள்; இவர் அவ்வேலை பார்த்து வரும்போது சில கிராமங்களில் ஆறுகள் உடப்பெடுத்து நிலங்களுக்குக் கெடுதிக ளேற்பட்டதென்று கிராமஉத்தியோகஸ்தர்களிடமிருந்து ரிபோர்ட்டுகள்வந்தன; அவ்வேலை மிகுந்த அவசரமாகப் பார்க்கவேண்டிய தவசியமாகையால் இவருடனே தன் குதிரையிலேறிக்கொண்டு உடப்புள்ள விடத்துக்குச் சென்றார்கள்; இவர் வருவதற்குமுன் கிராமப் பெரியதனக்காரர் முதலியவர்கள் அவ்வொடப்பில் பெரும்பாகமடைந்து விட்டதால் இந்த கலெக்டரிடஞ் சென்று மூன்று குதிரைகள் விட்டு உடப்பை யனேகமா யடைத்துவிட்டோம்; எஜமாங்கள் சற்றே யிறங்கி யிளப்பாருங்கள்; ஒருகுதிரைதான் பாக்கிவிட வேண்டியிருக்கிறது; அதை யொருநிமிஷத்தில் விட்டு அடைத்தபின் எஜமாங்களுக்குத் தெரிவிக்கிறோம்; அந்த உடப்பு அடைத்ததைப் பார்த்துவிட்டு எஜமாங்கள் வெயில் படாமல் பெட்டிவண்டியில் திரும்பிப்போய் விடலாமென்றார்கள்; இதைக் கேட்டவுடன் கலெக்டருக்குப் பெருத்த சந்தேக முண்டாய்விட்டது; குதிரையை விட்டு கீழேயிறங்கிச் சற்றே யிளைப்பாரு! பாக்கி யொரு குதிரையும் விட்டு உடப்பு அடைத்து விடுகிறோம்! போகும்போது பெட்டிவண்டியிற் போகலாமென்கிறார்களே! குதிரையை விட்டு இறங்கினால் குதிரை நம்முடையதல்ல; கொண்டுபோய் உடப்பில் தள்ளிவிடுவார்களே! மூன்னூறு ரூபாய் கொட்டிக்கொடுத்து வாங்கி ஒருமாதங்கூட ஆகவில்லையே! இவர்களுக் கென்ன பதில் சொல்லுகிறதென்று பலவீநமாக ஆலோசித்துத் திகைத்தார்; இவர் முகக்குறிப்பினால் மிகுந்த கோபமுடையவராகத் தோற்றியபடியால் கிராமப் பெரியதனக்காரரி லொருவர் இவர் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்

துக்கொண்டு சற்றே இறங்கி இளைப்பாருங்கள்; ஒரு க்ஷணநேரத்தில் அடைத்து விடுகிறோம்; ஒரு குதிரைதான் விடவேண்டிய பாக்கியிருக்கிற தென்றார். இவ்விதம் தன் குதிரைக் கடிவாளத்தைப் பிடித்தவுடன் இவருக்குப் பெருத்த சந்தேகங்க ளுண்டாகித் தன் குதிரையைத் திருப்பி வந்த வழியை நோக்கிச்செல்ல வாரம்பித்தார்; இதைக்கண்ட கிராம உத்தியோகஸ்தர்கள் கலெக்டர் தங்கள் பேரில் மிகுந்த கோபமுடையவரா யிருப்பதாக நினைத்து அவருக்கு எதிரில் சென்று "நாங்கள் மிகுந்த கஷ்டப்பட்டு நேற்றிரவு முழுவதும் கண்விழித்து மூன்று குதிரை விட்டோம்; இன்னும் ஒரு குதிரைதான் பாக்கி; எஜமாங்கள் தயவு செய்து சற்றே இளைப்பாருங்கள்; வெயில் ஜாஸ்தியாக விருப்பதால் பெட்டிவண்டியிற் போகலாம்" என்று பலவாறாக மன்றாடிக் கேட்டுக்கொண்டார்கள். இவர்கள் எதிரில் வந்து குதிரையை மறைத்தவுடன் தன் குதிரையை எந்த விதத்திலாவது கொண்டு போய் விடுவார்க ளென்ற திகிலுண்டாகிச் சொற்பவேகமாய் குதிரையை நடத்தினார். கிராமச்சிப்பந்திகள் முதலியவர்கள் கலெக்டர் தங்கள் பேரில் கோபித்துக்கொண்டு போகிறாரென நினைத்து அக்குதிரையின் பின்னு லோடினார்கள். இவர்க ளோடிவருவதைப் பார்த்த கலெக்டர் தன்குதிரைக்கு உயிர்ச்சேதம் வருமென்று பயந்து அதிவேகமாய் நடத்தித் தன் வீடுவந்து சேர்ந்தார். இவருக்கு ஓடிவந்த களை தீர்ந்தவுடன் தன் குமஸ்தாவொருவரைத் தருவித்து "உடைப்பெடுத்த கிராமத்தின் சிப்பந்திகள் மிகுந்த அயோக்கியர்கள், துஷ்டர்கள்; உடைப்படைப்பதற்கு என்குதிரையைக் கேட்டார்கள்; பலவந்தமாகக் கொண்டுபோகவும் பார்த்தார்கள்; நானோடி வந்துவிட்டேன்; அந்த அயோக்கியர்களை யுடனே டிஸ்மிஸ் செய்யவேண்டும்; உத்திரவு எழுதிக்கொண்டுவா" வென்றார்; இதைக் கேட்ட குமாஸ்தா சற்றே யாலோஜித்து "கிராமச்சிப்பந்திகள் தங்கள் குதிரையைக் கேட்டிருக்கமாட்டார்கள்; உடைப்புகள் அடைப்பதற்கு மூங்கில்கழிகளால் முக்காலிபோல் செய்து பூமியிலழுந்த முளையடித்து மூங்கில் படல்களைக் கட்டி ஜலம் போகாமற் செய்வது வழக்கம்; அந்தப்படி மூங்கில்களால் முக்காலி செய்வதற்குக் குதிரையென்று சொல்வது மாமூல்வழக்கம்; அந்தக் குதிரை விடவேண்டுமென்று சொல்லியிருப்பார்கள்; தங்களுக்கு விபரமாகச் சொல்லாததால் சந்தேக முண்டாகித் திரும்பி விட்டீர்கள்; அவர்கள் பேரில் தப்பிதமில்லை" யென்றார். இதைக்

பாற்றுக்குத் தகுந்த யோக்கியதைகளையுடையவர்களைப் பார்த்து விவாகஞ்செய்து வைக்கவேண்டுமென்று சொன்னால் அவர்கள் சொல்லக்கூடாது; உழுதொழில் செய்பவனும் வர்த்தகஞ் செய்பவனுந்தான் தனக்குவேண்டும்; அவர்களும் சுயமாய்ப்பாடுபட்டுச் சம்பாதித்து குடும்ப யோக க்ஷேமங்கள் செய்யவேண்டுமென்று சொல்லுகிறீர்கள்; இதென்னயுக்தி; நம்முடைய சொத்துக்களைப் பரிபாலிப்பதற்கு எத்தனையோ உத்தியோகஸ்தர்கள் நியமிக்க வேண்டியிருக்கிறதே; தேசபக்தியுடையவரை விவாகஞ்செய்து கொள்ளவேண்டுமென்று சொல்லுகிறீர்கள்; இதென்ன ஆச்சரியம்; பெண்பிள்ளைகளுக்குத் தேசபக்தியும் தெய்வபக்தியு மெதற்காகவேண்டும்; புருஷனையே தெய்வமாகப்பாவித்து அவர்காலாலிட்ட வேலையைக் கையாற்செய்யக் கடமைப்பட்டவ ளல்லவா? அவள்கண்ணைக் கசக்கிக்கொள்ளாமலும் கஷ்டநஷ்டங்களை யனுபவிக்காமலும் பார்த்துக் கலியாணஞ் செய்துவைக்க வேண்டியது என்னுடைய கடமையல்லவா? பத்திரிகைகள்படிப்பதைக்கொண்டும் இங்கிலீஷ் வாசித்திருப்பதைக் கொண்டும் அவள் புத்தி வேறுவழிகளிற் திரும்பி அகம்பாவ மேலிட்டுத் தனக்கு வரும் புருஷன் தனக்குத் தொண்டூழியங்கள் செய்யவேண்டுமென நினைத்திருக்கிறாளெனத் தெரிகிறது; அவளிஷ்டப்படி விடமாட்டேன்; இப்போது வந்துபோனவர் மிகுந்த புத்திசாலி; தக்க குடியிற் பிறந்தவர்; நம்முடைய குடும்பக்காரியங்களைச் சரிவரப் பார்க்கக் கூடியவர்; அவர் அடுத்த ஞாயிற்றுக் கிழமை நம்முடைய வீட்டுக்கு வருவார்; அவனைநேரில் பார்க்கட்டும்; அவருடைய வேலையை விட்டுவிடச்செய்து நம்முடைய வீட்டுடன் இருந்துவிடச் செய்கிறேன்; சுகதேவிக்குவேண்டிய புத்திமதிகளைச்சொல்லி அவள் மனதைத் திருத்தி வைப்பாயென்று அகத்தியிடஞ் சொல்ல, அவளந்தப்படிச் செய்கிறேனென்று சொல்லிவிட்டுத் தன்வீட்டுக்குப் போய்விட்டாள்.

சுகதேவியின் தகப்பனுக்கு இவளைத்தவிர வேறேசந்ததியில்லாததினால் இவளுக்கு அதிபால்யமுதல் சுதேசக்கல்வி கற்பித்ததுமன்றி பெண்பிள்ளை ஸ்கூல் தலைமையுபாத்தியாயர் சுராஜ்மணியம்மாளைக்கொண்டு இங்கிலீஷில் எடுத்தபுத்தகங்கள் வாசிக்கவும், நன்றாயெழுதவுங் கற்பித்தார். மேலும்தனக்குவரும் சுதேசபத்திரிகைகளையும், இங்கிலீஷ்பத்திரிகைகளையும் சுகதேவியிடங் கொடுத்து வாசிக்கச்செய்வார்; அவைகளி லெழுதப்பட்டிருக்கும்

இராஜாங்க சம்பந்தமான விஷயங்களை யெடுத்துச் சொல்லுவார்; இதனு லிவளுக்குப் பத்திரிகைகள் வாசிப்பதில் மிகுந்தகவலையுஞ் சிரத்தையு முடையவளாய் முக்கியமான பத்திரிகைகளைத் தருவித்து வாசிப்பாள்; இவள் தகப்பன் காலம் செல்லும்போது இவளுக்கு வயது 12;இவள் புஷ்பவதியாகும்போது வயது 15;இவள் அதிபால்லியமாக விருக்கும்போது அஃதாவது எட்டுவயதாக விருந்தகாலத்தில் இவள் தனக்கு உபாத்தியாயராயிருந்த அநந்தியின் வீட்டுக்கு அடிக்கடிப்போவதும் அவள்இவர்கள்வீட்டுக்கு இராக்காலங்களிலும் அதிகாலையிலும்வந்து படிப்புச்சொல்லிக்கொடுப்பதும் வழக்கம்; இந்த அநந்தியின் தம்பி சுந்திரலால் அப்போது இங்கிலீஷ் வாசித்துவந்ததால் சுகதேவி இவரிடத்தில் இங்கிலீஷ் எழுத்துக்களைக்கேட்டுக் கற்றுக்கொள்வாள்; இவர்க ளிருவருஞ் சேர்ந்து விளையாடுவது முண்டு; இவர் இச்சமயம் பி.ஏ. பரீட்சை கொடுத்துவிட்டு எந்த இலாகாவில் உத்தியோகஞ் செய்யலாமென்று ஆலோசித்துக்கொண் டிருந்தார்; இவருடைய தகப்பன் சுக்கன்லாலுக்கு தரகுவியாபாரந்தான் மிருதியாகவுண்டு; இவர் புத்திரி அநந்தியின் புருஷன் இந்தர்சென்சிங் அதிகமாய்ப்படித்தவரல்ல; ஓர்வர்த்தகன் கடையில் மாதம் 1 க்கு ரு 20 சம்பளத்தில் வேலைபார்த்துவந்தார்; அநந்திக்குப் பள்ளிக்கூட உபாத்தியாயர் வேலையில் மாதம் 1-க்கு ரு 25 சம்பளம்; இத்தம்பதிகள் தங்களுக்குக் கிடைக்கும் சம்பளத்தை வைத்துக்கொண்டு மிகுந்த செட்டாகக் காலக்ஷேபஞ் செய்துவந்தார்கள்; அந்தப் பட்டணத்தில் வீட்டுவாடகை ஜாஸ்தியாக விருந்தபடியால் சுக்கன்லால் தன்வீட்டி லொருபாகத்தில் தனிமையாய் குடித்தனஞ் செய்யும்படி அநந்திக்கு அனுமதி கொடுத்திருந்தார். இவள் தன் புருஷனிடத்தில் மிகுந்த பக்தியும் விசுவாசமு முடையவளாக விருந்தபடியால் தன்மனதிற்கு விசேஷமாகத் தோற்று மெந்த சமாசாரங்களையும் தன்னுடைய புருஷனிடஞ் சொல்லாம லிருக்கமாட்டாள்; அன்றையதினம் சுகதேவி தனக்குச் சொல்லிவந்த தேசபக்தியும், சர்க்கார் உத்தியோகஞ்செய்வது பாபத்தொழிலென்று சொன்னதும் இவளுக்கு மிகுந்த ஆச்சரியத்தை யுண்டாக்கியதால் தன் புருஷன் கிலவில்உட்கார்ந்துகொண்டு தன்மைத்துனன் சுந்தரலாலிடம் பேசிக்கொண்டிருக்கையில் தான் அன்றையதினம் சாயங்காலம் சுகதேவி வீட்டுக்குப் போனதும் அவளுக்குந் தனக்கும் நடந்த தர்க்கங்களையும் விபரமாக வெடுத்துச் சொன்னாள்; இதைக்

கேட்ட சுந்திரலால் "சுகதேவி பத்திரிகைகள் வரவழைத்து வாசிக்கிறாளா, பொதுஜன க்ஷேமங்களைக்கருதிப் பிரசங்கங்கள் செய்ய வெளியே போகப்போகிறாளா" வெனக்கேட்டார்.

அநந்தி:—பத்திரிகைகளெல்லாம் வரவழைத்து வாசிப்பதாகத்தான் தெரிகிறது; பிரசங்கங்கள் செய்யப்போவதாகத் தெரியவில்லை.

சுந்திரலால்:—எதற்காகப் பொதுவிஷயங்களைப் பற்றிப் பேசினாள்?

அநந்தி:—தனக்குப் புருஷனாக வருபவர் தேசபக்தியுடையவராகவும், நம்முன்னோர்கள் கையாண்டுவந்த கிருஷி வர்த்தகம் கைத்தொழில் இவைகளைக் கொண்டே ஜீவிப்பவராகவும், அத்தொழில்களை யனுசரித்து ஜீவிக்கும்படி மற்றவர்களுக்குப் புத்திபுகட்டுகிறவர்களாகவு மிருக்கவேண்டுமாம்; ஒரு டிப்டிகலெக்டர் அதிபாலியர்; தகுந்தசொத்தும், யோக்கியதையு முடையவர்; அந்த வேலையைக் கூட விட்டுவிட்டு இவர்கள் குடும்பவேலையே பார்ப்பதாகவுஞ் சொல்லுகிறார். அவரைத்தனக்கு வேண்டாமென்று சொல்கிறாள்.

சுந்திரலால்:—அவள் தாயார் டகதேவியின் நோக்கமெப்படி?

அநந்தி:—அந்த டிப்டிகலெக்டருக்குத்தான் கொடுப்பதாகச் சொல்கிறாள்; அவர் அடுத்த ஞாயிற்றுக்கிழமை வரப்போகிறாராம்; இனி யென்ன நடக்கப்போகிறதோ தெரியவில்லை.

சுகதேவி மிகுந்த செல்வமுடையவளாகவும், நன்றாய்ப்படித்து மிருப்பதால் தன்னைப்போல் மிகுந்த ஐஸ்வரியமுடையவராயும் நன்றாய் வாசித்தவராயு முள்ளவரையே விரும்புவாள்; ஏழைகள் முகத்தை யேறெடுத்தும் பார்க்கமாட்டாளென்ற நம்பிக்கையிருந்ததால் இவளைப்பற்றி இவர் நினைத்ததே கிடையாது; ஏழை பணக்காரரென்ற வித்தியாசங்களைப் பாராட்டாமல் தேசபக்தியிற் சிறந்து தன் தேகத்தை யுழைத்து ஜீவிக்கும் சுதேச கிருஷி வர்த்தகம் கைத்தொழில்கள் செய்பவர்களுக்கேதான் மாலையிடுவதே யல்லாது சர்க்கார் உத்தியோகஸ்தர்களை விரும்புவ தில்லையென்ற வைராக்கியம் சுகதேவிக்கு ஏற்பட்டதைக் கேள்விப் பட்டவுடன் இவள் தனக்குக் கிடைப்பாளா? இவள் தன்னை விரும்புவாளா? எந்தவிதத்தில் இவளுடைய பிரியத்தைச் சம்பாதிக்கலாம்? அவளுடைய அபிப்பிராயங்களை யெல்லாந் தெரிந்து கொள்ளலாமென்று

அன்றிரவு அதிக நேரம்வரையில் தூக்கம் வராமல் ஆலோசித்துக் கொண்டிருந்து மறுநாட்காலையி லெழுந்து அடியில் கண்டபடி கடிதம் ஒன்றெழுதினர்.

என தன்பிற் குரிய சுகதேவி!

நாமிருவரும் நீண்டகாலமாக ஒருவருக்கொருவர் பார்க்கமுடியாமற் போய்விட்டாலும் நாம் பாலியத்திற்சேர்ந்து விளையாடினதை நான் இன்னும் மறக்கவில்லை; நான் படிப்புவிஷயத்தில் என்னுடைய முழுக்கவலையுஞ் செலுத்திவந்தபடியால் என்னுடைய சிநேகிதர் பலருடைய பெயரும் மறந்து விட்டேன்; எனக்குப் பி. ஏ. பரீட்சை தேறி ஒருமாதமாகிறது; இதற்குமேல் வாசிப்பதற்கு எங்கள் குடும்பத்தார் எனக்கு ஒத்தாசைசெய்ய முடியவில்லை யாதலால் எந்த உத்தியோகமாவது செய்து காலக்ஷேபஞ் செய்ய உத்தேசிக்கிறேன்; உன்னுடைய விஷயங்களெல்லாம் என் தமக்கை அநந்தியம்மாள் மூலமாக நேற்றிரவு கேழ்விப்பட்டது முதல் எனக்கு மிகுந்த வருத்தமாக விருந்ததால் உனக்குறும் ஆபத்துக்களை விலக்கலாமென்பதாகத் துணிந்து இந்தக் கடிதமெழுதினேன்; இந்தக் கடிதங் கொண்டுவருபவன் மோடிலால்; என்னுடைய தம்பி; இவன்மூலமாகவே இனியெனக்குப் பதிலெழுதி அனுப்பவேண்டும்; இந்தக்கடிதத்தை வேறே யாரிடத்திலுங் காட்டக் கூடாதென்று கண்டித்து அவனுக்குப் பலகாரவசணங்கள் முதலியன வாங்கிக் கொடுத்திருக்கிறேன்; நீயும் அவனிடத்தில் அன்பாயிருக்க வேண்டும்; என்னால் உனக்குச் செய்யவேண்டிய வுதவிகள் யேதேனு மிருந்தால் இத்துடன் வரும் மோடிலால் மூலமாகவே தெரிவிக்க வேண்டியது.

நினதன்புள்ள சுந்திரலால்.

சுந்திரலால் தன்தம்பி மோடிலாலிடம் மேற்கண்ட கடிதத்தைக் கொடுத்து இதை மகாதேவியம்மாள் வீட்டிலிருக்கும் சுகதேவி யம்மாளிடம் நேரில்கொடுக்கவேண்டும்; அந்த அம்மாள் பதில் கடிதங் கொடுப்பாள்; அதை யொருவரிடத்திலுங்காட்டாமல் என்னிடத்திலேயே கொடுக்கவேண்டும்; ஒவ்வொருகடிதத்துக்கு மொவ்வொருஅணா நான் கொடுக்கிறேன்; யார் இந்தக் கடிதங் கொடுக்கசொன்னதென்று கேட்டால் அக்காள் கொடுத்ததாகச் சொல்லு; என்பெயரைச் சொல்லாதே; சுகதேவி கடிதங்கொடுத்தால் அத

வும் அக்காளுக்கென்றேசொல்லு; அக்காளிடத்தில் நான் கடிதங் கொடுப்பது பதில் வாங்கிவருவது யாதொன்றுஞ் சொல்லக் கூடாது; இந்தக் கடிதங் கொண்டுபோய்கொடுத்து பதில் வாங்கி வந்து என்னிடங் கொடுத்தவுடன் இரண்டணாவுக்கு மிட்டாய் வாங்கித்தருகிறேன் என்றுசொல்லி ஒருஅணா காசுங் கொடுத்தார். இந்தப் பையனுக்கு வயது ஏழுதானிருக்கும்; இவன் தன் தமயனிடத்தில் மிகுந்த அன்பும் பயமுமுடையவன்; மகதேவி யம்மாள் வீட்டிற்கு இவன் தமக்கை அநந்தியுடன் அடிக்கடிப் போகிற வழக்கமுண்டு; ஆகையால் தன்தமயன்கொடுத்த கடிதத்தை வாங்கிக்கொண்டு சுகதேவியிருக்கும் மூன்றுவது மாடியி லேறி அவளிருக்கும் அறையின் கதவைத் தட்டினன்; அவள் யார் சத்தஞ்செய்கிறதென்று கேட்க நான்தான் மோடிலால்; அக்காள் கடிதங் கொடுத்தாள்; கொண்டுவந்தேனென்று சொன்னன். உடனே கதவைத் திறந்து கடிதத்தை வாங்கி வாசித்துப்பார்க்க ஆச்சரியமும் விசனமுமடைந்து எனக்கு யேதோ ஆபத்துக்கள் வரப்போகிறதாயும் அதைத் தான் விலக்குவதாயும் எழுதியிருக்கிறரே இதென்ன விந்தை! நேற்றையதினம் அநந்தியம்மாளிடம் நான் பேசிக்கொண் டிருக்கும்போது ஆபத்தான விஷயங்கள் ஒருவருஞ் சொல்லவில்லையே; அவர் இதுவரையில் யாதொரு சங்கதிகளைப் பற்றியுங் கடிதமெழுதாம லிருந்தவர் இன்றையதினமிவ்விதங் கடிதமெழுதிய காரணமென்ன? அவரது கருத்துயாதொன்றுந் தெரியவில்லையே! இவரெழுதியதில் ஏதோ விசேஷமிருக்கிறது; அதைத் தெரிந்துகொள்ளவேண்டிய தவசியம் எனத் தீர்மானித்துப் பின்வருங்கடிதம் எழுதினள்.

எனதன்பிற்குரிய சினேகிதரே!

தங்கள் கடிதம் வரப்பெற்றுச் சந்தோஷமு மாச்சரியமு மடைந்தேன்; தங்கள் தமக்கையிடம் நான் நேற்றுதினம் விசேஷமான விஷயங்கள் யாதொன்றும் சொல்லவில்லை; தங்களுக்கு யேதேனுந் தெரிந்திருந்தா லதை முன்னமே யெனக்கு அறிவிப்பது மிகுந்த நன்மையே யாகும்; தங்களுக்குப் பரீட்சை தேறியதைக் கேட்க மிகச்சந்தோஷமானேன்; ஈசன் நல்வழியிற் திரவியங்களைச் சம்பாதிக்கச் செய்வாரென்று நம்புகிறேன்; இவ்வளவு காலஞ் சென்றும் என்னை மறவாதிருந்ததற்கு மிகவந்தனம்.

தங்கள்நண்பள் சுகதேவி.

சுகதேவி இந்தக்கடிதத்தை நன்றாயொட்டி அநந்தியம்மாளுக்கென்று மேல்விலாசமெழுதி மோடிலாலிடங் கொடுத்து இந்தக் கடிதத்தை வேறெவரிடத்திலுங் காட்டாதே; நீ கடிதம் வாங்கிவந்தா யல்லவா அவர்களிடத்திலேயே கொடுக்கவேண்டுமென்று, இரண்டணாகாசுங்கொடுத்தாள். இதை வாங்கிக்கொண்டு மோடிலால் தன்தமயனிடங் கொடுக்க, அவர் வாசித்துப் பார்த்து மிகச் சந்தோஷமடைந்து பின்வருமாறு பதில்கடித மெழுதினர்.

எனதன்பிற்குரிய சுகதேவி!

உன்னுடைய அன்பார்ந்த கடிதம் வரப்பெற்று ஆனந்தமடைந்தேன்; உன்தாயார் குறிப்பிட்ட டிப்டிகலெக்ட ரொருவரை நீ விவாகஞ் செய்துகொள்ள மாட்டேனென்று சொல்கிறாயாம்; உன்தாயார் அவருக்கே உன்னைக் கொடுக்கவேணுமென்று சொல்கிறார்களாம்; உன் தாயார்வார்த்தைகளைத் தட்டிவிட்டு உனதிஷ்டப்படி நடக்குங் காலமிதுவல்லவே; உன்தாயாருக்கும் உனக்கும் விரோதம் நேரிடாம லிருக்கவேண்டுமே! உன்தாயார் பிடிவாதமாக அந்த டிப்டி கலெக்டருக்குத்தான் விவாகஞ் செய்துவைப்பேனென்று ஏற்பாடுகள் செய்துவிட்டால் அவ்வேற்பாடுகளை நீ யெவ்விதமாகத் தடுக்கமுடியும்? பலவந்தமாகக் காரியம் நடக்குமானல் ஆபத்துகள் நேரிடுமல்லவா? உனக்குப்றவுதவி செய்பவர்களில்லா விட்டால் எனக்கு முன்னமே தெரிவிக்கச்செய்; என்னால் செய்யக்கூடிய வுபகாரஞ்செய்கிறேன்; நல்லவழியில் நான் பணஞ்சம்பாதிக்க வேண்டுமென்று எழுதியிருக்கிறாயே; அவ்வழி துறைகளை நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்; உடனேபதில் தெரியவேண்டும்.

நினதன்புள்ள சந்திரலால்.

இந்தக்கடிதத்தை மோடிலாலிடங் கொடுத்து பதில்வாங்கி வரும்படிச்செய்ய அவனந்தப்படி சுகதேவியம்மாளிடஞ் சென்று கடிதத்தைக் கொடுத்தான். அவளதைப் பிரித்து வாசித்துப்பார்த்து சற்றுநேரம் யோசித்துத் தன்தாயார் அநந்தியம்மாளிடம் ஏதோ சில சங்கதிகள் சொல்லியிருப்பாள்போல் தோன்றுகிறது; அதனால்தான் இவளிப்படி யெழுதுகிறாள்; "மலையில் விளைந்தாலும் உரலில்வந்துதானே மசியவேண்டும்". நம்மிடத்தில் சமா

சாரம் வரும்போது நாம்பார்த்துக் கொள்வோம்; நான் ஒன்றுந் தெரியாத குழந்தை; பலவந்தமாகக் காரியத்தை முடித்துவிடலா மென் நினைத்திருக்கிறார்கள் போலும், எனது கருத்தின்னதென அவர்களின்னமுந் தெரிந்துகொள்ளவில்லை என்று தனக்குத் தானே பேசிக்கொண்டு அடியிற்கண்ட கடிதம் எழுதினாள்.

எனதன்பிற் குரிய சினேகிதரே!

தங்களன்புள்ள கடிதம் வரப்பெற்று விஷயங்கள் தெரிந்து கொண்டேன். எனக்கெவ்விதவிபத்துகளும் வாராதபடி ஈஸ்வரன் கிருபைசெய்வார்; விபத்துக்கள் வந்தால் அவைகளை நீக்க தங்களைப் போன்ற கருணையுள்ளவர்களை யென்னிட மனுப்புவாரென்பது எனது நம்பிக்கை; நமது ஊழ்வினையின்படியே எக்காரியங்களும் நடக்கும்; தேசபக்தி தெய்வபக்திகளிற் சிறந்தவர்கள்தான் மானிடர்களுள் மேலான யோக்கியதை யுடையவர்கள்; நமது தாய் நாட்டுக் குழைப்பதே மேலான புண்ணியம்; நம்முடைய தேச நன்மையான விஷயங்களில் நமது வாழ்நாட்களைச் செலவிட்டு ஜீவிக்க வேண்டியதுதான் மிகுந்த கவுரவமான தொழி லென்பது எனது சிற்றறிவு; தங்களுக்கு எது சவுகரியமான தொழிலோ அதைச் செய்வதில் எனக்கென்ன ஆக்ஷேபனை யிருக்கிறது; தங்களபிப்பிராயங்களைத் தடுப்பதற்கு எனக்கென்ன பாத்தியமிருக்கிறது; எனக்கு ஆபத்துவரும் சமயம் தங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

தங்கள் நண்பள் சுகதேவி.

இந்தக் கடிதத்தை மோடிலால் பெற்றுக்கொண்டு தன்தமயனிடங்கொடுக்க அவர் வாசித்துப்பார்த்து தன்தம்பியிடம் நாலணா கொடுத்து வேண்டிய மிட்டாய்முதலியது வாங்கிச்சாப்பிடும்படிச் சொன்னார். இக்கடிதத்தில் தங்களபிப்பாயத்தைத் தடுப்பதற்கு எனக்கென்ன பாத்தியமிருக்கிறதென்ற வார்த்தைகளை யடிக்கடி யூகித்துப்பார்த்து அவள்மனதின்படி நடந்தால் நம்மைவிட்டகலாள்; நமது தாய்நாட்டுக் குழைப்பதே மேலான புண்ணியமெனச் சொல்கிறாளே; நான் சுதேசத்தவர்களுக்கு என்ன விதமாக நன்மைகள் செய்யமுடியும்; அவளை நேரில்கண்டு பேசினாலல்லது அவளது அபிப்பிராயங்களைத் தெரிந்துகொள்ள ஹேதுவில்லையே; அவளைக் கண்ணால் பார்க்கவு முடியாதே; அவளது அரண்மனைக்குள் ஆண்பிள்ளைகள் போகவிடார்களே; எத்தனை

சிபாய்கள் காவல் காத்துக்கொண் டிருக்கிறார்களோ தெரியவில்லையே; கடிதங்களி லிவ்விஷயங்களை யெழுதுவதும் சாத்தியமானதல்லவே; இதற்கென்ன செய்யலாமெனப் பலவாறாக யோசித்துக் கொண்டிருந்தார்.

மறுநாட்சாயங்காலம் அநந்திவழக்கம்போல் சுகதேவியுடைய அறைக்குவர அவளுடன் சுகதேவி அன்புடன் பேசாமல் வாடிய முகத்துட னிருப்பதைக்கண்டு சந்தேகங் கொண்டு "இன்றய தினம்உன் முகக்குறியால் ஏதோ வொருவிதமான மனஸ்தாபமுடையவளாகத் தோற்றுகிறது; வீட்டில் உன்தாயார் உன்னை எதர்க்காகவாவது கோபித்துக் கொண்டாளோ" வெனக் கேட்டாள்.

சுகதேவி:—யார்கோபம் யாரை யென்னசெய்யும்? ஒருவரை யொருவர் பார்த்துக் கெடுக்க முடியுமா; சிருஷ்டிஸ்திதி சம்ஹாரம் இம் மூவகைத் தொழிலும் ஈஸ்வரனுக்குத்தா னுரித்தானது.

அநந்தி:—உனக்குள்ள மனவருத்தங்களை யென்னிடத்திற் சொல்லாமல் யாரிடத்தில் நீ சொல்லப்போகிறாய்?

சுகதேவி.—உங்கள் மனதிலுள்ளதை நீங்கள் என்னிடஞ் சொன்னால் நானுஞ் சொல்லக்கூடும்.

அநந்தி:—உன்னிடத்தில் சொல்லக்கூடிய விஷயங்களு மிருக்கும்; சொல்லத்தகாத விஷயங்களு மிருக்கலாம்.

சுகதேவி:—என்னிடத்தில் சொல்லத்தகாத விஷயங்களை நீங்கள் வேறே யாரிடத்திலாவது சொல்லுவீர்களா? அல்லது உங்கள் மனதிற்குள்ளேயே வைத்துக்கொண் டிருப்பீர்களா?

அநந்தி:—மனதிற்குள்ளே யிருக்கக்கூடிய விஷயம் மிகுந்த சொற்பம்; நான் தெய்வமாகக் கொண்டாடுகிறவர்களிடத்தில்தான் எல்லா விஷயங்களையுஞ் சொல்லுவேன்.

சுகதேவி:—தெய்வமாகக் கொண்டாடக்கூடியவ ரில்லாததால் என்மனதிலுள்ளதை தெய்வத்தி னிடத்தில்தான் சொல்லவேண்டும். என்தாயார் கோபித்துக்கொண்டார்களோ வென்று கேட்டீர்களேஎன்பேரில் ஏதேனும் கோபமான வார்த்தைகள் உங்களிடம் ஏதாவது சொல்லியிருக்கிறார்களோ, ஒளிக்காமல் சொல்லுங்கள்.

அநந்தி:—உங்கள் வீட்டு விஷயங்களை யொளித்துப் பேசுவேனா. நேற்றுதினம் நாமிருவரும் வேடிக்கையாகப் பேசிக்கொண்

டிருந்த விஷயங்களை யாரோ உன்தாயாருக்குத் தெரிவித்திருக்கிறார்கள்போல் தோற்றுகிறது; அது விஷயமாக என்னைக் கேட்டார்கள்; டிப்டிகலெக்டரை நீ விரும்பவில்லை யென்று சொன்னேன்; அவரை வருகிற ஞாயிற்றுக்கிழமை இவ்விடம் வரும்படி சொல்லிவிட்டேன்; அவரை நேரில்பார்த்தோ, அல்லது கேட்கவேண்டிய விஷயங்களைக் கேட்டோ முடிவு சொல்லச்சொன்னார்கள்; அது விஷயந்தான் உன்னிடஞ் சொல்லவந்தேன்; நீ நேரில்பார்த்து உனக்குத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களெல்லாந் தெரிந்துகொள்; உன் மனதிற்குப் பிடித்தால் உண்டென்று சொல்லு; இல்லாவிட்டால் வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போகிறார்; உன்னிஷ்டம் நிறைவேறுமா? உன் தாயாரெண்ணங் கைகூடுமா? நீ எதற்காக விசனப்படவேண்டும்; உனக்கு ஈஸ்வரன் யாதொரு குறைவும் வைக்கவில்லையே!

சுகதேவி:—இவ்வார்த்தைகளைக் கேட்டுச் சந்தோஷித்து "நீங்கள் சொல்வது உண்மையே! டிப்டிகலெக்டர் வந்தாலென்ன ஹைகோர்ட்டு ஜட்ஜிவந்தாலென்ன; அவர்களுக்காவது மற்றெவருக்காவது பயப்படுவேனென்று நினைக்காதீர்கள்; என்மனதுக்குப் பிடித்து என் மனதின்படி நடக்கக்கூடியவருக்கே நான் மாலையிடுவேனேயன்றி வேறொருவரையும் விரும்பேன்; இது சத்தியம்; பலவந்தமாக விவாகஞ்செய்துவிடலாமென்ற வெண்ணத்தை யடியோடே விட்டுவிடும்படி சொல்லிவிடுங்கள்; எனக்கு உயில்படி ஏராளமான சொத்துகளிருப்பதால் அந்த அகம்பாவத்தின்பேரில் பேசுகிறேனென்று நினைக்காதீர்கள்; எனக்குள்ள சொத்துக்கள் யாவும் என்தாயாரே யெடுத்துக்கொள்ளட்டும்; ஒருபையனை ஸ்வீகாரஞ் செய்துகொண்டு அவனுக்கே கொடுத்துவிடட்டும்; எனக்கு சகோதரர்களிருப்பதாக வைத்துக்கொள்ளுகிறேன்; எனக்குள்ள குட்டியுபாதையை உபாத்தியாயர் வேலை பார்த்தாவது தீர்த்துக்கொள்ளுவேன்; என்னை யெவரு மிகழாமல் பலருங் கொண்டாடத்தக்கவிதமாக நடந்துகொள்ள எனக்கு சமத்துண்டு; இது விபரங்களை யென் தாயாருக்கு அறிவித்துவிடுங்கள்" எனச் சொன்னாள். இவளுடன் அநந்தி வேறுசில விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்து வரும்போது மகதேவியம்மாளைக்கண்டு "டிப்டிகலெக்டர் வந்தவுடன் எனக்குச் சொல்லியனுப்புங்கள்; சுகதேவி சில விஷயங்கள் அவரைக்கேட்க வேண்டுமென்று சொல்லுகிறாள்'

அவ ளிஷ்டப்படித்தான்விட்டுத் திருப்பவேண்டும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

மகதேவியம்மாள் அந்தப்படி ஞாயிற்றுக்கிழமை தினம் டிப்டிகலெக்டர் வந்தவுடன் அநந்தியம்மாளுக்குச் சொல்லியனுப்ப அவளுடனே புறப்பட்டுவந்து சுகதேவியைக்கண்டு "நீ கேழ்க்க வேண்டிய கேழ்விகளெவை? அவைகளைச் சொல்லு; நான் கேட்கச் செய்து பதில்தெரிவிக்கிறே" னென்றாள். இதைக் கேட்ட சுகதேவி நான் கேட்கவேண்டிய கேழ்விக ளின்னவென்று எழுதிக் கொடுக்கமுடியாது; எந்தெந்த வார்த்தைகள் அவர்கள் வாயினின்றும் வருகிறதோ அதற்குத் தக்கபடி கேழ்விகள் கேட்க வேண்டும்; நான் வராமல் முடியாது; நீங்கள் கேழ்விகள் கேட்பீர்களா அல்லது ஆண்பிள்ளைகள் யாரைக்கொண்டாவது கேட்கச் சொல்கிறீர்களாவெனக் கேட்டாள்.

அநந்தி:—முன் யாரோவந்துகேட்டதாக உங்கள்தாயார் சில கேழ்விகள் கேட்டுச் சரியானபதில் சொல்லாததால் போகச் சொல்லிவிட்டதாகவும், அந்தக் கேழ்விகள் உன்தாயார் சொல்ல உன் மாமன் ஹரிநாத் அவர்களால் கேட்கப்பட்டதாகவுந் தெரிகிறது; அதுபோலத்தான் இப்போதுங் கேட்பார்கள்.

சுகதேவி:—எந்தவிடத்தில் வரவழைக்கப் போகிறார்கள்.

அநந்தி:—இரண்டாவதுமாடி பெரியஹாலில்தான் வரவழைப்பார்கள்; திரைகள்கூடக் கட்டப்பட் டிருக்கலாம்.

சுகதேவி:—திரைமுதலானதுங் கட்டப்பட் டாய்விட்டதா? டிப்டிகலெக்டர் முதலானவர்கள் வந்துவிட்டார்களா? ஆண்பிள்ளைகள் யார் யார் வந்திருக்கிறார்கள்; தெரிந்துகொண்டு வாருங்கள் நாம்போவோம்.

அநந்தி அந்தப்படியேபோய்ப் பார்த்துவந்து டிப்டிகலெக்டர் அவருடைய சிநேகிதர்களிருவர், மாமன் ஹரிநாத், வேலைக்காரர்கள் இருவர், பங்கா இழுப்பவர்கள் இருவர்க ளுட்கார்ந்திருக்கிறார்கள்; உன்தாயார் என்னுடைய வரவை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கிற ளென்று சொல்ல; சுகதேவி தன்மாமன் டிப்டிகலெக்டர் இவர்கள் நீங்கலாக மற்றவர்கள் அங்கே யிருக்கக் கூடாதெனச் சொல்லும்படி தன்தாயார் மூலமாகத் தன்மாமனுக்கு அறிவிக்கும்படிச் சொன்னாள். அந்தப்படியே அநந்தியம்மாள் மகதேவியம்மா

ளுக்குச்சொல்ல அவள் அது விபரங்களைத் தன்தம்பி ஹரிநாத்து க்குஅறிவித்தாள். உடனே ஹரிநாத் டிப்டிகலெக்டரைத் தனிமையி லழைத்துப்போய் சிலரகசியமான விஷயங்கள் பேசிக்கொள்ள வேண்டியதாகவிருக்கிறது; அன்னியர்களெவரு மிருக்கக்கூடாது; ஆகையால் தங்களுடன்கூட வந்தவர்களை வெளியிற்போய் சற்று நேர முட்கார்ந்திருக்கும்படிக்குச் செய்யுங்கள்; எங்கள்மனுஷரை யும் நான்வெளியே போகும்படி செய்யப்போகிறே னென்பதாகச் சொல்லி தரகன் தர்மதாசையும் வேலையாட்களையும் வெளியே போயுட்கார்ந் திருக்கும்படிச் சொன்னார். ஹரிநாத் சொன்னபடி டிப்டிகலெக்டர் தன்னுடைய சினேகிதரையும் வெளியிற்போ யுட் கார்ந்திருக்கும்படிச் சொல்லியனுப்பினார். திரைக்கப்பால் வேலைக் காரிகள் நாற்காலிகள் கொண்டுவந்துபோட மகதேவி அநந்தி சுகதேவி மூவரும் வந்து உட்கார்ந்தார்கள். டிப்டிகலெக்டரைத் திரைக்குப் பன்னிரண்டு கெஜதுக்கப்பா லுட்காரச்செய்து ஹரி நாத் வழக்கம்போல் திரைக்குச்சமீபத்தில்வந்துநின்றார். சுகதேவி தான் கேழ்க்க வேண்டிய கேள்விகளை யப்போதைக் கப்போது துண்டு கடிதாசுகளிற் குறித்து அநந்தியிடங்கொடுக்க அவளதை ஹரிநாத்திடத்திற் சொல்லி அடியிற்கண்ட கேழ்விகள் கேட்கப் பட்டன.

ஹரிநாத்:—தங்களுக்கு பூஸ்திதிகளிருக்கின்றனவா ? கிருஷி த்தொழிலில் செய்யுமனுபவங்கள் தெரியுமா?

டோஞேஜி:—எங்களுக்கு பூஸ்திதிகளுண்டு; சாகுபடி முத லிய விஷயமெனக்குத் தெரியாது.

ஹரிநாத்:—கைத்தொழில் வர்த்தகத்தொழில்க ளேதேனுந் தெரியுமா ?

டோஞேஜி:—அத்தொழில்களினு மனுபோகமில்லை.

ஹரிநாத்:—மேற்சொன்ன கிருஷி வர்த்தகம் கைத்தொழில் சம்பந்தமான சாஸ்திரங்கள் முதலியவற்றை வாசித்திருக்கிறீர் களா? அல்லது இனியாவது வாசிக்கமுடியுமா ?

டோஞேஜி:—இதுவரையில் வாசித்ததில்லை ; இனித்தான் வாசிக்கவேண்டும்.

ஹரிநாத்:—இந்தக்குடும்பத்தில் மேற்சொன்ன மூவகைத் தொழில்களினால்தான் வரும்படிகள் கிடைக்கின்றன. அத் தொழில்களை நீங்கள் நடத்தமுடியுமா ?

டோனேஜி:—அத்தொழில்களை அதிசீக்கிரத்தில் கற்றுக் கொண்டு சரியாய் நடத்தலாம்.

ஹரிநாத்:—இப்போதுள்ள கவர்ண்மெண்டு வேலையைவிட்டு விட்டுத்தானே அத்தொழில்களைச் செய்யவேண்டும்.

டோனேஜி:—ஆம். அப்படித்தான் செய்யவேண்டும்.

ஹரிநாத்:—எப்போது உங்கள் வேலையை விட்டுவிட உத்தேசம்?

டோனேஜி:—வேறுவேலை கிடைத்தால் இப்போதிருக்கிற வேலையை விட்டுவிடலாம்.

ஹரிநாத்:—நாளையதினமே இந்தக்குடும்பக் காரியங்களையெல்லாம் நீங்கள் பார்க்கும்படியாகச் செய்துவிடுகிறோம்; உங்கள் வேலையை இராஜினமா கொடுத்துவிட்டு வந்துவிடுவீர்களா?

டோனேஜி:—இச்சொத்தில் ஒருவிதபாத்திய மெனக்குஏற்பட்டபின்பு தான் எனக்கிருக்கும் வேலையை விடவேண்டும்.

ஹரிநாத்:—எங்கள் கைமாட்டி எந்தவிதமாகவாவது இச்சொத்தில் ஒருவிதபாத்தியம் உங்களுக்குக் கொடுப்பதாக வைத்துக்கொள்வோம்; அவ்வித தஸ்தாவேஜு முடிந்தபின் உங்கள் வேலையைராஜினமாகொடாமலிருந்தால்நாங்களென்னசெய்யலாம்.

டோனேஜி:—ஒருவரை யொருவர் நம்பாமல் எந்தக்காரியுந் தான் முடியும்; நம்பித்தான் போகவேண்டும்.

ஹரிநாத்:—உங்கள் வேலையை ராஜினமா கொடுத்துவிட்டு இவிடம் வாருங்கள்; இந்தக் குடும்பக்காரியங்களை ஆறுமாத காலம் பாருங்கள்; பிறகு, மற்றெல்லா விஷயங்களைப் பற்றியும் பேசிக் கொள்ளலாம்.

டோனேஜி:—என்வார்த்தைகளை நம்பிச்செய்யக்கூடுமானல் சொல்லுங்கள்; என்வேலையை திடீரென்று விட்டுவிடமுடியாது.

ஹரிநாத்:—சற்றுமுன்பு ஒருவரை யொருவர்நம்பாமல் எந்தக்காரியமும் முடியாதென்றுசொன்னீர்களே! எங்கள்வார்த்தையில் நம்பிக்கையில்லாமல் உங்களைத்தான் நாங்கள் நம்ப வேண்டுமென்று சொல்கிறீர்களே? அதற்கென்ன காரணம்?

டோனேஜி:—ஸ்ரீநாயகமாக விருப்பதால் சலனபுத்தியுண்டு; அதனல்தான் சொன்னேன்.

இதைக் கேட்டவுடன் மகதேவிக்குக் கோபமுண்டாகி எங்கள் சொத்துக்கள் சுதந்தரங்களெல்லாம் நாங்கள் நம்பி யொப்பிவிக்க, நீங்கள்மட்டில் எங்களிடத்தில் நம்பிக்கை யில்லையென்று சொன்னால் இதையாராவது ஒப்புக்கொள்ளுவார்களா? எங்களை நம்பித்தான் செய்யவேண்டும்; இஷ்டமிருந்தால் இரண்டுவாரத்துக்குள் தெரிவிக்கவேண்டுமென்று அவளேநேரில் சொன்னாள். இதைக்கேட்ட டோனுஜி "என்வேலையை யிப்போதே ராஜினமா கொடுத்துவிட்டு வந்தபின்புதான் மற்றெல்லா விஷயங்களைப்பற்றியும் பேசிக்கொள்ளவேணுமென்று சொல்லுகிறீர்களா" வென்று கேட்க, மகதேவி ஆம் என்று பதில்சொன்னாள். டிப்டி கலெக்டர் தனது பெற்றோர்களை யோஜித்துக்கொண்டு கடிதம்போடுவதாகச் சொல்லிவிட்டு வெளியே வந்து தர்மதாசைப் பார்த்து எனக்கு வீணுசிரமமும் செலவும் வைத்தீர்களே; யாதொரு விஷயமுமுடியாதிருக்கும் போதே என்னையெவ்வளவும் மதிக்காமல்பேசுகிறார்கள்; அவர்கள் பெண்ணைக் கலியாணஞ் செய்வதற்கு முன் என் வேலையை இராஜினமா கொடுத்துவிடவேண்டுமாம்; இவர்கள் என்னை யடிமையாக வேலைவாங்க வுத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது; என்னை யேமாற்றமுடியாது; நான்போய் வருகிறேனென்று சொல்லிக்கொண்டு தன்னூர் வந்துசேர்ந்தார்.

பின்பு ஹரிநாத் வெளியில்வந்து தர்மதாசைக்கண்டு நாம் பிரயத்தினங்கள் செய்ததெல்லாம் வீணாகப்போயிற்றே; இனி நாம் அழைத்துவரும் ஒவ்வொருவரையும் இப்படித்தானே யவமானப்படுத்திப் போகச்செய்வார்கள்; நமக்கோ பெரியகாரியங்களாக வேண்டியிருக்கிறது; எந்தத்தந்திரஞ்செய்தால் நமதெண்ணம் நிறைவேறுமென்று கேட்டார்.

தர்மதாஸ்:—எவ்விதமான புருஷன் வேண்டுமென்பது சுகதேவியின் கருத்து? உங்களுடைய தமக்கையி னபிப்ராயங்களென்ன?

ஹரிநாத்:—சர்க்கார் உத்தியோகஞ் செய்பவனாக வேண்டுமென்பது தமக்கையினெண்ணம்; கிருஷிவர்த்தகம் கைத்தொழில் இம்மூவகைத் தொழில்களும் நன்றாய்த்தெரிந்தவர்தான் வேண்டுமென்பது சுகதேவியின் கோறிக்கை.

தர்மதாஸ்:—அவர்களிருவருடைய அபிப்பாயங்களின் படி தக்கயோக்யதையுடையவரை அழைத்துவருகிறேன்; இனியாவது

அவர்கள் வருகிறவர்களை யவமானப்படுத்தாமல் காரியத்தை முடித்து விடவேண்டும்.

ஹரிநாத்:—இனி நடந்து கொள்ளவேண்டியவழிகள் எனக்குத் தெரியும்.

இவ்விதம் பேசிப்போன தர்மதாஸ் டில்லிமுதலிய விடங்களுக்குப் போய் தகுந்த மனுஷாளிருக்கிறார்களாவென்று விசாரித்ததில் கோராக்பூரில் லெகராஜ்சிங் என்பவர் முனிசீப் வேலை பார்ப்பதாகவும், அவர் அலகபாத்தில் ஹைகோர்ட்டில் வக்கீல் வேலைபார்த்தவரென்றும், அவருக்கு 25 வயதுதானிருக்குமென்றுங் கேழ்விப்பட்டு அவ்வூருக்குப் போய் அந்த டிஸ்டிரிக்ட் முனிசிப்பைக்கண்டு மகதேவியம்மாள் குடும்பச் செல்வங்களையும், சுகதேவியின் கல்வி, அறிவு, அழகு, முதலியனவைகளையுமெடுத்துச் சொல்லித் தான் அந்த மகதேவியம்மாள் தம்பிக்குமிகுந்த சிநேகிதரென்றும், இஷ்டமிருந்தால் சுகதேவியை விவாகஞ்செய்து வைப்பதாகவுஞ் சொன்னார். அந்த முனிசீப் பெண்ணின் படத்தை வரவழைத்துக்கொடுத்தால் அதன் பேரில் பதிற் சொல்லுகிறேனென்று சொல்ல தர்மதாஸ் உடனே ஹரிநாத்துக்கு ஒரு கடிதமெழுதி சுகதேவியின் பொட்டகிராப் ஒன்று அனுப்பிவிக்கும்படிச் செய்தார். அந்தப்படி சுகதேவியின் படம் வந்தவுடன் அதை முனிசீப்பிடங்கொடுக்க அவர் சுகதேவியின் சுந்திரமான வடிவத்தையும், மெல்லிய இடையையும், மானைப்போன்ற கண்ணையும், எள்ளுப்பூ போன்ற மூக்கையும், கருத்து நீண்டிருக்கும் தலைமயிர் மேலேகிடந்து புரளுவதையுங் கண்ணுற்று மிகுந்த காதல் கொண்டு அந்தப் பெண் நானெங்கெந்த விடங்களுக்குப் போகிறேனோ அந்தந்த விடங்களுக்கெல்லாம் என்னுடன் கூடவரச் சம்மதிப்பாளாவெனத் தர்மதாசைக் கேட்டார்.

அதற்கு அந்தப்பெண் தன்வீட்டைவிட்டு வெளியே வரமாட்டாளாம்; அவள் வீட்டிலேயேமாப்பிள்ளை யிருக்கவேண்டுமாம்; சர்க்கார் உத்தியோகம் பார்க்கக்கூடாதாம்; அவர்கள் குடும்பவேலைதான் பார்க்கவேண்டுமாம்; இந்த நிபந்தனைகளின்படி யிருக்கச் சம்மதித்தால்தான் விவாகஞ்செய்து கொடுப்பார்களாம் என்று தர்மதாஸ் சொல்ல, முனிசீப் தனக்கு அவர்கள்வீட்டுடனிருக்க எவ்வித ஆக்ஷேபனையுங்கிடையாது; என்னுடைய வக்கீல் வேலையுடன் அவர்கள் குடும்பவேலைகளெல்லாம் சரியாய்ப் பார்த்துவரத்

தடையேகிடையாது; அவர்கள் சம்மதியைக் கேட்டுத் தெரிவிக்க வேண்டுமென்றார். இதைக்கேட்ட தரகர் கெண்டையைப் போட்டுத்தான் விராலைப்பிடிக்கவேண்டும்; அவர்கள் குடும்பச் சிப்பந்திகளுக்கெல்லாம் ஏதாவது கொடுக்கவேண்டியதுடன் அந்த பெண்ணின் மாமனுக்குத்தான் ஜாஸ்தியாகக் கொடுக்கவேண்டும்; அந்தக்குடும்ப வருஷவாரி வரும்படிகளில் பாதியாவது செலவழிக்க வேண்டுமென்று சொல்ல; முனிசிப் அத்தொகை யெவ்வளவாகுமெனக் கேட்டார். தரகர் ஒருலட்சமாகுமென்றார். முனிசிப்தான் அவ்வளவுதொகை செலவிட முடியாதென்றும், அன்பதினாயிர ரூபாய் சேகரிப்பதே கடினப்படுமென்றும், இஷ்டமிருந்தால்முடித்துவைக்கலா மென்றுஞ் சொல்ல, அதற்குத் தர்மதாஸ் தான் பெண்ணின் மாமன் முதலியவர்களை யோஜித்துக்கொண்டு கடிதமெழுதுவதாகச் சொல்லி காசிநகர்வந்துஹறிநாத்தைக்கண்டுதான் பார்த்துப்பேசிய முனிசிப் நாளயதினமே தன்வேலையை விட்டுவிட்டு இவ்வூருக்கு வந்து வக்கில் வேலை பார்ப்பதாகவும், அத்துடன் எந்த வேலை பார்க்கச் சொன்னாலும் பார்ப்பதாக வொப்புக்கொண்டிருப்பதாகவும், அவர் அதிக லக்ஷணமுள்ள வாலிபரென்றும், மிகுந்த பணக்காரரென்றும், கமிஷன் தொகை ஜாஸ்தியாய்க் கொடுப்பதாக வொப்புக்கொண் டிருப்பதாகவுஞ் சொன்னார். இவர் உடனே தன் தமக்கை மகதேவி வீட்டுக்குப்போய் முனிசீப்பின் செல்வம், அழகு, பாலிய முதலியனவற்றை விசேஷமாக வர்ணித்துச் சொல்லி, இவர்தனக்குள்ள வேலையைவிட்டுவிட்டு இந்தக்குடும்பவேலை முழுவதும் கவனித்துப் பார்ப்பதுடன் தனக்குள்ளவக்கீல் தொழிலால் மாதம் ஒன்றிற்கு ஆயிரரூபாய்க்குக் குறையாமல் சம்பாதிப்பதாகவுஞ் சொல்லுகிறார்; இவர் ஹைகோர்ட்டு வக்கீலாகையால் மிகுந்த சாமர்த்திய முடையவரென்பதற்கும், ஏருளமான தொகை சம்பாதிப்பா ரென்பதற்குஞ் சந்தேகமே கிடையாது; இவரைப்போன்றவர்கள் கிடைப்பது மிக அருமை; வருகிறவர்களையெல்லாம் கேழ்விகள் கேட்டு அவமானப்படுத்தியனுப்புவதுபோல் இவரைச் செய்யக்கூடாது; அவர்களை நேரில் பார்க்க வேண்டுமானால் இவிடத்துக்கு வரச்செய்கிறேன்; நம்முடையகுடும்பவேலைகளை சிலகாலம் பார்த்துவரட்டும்; அவர் கெட்டிக்காரரெனத் தெரிந்தால் விவாகஞ்செய்து வைப்போம்; இல்லாவிட்டால் போகச்சொல்லி விடலாம்; இனி வாய்ப்பேச்சு பேசுவதில்பிரயோஜனமில்லை; அவருடைய வேலைத்திறமைகளை நாமறிய வேண்டி

யது முக்கியமான காரியமென்றும், இன்னும் பலவிதமாகவும்முனிசிப்பைப் பூஷித்துப்பேசினர். இவைகளனைவற்றையுங் கேட்ட மகதேவியம்மாள் தன்தம்பி சொற்படி நடப்பதே நியாயமானதாக் நினைத்து அந்த முனிசிப்பை இவிடம் வரும்படி கடித மெழுதச் சொன்னாள்.

ஹரிநாத் இது விபரத்தைத் தர்மதாசுக்குச் சொல்ல அவருடனே முனிசிப்புக்குக் கடிதமெழுதி வரவழைத்து இவர்வந்த விபரம் ஹரிநாத்துக்கு அறிவித்தார். இவர் முனிசிப்பை மகதேவியம்மாள் வீட்டுக்கு அழைத்துப்போய் வழக்கம்போல் இரண்டாவது மாடியி லுட்கார்ந்திருக்கச் செய்து தன்தமக்கைக்குத் தெரிவிக்க அவள் திரைக்கப்பால் நின்று பார்த்து இவருடைய லக்ஷணத்தையும் கெம்பீரமான பார்வையையும் பார்த்து மிகச்சந்தோஷங்கொண்டு "தன் பெண் மைனராக விருப்பதால் அவள் மேஜராகிக் குடும்பக்காரியங்களை வகித்துப்பார்க்கக்கூடிய காலம்வரையில் நீங்கள் இந்தக் குடும்பக்காரியங்களைப் பார்த்துவர முடியுமா" வென்று தன்தம்பி ஹரிநாத்தைக்கொண்டு கேட்கச்சொன்னாள். முனிசிப் அதற்கு யாதொரு ஆக்ஷேபணையுமில்லை யெனச்சொல்ல மகதேவியம்மாள் அந்தப்படி செய்யுங்கள் மற்ற விஷயங்களைப் பற்றி பின்னால் யோஜித்துக்கொள்வோமெனச் சொன்னாள். முனிசிப் உடனே வெளியேவந்து தர்மதாசைப்பார்த்து நான்போய் என்னுடைய வேலையை ராஜினமா கொடுத்து வக்கீல் வேலைக்கு சன்னது பெற்றுக்கொண்டு இவிடம்வந்து சேருகிறேன்; எனக்குத் தகுந்த ஜாகையொன்று இந்த வீட்டுக்குச்சமீபத்தில் திட்டஞ் செய்துவையுங்கள்; தகுந்த கக்ஷிக்காரர்களைத் தெரிந்திருந்தால் சொல்லிவைக்கவேண்டும்; குமஸ்தா வொருவன் யோக்கியனுகத் திட்டஞ்செய்யவேண்டும்; இன்னு மொருமாதத்துக்குள் இவிடம் வந்து சேருகிறேனென்று சொல்லிப் போய்விட்டார்.

தர்மதாஸ் இவர்சொன்ன வாக்கைக் காப்பாற்றுவார்; இவரால் மிகுதியான வரும்படி கிடைக்குமென்று ஓர்நல்ல மாடிவிடொன்றை வாடகைக்குத் திட்டஞ்செய்து ஒருகுமஸ்தாவுமேற்படுத்தி வைத்திருந்தார். லேகராஜ்சிங்கு தன்னூருக்குப் போனவுடன் தனக்குக் குடும்பவேலைகள் ஜாஸ்தியாக விருப்பதால் முனிசிப் வேலைபார்க்க முடியாதென்றும், அந்த வேலையை ராஜினமா கொடுப்பதாகவும், ... வக்கீல் வேலைக்கு சன்னது கொடுக்க

வேண்டுமென்றும் ஹைகோர்ட்டுக்கெழுதி அந்தப்படி உத்திரவுங் கிடைத்துவிட்டது. இவ்வுத்திரவு கிடைத்தவுடன் தனது சார்ஜைக் கொடுத்துவிட்டு காசியில் தர்மதாஸ்வீட்டுக்கு வந்தார். இத்தரகர் தான் வாடகைக்குப்பேசி திட்டஞ்செய்திருந்த வீட்டிலிருக்கச்செய்ததுமன்றி ஹரிநாத் வீட்டுக்குச் சென்று முனிசிப்தான் சொன்னவாக்கைக் காப்பாற்றவேண்டித் தன் வேலையை ராஜிநாமா கொடுத்துவிட்டு இவ்வூருக்கு ஸ்திரமாக வந்துவிட்டதாகவும்,இவ்வூரிலேயே வக்கீல் தொழில் நடத்துவதாகவுஞ் சொன்னார்.இதைக் கேட்ட ஹரிநாத் மிகுந்த சந்தோஷத்துடன் தன் தமக்கையிடஞ் சென்று முனிசிப் "நம்முடைய வார்த்தையை நம்பித் தன் வேலையை ராஜிநாமா கொடுத்துவிட்டுப்பழயவக்கில்வேலைக்கேசன்னது பெற்றுக்கொண்டு இந்தநகரிலேயேஸ்திரமாயிருந்துதொழில் நடத்துவதாக வந்துவிட்டதாகவும், ஜாகை முதலானதுந் திட்டஞ் செய்துவிட்டதாகவுஞ் சொன்னார்.

இந்த முனிசிப்பின் வாக்குறுதிக்குச் சந்தோஷித்த மகதேவியம்மாள் அவரைத் தன் வீட்டுக்கு அழைத்துவரச்செய்து தன்னுடைய பிரதான ஏஜண்டைத்தருவித்து இன்றுமுதல் நம்முடைய குடும்பவேலைகள் யாவற்றும் இந்த வீட்டில் வந்திருக்கும் முனிசிப் அவர்கள் மேலே கவனித்துவரும்படி யேற்பாடுகள் செய்திருக்கிறேன்; தொகை வரவு செலவுகள் மட்டில் என் மூலமாய் நடத்தப்படவேண்டும்; மற்றெல்லாவேலைகளும் அவர்களை யோஜித்துக்கொண்டு செய்யவேண்டுமென ஆஞ்ஞாபித்ததுமன்றி இந்த விபரங்களை லெகராஜ்சிங்குக்கும் அறிவிக்கும்படி ஹரிநாத்திடஞ் சொல்லியனுப்பினாள். இவர் அந்தப்படி மகதேவியின் வார்த்தைகளை வக்கிலுக்குச்சொல்ல அவர் மிகுந்த ஆனந்தமடைந்து அவர்கள் குடும்ப ஏஜண்டாபீசுக்கு வந்து ஒவ்வொருகுமஸ்தாக்களுஞ் செய்யும் வேலைகளைக்கவனித்து வந்தது மன்றி, நெசவுத்தொழில் நடக்கு மிடங்கள், சாயம் போடுமிடம், ஜவளி விற்குமிடங்கள் முதலிய எல்லாவிடங்களும் போய்ச் சிப்பந்திகள் சரியாய் வேலை பார்த்துவருகிறார்களாவென்பதைக்கவனித்து இவருக்கு இவ்வேலைகள் தெரியாதிருந்தாலும் அவைகள் தனக்குத் தெரிந்திருப்பதுபோல் பாவனைமட்டில் ஜாஸ்தியாகச் செய்துவந்தார்.

இவர் கோர்ட்டுகளுக்குப் போகாமலிருப்பதில் மிகுந்த அவமானமிருப்பதாக நினைத்து எந்தக் கேஸ்களுக்காவது வகாலத்துகள் கிடைக்குமாவெனப் பிரயத்தினங்கள் செய்தார். இவரிந்த நகருக்குப் புதிதாகையால் சொற்ப நம்பர்கள்தான் கிடைத்தது. மகதேவியம்மாள் குடும்பக்கணக்குகளைக் கொண்டு வரச்செய்து எவ்வளவு தொகை இந்த நகரத்துக்குள் வரவேண்டும்; நிலுவை ஜாப்தா வொன்றுதயாரித்துக்கொடுமெனஏஜண்டுகளைக்கேட்டார். அவர்கள் ஒரு லட்சத்துக்குமேலிருப்பதாக ஜாப்தா கொடுத்தார்கள். உடனே அந்தப் பாக்கிபேர்வழிகளுக்கெல்லாம் நோடீஸ்கள் கொடுத்தும், பிராதுகள் செய்தும், டிக்ரிகள் பெற்று நிறைவேற்றியும், பைத்துவரவு ஆசாமிகளை மிகுந்த நிர்ப்பந்தஞ்செய்தும், அனேகமாயெல்லாத்தொகைகளையும் வசூலித்து மகதேவியம்மாள் குடும்பத்துக்குச் சேரவேண்டிய யாவற்றுத்தொகைகளையும் கொடுத்து பாக்கியாயுள்ள வக்கீல் பீஸ்தொகைகளைத் தானெடுத்துக்கொண்டார். இவரிவ்விதம் அதிசீக்கிரத்தில் நிலுவைகளை வசூலித்ததைப் பற்றி மகதேவி மிகச்சந்தோஷித்துத் தன் தம்பியைத்தருவித்து அடுத்த மகரமாதத்தில் முகூர்த்தம் நடத்திவிடவேண்டும்; அவர்நம்மைநம்பி இவிடம்வந்துவிட்டார்; நம்முடையகுடும்ப காரியங்களை அவர்கள் சொந்தக் குடும்பம்போல் மிகுந்த சிரத்தையாகப் பார்த்து வருகிறார்கள்; இவரைப் போன்றவர்கள் இனி கிடைப்பதரிது; இவர்களுக்கு மகரமாதத்தில்முகூர்த்தம் நடத்தஓர் சுபதினம்பார்த்துத் தெரிவிக்கும்படி சாஸ்திரிகளுக்கு சொல்லியனுப்பு; அந்தச் சுபதினத்தை முனிசிப்புக்கு அறிவிப்பதுடன் பத்திரிகைகள்போட்டு நம்முடைய உறவினர், சினேகிதர், பைத்துவரவு செய்பவர்கள் முதலியவர்களுக்குத் தெரிவிக்கவேண்டும்; கலியாணத்துக்குத் திட்டஜாப்தா வொன்று தயாரித்துத் தருகிறேன்; அந்தப்படி சாமன்களெல்லாம் முன்னுடியே சேகரஞ்செய்யவேண்டும் எனச்சொன்னுள்.

இதைக்கேட்ட ஹரிநாத் தன்னெண்ணம் நிறைவேறிற்று; வக்கீலிடம் அவர் வாக்குச் சொன்னதொகைமுழுவதும் முன்னுடி வாங்கிவிடவேண்டும்; முன்ஜாக்கிரதை செய்யாவிட்டால் வக்கீல் நம்மை யேமாற்றிவிடுவார்; அந்தக்காரியத்தை முன்னல் பார்க்கவேண்டுமென்று தாகர் தர்மதாஸ்வீட்டுக்குச்சென்று, தன் தமக்கை கலியாண வேற்பாடுகள் செய்யச்சொன்னதை யவருக்குத் தெரி

வித்து, வக்கிலிடம் தொகையை வாங்கிக்கொண்டு மற்றக்காரியங்
களைப் பார்க்கவேண்டும்; அவர்வீட்டுக்குப்போவோம் வாருமெனக்
கூப்பிட்டார். தர்மதாஸ் இதைக்கேட்டுச் சந்தோஷித்து இருவரு
ஞ்சேர்ந்து வக்கீல் லெகராஜ்சிங் வீட்டுக்குச் சென்றார்கள். அங்கே
போனவுடன் ஹரிநாத்துக்கு வக்கில்மிருந்த மரியாதைசெய்து பே
சிக்கொண்டிருக்கையில் தர்மதாஸ் வக்கிலைப்பார்த்து "ஹரிநாத்
தைச் சுட்டிக்காட்டி இந்தப் புண்ணிய புருஷருடைய விடாமுயற்
சியின் பேரிலும் தகுந்தசிபார்சின்பேரிலும் காரியங்கைகூடிற்று;
அடுத்த மகரமாதத்தில் முகூர்த்தம் நடத்துவதாகத் தீர்மானித்
திருக்கிறார்கள்; அந்தக் கலியாணத்துடன் இவர்கள் மகளுக்கும்
விவாகம் முடித்துவிடவேண்டுமாம்; அந்தச் செலவுகளுக்குத்தொகை
ஜாக்ரதைசெய்யவேண்டுமாம்; அதற்காகத்தான் வந்தோ" மென்று
சொல்ல லெகராஜ்சிங் அதற்கென்ன தடையிருக்கிறது; நாளைய
தினமே யேற்பாடுகள்செய்கிறேன் என்றார். பின்பு, வக்கீல் தர்ம
தாசைத் தனிமையில் அழைத்துப்போய் நடந்த விஷயங்களை
விசாரித்து சந்தோஷமடைந்து "சொன்னதொகையில் பாதி
ஒருவாரத்துக்குள் தருவித்துத்தருகிறேன்; பாக்கித்தொகை முகூ
ர்த்த தினத்துக்கு ஒரு வாரத்துக்குமுந்தியே கொடுத்து விடுகி
றேன்; கலியாணத்துக்கு ஆக வேண்டிய காரியங்களைப் பாருங்க"
ளென்று சொன்னார். தர்மதாஸ் இது விபரங்களை ஹரிநாத்துக்
குத் தெரிவிக்க, அவர்களிருவரும் வக்கீலிடம் உத்திரவு பெற்றுக்
கொண்டு பத்துதினங் கழித்து வந்து பார்ப்பதாகவும், அதற்குள்
சொன்ன தொகை சேகரஞ் செய்துவைக்கவேண்டு மென்றுஞ்
சொல்லிவிட்டு வந்துவிட்டார்கள்.

அவர்கள் அந்தப்படி குறித்த கெடுவில்வந்து தொகை
கேட்க வக்கில் இருபத்தையாயிர ரூபாயும் நோட்டுகளாகக் கொ
த்தார். அதில் இரண்டாயிரரூபாய் தர்மதாசுக்குக் கொடுத்துப்
பாக்கியை ஹரிநாத் எடுத்துக்கொண்டு போய்விட்டார். மகதேவி
யம்மாள் தன்னுடைய ஏஜண்டுகளில் அதிக நாளாய் இந்தக் குடும்
பத்தில் வேலைபார்த்தவர்களை அழைத்துவரச் செய்து தன்னு
டைய விவாகத்துக்கு எந்தப்படிச் செலவுகள் செய்யப்பட்டதோ
அந்தத்திட்டத்துக்குக் குறையாமல் செலவுகள்செய்யும்படி பழைய
கணக்கை யெடுத்துத் திட்டஜாப்தா வேற்படுத்தும்படி சொன்
னாள். அவர்களந்தப்படி ஜாப்தா தயாரித்துக் கொடுத்தார்கள்.
அதைத் தன் [illegible] ஹரிநாத்திடங்கொடுத்து தன்னுடைய

ஷராப் பிரதான ஏஜண்டு இவர்களையுமனுப்பி விவாகமகோத்சவத்திற்கு வேண்டிய சகல சாமான்களும் சேகரிக்கச் செய்தாள்.

மகதேவி இவ்விதங் கலியாண வேற்பாடுகள் செய்த விஷயம் சுகதேவிக்கு முன்னால் தெரியாது; சாமான்கள் வீட்டுக்கு வந்த பிறகுதான் தெரியும்; லோகராஜ்சிங்கை இவள் நேரில் பார்த்தவளல்ல; இவர் தன் குடும்ப வேலை பார்த்து வருகிறாரென்பதும் நிலுவை பாக்கிகளை நிர்ப்பந்தித்து வசூலித்துவிட்டதால் வைத்து வரவு செய்து வந்த பேர்கள் வேறிடங்களில் ஜவளி முதலியன வாங்கிவருவதாகவும், கடைகளிலுள்ள சரக்குகள் விற்கப்படாமல் மிகத்தேக்கமாயிருப்பதாகவுந் தெரிந்துகொண்டிருந்தாள்; தன்னை விவாகஞ் செய்யவேண்டியதை யுத்தேசித்தே இவர்கள் குடும்ப வேலை பார்த்து வருகிறாரென்று தெரிந்திருந்தாலும், விவாக நிச்சயமாவதன்முன் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டுதான் ஏற்பாடுகள் செய்வார்கள்; அக்காலத்தில் தனக்காக வேண்டிய விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொள்ளலாமென நினைத்திருந்தாள்; இவளுக்கு எந்த விஷயமுந்தெரிவிக்காமலேற்பாடுசெய்துவருவதைப்பற்றி மிகுந்த ஆத்திரங்கொண்டு "என்னை இந்தக் குடும்பத்தில் பிறந்த பெண்ணாக நினைக்கவில்லைபோற் றோற்றுகிறது; என்னை யொருமாடாக நினைத்து அவர்களுக்குப் பிரியப்பட்டவர்களிடத்தில் கொடுத்துவிடலாமென நினைத்திருக்கிறார்களோ! இவர்களுடைய சாமர்த்தியங்களைப்பார்ப்போம்! இந்தக் கலியாணவேற்பாடுகள் செய்தவர்கள், விவாகஞ் செய்துகொள்ள வந்தவர்கள் இவர்களுக்குப்பெருத்த அவமானஞ் செய்யவேண்டுமெனத் தீர்மானித்து, அநந்தியம்மாள் வந்தவுடன் அவளைத்தன் தாயாரிடமனுப்பித் தனக்காகச் செய்த நகைகளையும், தன் வீட்டிலிருந்த பெருத்த நகைகளையும், தனக்கு எடுத்துக் கொடுக்கும்படிக் கேட்கச்சொன்னாள். அவளந்தப்படி மகதேவியம்மாளைக்கண்டு அவள் பெண் சொன்ன விஷயங்களைச் சொல்ல; அவள் தன் பெட்டிச் சாவிகளை யெடுத்துக் கொடுத்து சுகதேவி இஷ்டப்பட்ட நகைகளை யெடுத்துப் போட்டுக்கொள்ளட்டும்; அவள் மனதுக்குப் பிடித்த புடவையை யெடுத்துக் கட்டிக்கொள்ளட்டுமெனச் சொன்னாள்; மகதேவியம்மாள் கொடுத்த கொத்துச்சாவிகளை அநந்தி சுகதேவியிடங்கொடுத்து சில நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுத் தன் வீட்டுக்குப் போகும்போது சுகதேவி அவளைப்பார்த்து உங்கள் தம்பி மோடிலாலைப்பார்த்து நாளாயிற்று, அவனைப்

பார்க்க விரும்புகிறேன்; அவனை நாளைபதினங் காலையில் வரும்படி சொல்லுங்களென்றாள். அவளப்படியேசொல்லி யனுப்பிவைப்பதாகச் சொல்லிவிட்டுப் போனபின்பு சுகதேவி அந்தச் சாவிகளைக் கொண்டு பெட்டிகளைத் திறந்து ரூபாயையும் பதினாயிரத்துக்குக் குறையாத பொருமானமுள்ள நகைகளை யெடுத்துக் கொண்டதுமன்றி பணத்தை ஐம்பதினாயிரத்துக்குக் குறையாம லெடுத்துத் தனது சொந்தப் பெட்டியில் வைத்துக்கொண்டு சாவிகளைத் தன் தாயிடமனுப்பி விட்டாள்.

மறுநாட் காலையிலெழுந்து தன் வேலைக்காரிகளைக் கொண்டு எந்தத் தேதியில் முகூர்த்ததினங் குறிப்பிட்டிருக்கிறார்களென்பதைப் பற்றி விசாரிக்கச் செய்ததில் அன்று முதல் ஐந்து தினங்கள் தானிருப்பதாகத் தெரிந்துகொண்டாள்; அநந்தி சொல்லிப் போனபடி மோதிலாலை யனுப்ப அவன் சுகதேவி யிடம்வந்து என்னைத் தருவித்த காரிய மென்னவென்றுகேட்டான்; அதற்கவள் உனக்குப் பட்சண பலகாரங்கள் கொடுப்பதற்காகத்தான் வரச் சொன்னேனென்று தனது தாதிகளை யனுப்பி வீட்டில் செய்திருக்கும் மிட்டாய் முதலிய வற்றை யெடுத்துவரச் சொல்லிவிட்டு அடியில்க்கண்டபடி அநந்தியின் தம்பி சந்திரலாலுக்கு ஒரு கடித மெழுதினாள்.

எனது மானத்தைக் காப்பாற்றும் சிநேகிதரே!

என் தாயார் என்னை மனுஷப்பிறவியாக நினையாமல் மாடாக நினைத்து அவர்களுக்கிஷ்டப்பட்ட ஒரு வக்கீலுக்கு என்னை விவாகஞ் செய்து கொடுத்துவிடுவதாக நாளது மாதம் பதினெட்டாந் தேதி முகூர்த்ததினங் குறிப்பிட்டிருக்கிறது; நானோ பேதைப் பெண்பிள்ளை; என்னைப் பலவந்தஞ்செய்து விவாகமுடித்துவிடும் பட்சத்தில் அன்றிரவே என்னுடைய ஆத்மா பிரிந்து போய்விடுமென்பதற்குச் சந்தேகமே கிடையாது; அவரை நான் விவாகஞ் செய்துகொள்ள மாட்டேனென்று சொன்னால் எனக்குத் தகுந்த காவல்கள் போட்டு எவரிடத்திலும் பேசாமலும் அவர்கள் வீட்டுச் சொத்துக்களை யெடுக்காமலுஞ் செய்துவிடுவார்கள்; எங்கள் குடும்பச் சொத்துக்களைக்கொண்டு நான் ஜீவிக்க வேண்டியதில்லை; தங்கள் தமக்கையைப் போல் எங்கேயாவது உபாத்தியாயர் தொழில் செய்து ஜீவிக்கமுடியும்; இச்சமயம் நீங்கள் என்னைக் காப்பாற்ற வேண்டும்; நான் இரண்டாவது மாடியைவிட்டு இறங்

கும் வழக்கங்கிடையாது; சிற்றாபியிலும், மிட்டிலும், ஒவ்வொரு வாசலுக்கும், அநேக சிப்பாய்கள் இராப்பகலாகக் காவலிருக்கிறார்கள்; முதலாவது மாடியில் என் தாயாரிருப்பதால் அது மிகுந்த பந்தோபஸ்தாயிருக்கும்; மேலும், அக்கதவுகள் பலமாய்பூட்டப்பட்டிருக்கும்; இரண்டாவது மாடிக்கு ஏணிகள் எட்டாது; நானெந்தவிதத்தில் வெளிக்கிளம்பி வரலாம்? தெருப்பக்கத்தில் எப்போதும் கூட்டமிருந்துகொண்டே யிருக்கும்; கொல்லைத் தோட்டச் சுவரும் சொற்பம் பெரிதாகவே யிருக்கிறது; நானெப்படி வெளிப்பட்டுப்போகிறதென்று தெரியவில்லை; முகூர்த்ததினத்தின் முதல் நாள் இராத்திரிக்குள் நான் வெளிப்பட்டுப் போகமுடியாத வரையில் என்னை மறுநாட்காலையில் பிரேதரூபமாகத்தான் பார்க்கலாம்; எனக்குற்ற மனோவியாதியை யாரிடத்தில் சொல்லுவேன்? என்மனம் படும்பாட்டை ஜெகதீசன்தா னறியவேண்டும்; என்னைக் காப்பாற்ற மார்க்க மேதேனு மிருந்தால் கூடிய சிக்கிரத்தில் தெரிவிக்கவேண்டும்; என்னை இந்த ஜெயிலினின்றும் விடுவித்தால் இந்த உபகாரத்தை என்றையுள்பரியந்தம் மறவேன்; என்னை யெந்தவிதமாகவாவது காப்பாற்றி விட்டால் எனக்கு உயிர்பிச்சை கொடுத்ததாக நினைப்பேன்; தங்கள் பதில்கடிதங் கிடைப்பதை யெதிர்பார்த்துக்கொண் டிருக்கும்.

தங்கள் நண்பன் சுகதேவி.

இந்தக்கடிதமெழுதுவதற்குள் தாதிகள் பக்ஷணங்கள் முதலியவை கொண்டுவந்து கொடுத்தார்கள். அதையும் கடிதத்தையும் கொடுத்து முன்போல் பதில்வாங்கிக்கொண்டுவா? வேண்டிய காசுதருகிறேன்; சிக்கிறம் வந்துசேர வேண்டுமென சுகதேவி சொல்ல, மோடிலால் அவைகளைப் பெற்றுக்கொண்டு ஓடோடியும் வந்து தன்தமயன் சுந்திரலாலிடங் கடிதத்தைக் கொடுத்து பதில் கடிதங்கேட்டான். அவர் அதை வாங்கிப்பார்த்து மிகுந்த வருத்தமடைந்து தன்னுடைய அறையில்போய்ப் படுத்துப் பலவாறாக யோசித்துத் தெளிந்து அடியில்கண்டவிதம் ஒரு கடிதமெழுதினார்.

எனதன்பிற்குரிய சுகதேவி!

உன்னுடைய கடிதம் என் மனதைப் புண்படுத்துகின்றது; உனக்கு வரும் எந்த ஆபத்துக்களையும் என்தலையைக் கொடுத்தாவது நீக்கத் தயாரா யிருக்கிறேன்; நீ யொன்றுக்குங் கவலைப்பட

வேண்டாம்; நான் இன்றையதினம் இரண்டுமணிக்கு உன்மாடிக்கு கீழேவருவேன்; நீ தயாராயிருக்கவேண்டும்; மற்ற விஷயங்கள் பின்னால்.

நினதன்புள்ள சுந்திரலால்.

இந்தக் கடிதத்துடன் இரண்டணாவும் மோதிலாலிடங் கொடுத்து பதில்வாங்கிவரும்படி சொல்ல, இப்பையன் அதைச் சுகதேவியிடம் வந்து கொடுக்க அவள் ஒரு துண்டுக்கடிதத்தில் "தயாரா யிருக்கிறேன் மூன்றாவது மாடியில்; பச்சைத்துணிக் கொடி" என்று எழுதிக்கொடுத்து அவன் தமயனிடங் கொடுக்கச்செய்தாள். மோதிலால் அந்தப்படிக் கொடுக்க சுந்திரலால் அதை வாசித்துப்பார்த்து சுகதேவியை நேரில்பார்க்கலா மென்ற ஆசைமிகுதியால் போஜனஞ்செய்தபின் தனக்குள்ள உடுப்புகளில் மிக நேர்த்தியாயுள்ளதை யெடுத்தணிந்து கொண்டு கடிதத்தில் கண்டபடி 2 மணிக்குப் புறப்பட்டுப் போனார்.

சுகதேவியும் அந்தப்படி விலையுயர்ந்த ஆடையாபரணங்களை யெடுத்தணிந்துகொண்டுநாகம்போன்ற சடைஜோடிப்பைத்தனது நீண்டசடையில் கட்டியும், நெற்றியில் திலகப்பொட்டிட்டு தன் சிநேகிதர் சுந்திரலாலை யெப்போது பார்க்கலா மென்று மிகுந்த கவலையுடையவளாக விருந்தாள். இவளைப்போலவே மிகுந்த ஆவலுடன் வந்துகொண்டிருந்த சுந்திரலால் மூன்றாவது மாடியில் நின்றுகொண்டிருந்த இவளது சந்திரன்போன்ற முகத்தையும், வேலாயுதம் போன்ற கண்ணையும், பவழம்போன்ற உதட்டையும், நுண்ணியஇடையையும், சுவர்ணம்போன்ற திரேகத்தையும், கிருஷ்ணசர்ப்பம் படம்விரித்துக்கொண்டுசடையில் தொங்குவதுபோல் மிகுந்தபளபளப்புள்ள சடைநாகத்தையும், சூரியனைப்போல் பலவர்ணங்களைக்காட்டி ஜொலிக்கும் காதுத் தோடையும், கழுத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் முத்தாரம், வயிரஹாரம், இரத்தினக்கோர்வை முதலிய வாபரணங்களி னழகையும், தங்கச்சரிகைப் போட்ட நீலபட்டுப்புடவையையும் பார்த்தவுடன் பிரமித்து "இவ ளென்ன ரதிதேவியோ! மேனகையோ! ரம்பையோ! இவளது அழகை யிதுவரையில் பார்க்காதிருந்து விட்டோமே" யென்று இவளை யுற்றுப்பார்த்துக்கொண்டு தெருவில் ஸ்தம்பம்போல் நின்றார். இவரை சுகதேவி அதிபாலியத்தில் பார்த்திருந்தாலும், இவரது கெருடனைப்போன்ற மூக்கும், பரந்தமுகமும், விசாலமான

நெற்றியும் இவள் ஞாபகத்தி லிருந்தாலும், அன்றயதினம் காலையி லெழுதியபடி 2 மணிக்கு அவிடம் வந்து மாடியை நோக்கிப்பார்த்ததாலும், இவர்தான் சுந்திரலா லென்பதாக நிச்சயித்து அவருடைய செந்தாமரைபோன்ற குளிர்ந்த பார்வையையும், முகதேஜஸ்ஸையும், அவர் ஆவலாகத்தன்னைப் பார்த்துக்கொண்டிருப்பதையுங், கண்ணுற்று தன்கையை நீட்டிக் கீழேதாழ்த்தி மறைந்துவிட்டாள். இவள் சொன்ன ஜாடையின்னதெனத் தெரியாமல் சுந்திரலால் சற்றுநேரந் திகைத்து நிற்க, சுகதேவி இரண்டாவது மாடிக்கு வந்து இவரைப்பார்த்து சற்றே புன்னகைகொண்டாள். இதைப்பார்த்த சுந்திரலாலுக்கு அக்காலத்தி லுண்டாகிய சந்தோஷத்துக் களவில்லை. இவர் அங்கே நின்றபடி தெருவி லிருபக்கத்திலும் தன்கையை நீட்டிக்காட்ட அதன் கருத்துகளையறிந்த சுகதேவி அந்தவீட்டுக்குப் பின்புறமாக வரவேண்டுமெனக் கையால் ஜாடைகாட்டினாள். உடனே சுந்திரலால் அந்தவீட்டுக்குப்பக்கத்தில் சந்திருந்ததால் அதன் வழியாகத் தோட்டத்துக்குப் பக்கமாக வந்தார்; அத்தோட்டம் மிகுந்த விஸ்தீர்ண முடையதாகையால் தூரத்தில் நின்று பார்க்க இவள் நிற்குமிடமே தெரியவில்லை; இவர் நின்று பார்ப்பது சுகதேவிக்குமட்டில் தெரிந்தது; அதனுலவள் ஒரு வெள்ளைத்துணியை யெடுத்து விசிரிக்காட்டி, தான் நிற்குமிடத்தைத் தெரிவித்தாள்; அவள் நின்றவிடத்துக்கு நேராகத்தோட்டச்சுவற்றில் ஒருவித அடையாள மேற்படுத்திக்கொண்டு தானும் தன் கைச்சவுக்கத்தை விசிரிக்காட்டிவிட்டு மறுபடியும் தெருப் பக்கம்வந்து சுகதேவியைப்பார்த்து புன்சிரிப்புடன் தான் போய்வருவதாகக் கைஜாடை காட்டிவிட்டுப் போய்விட்டார்.

இவர் அன்றயதினம் சுகதேவியைப்பார்த்தது முதல் வேறெவ்விஷயத்திலும் இவர் மனம் பிரவேசிக்காமல் இவளிடத்திலேயே புத்தி பதிந்துவிட்டது; மிகுந்த விசாரங் கொண்டவர்போல் தன்னறைக்குள் போய்ப் படுத்து இவளை யெவ்விதம் வெளிப்படுத்திக்கொண்டு வரலாம்; எங்கேகொண்டுபோ யொளித்துவைக்கலாம்; இவள் என்னிடத்தில் பிரியமாயிருக்கிறாளோ இல்லையோ! இவளை வெளிப்படுத்திக்கொண்டு வந்தவுடன் தனக்குப் பிரியமுள்ள வேறெவரிடத்துக்காவது போய்விடுவாளோ என்னமோ தெரியவில்லை; இவள் என்னிடத்தில் பிரியமாயிருப்பதற்கு நான் யாதொரு வேலைசெய்தது மில்லையே; என்னை மதிக்க மாட்டாளே! பாலியத்தில் இருவரும் சிநேகிதர்களா யிருந்தபடியால் அந்த

சிநேகத்தைத்தானே இப்போதும் பாராட்டுகிறதாகத் தெரிகிறது; என்னிடத்தில் வேறுவிதமான பிரியமிருப்பதாகத் தெரியவில்லையே? அவ்விதப் பிரியமிருக்க நாயகமுமில்லையே? எப்படிக்கிருந்தபோதிலும் இவளை பலவிதமாகவாவது வெளிபடுத்தி வேறு தேசங்களுக்குக் கொண்டுபோய்விட்டால் இவள் என்னுடனில் தானே யிருக்கவேண்டும்; இவளணிந்திருக்கும் நகை மிகவும் விலையுயர்ந்ததாக விருக்குமாதலால் அந்நகைகளை விற்றே காலக்ஷேபஞ் செய்யலாம் என்று அன்றைய தினம் முழுதும் மிகுந்த கவலையுடையவனாகி சாப்பாட்டிற் கூட பிரியமில்லாதவனாகப் படுத்திருந்தான். மறுநாளுதயத்துக்கு இரண்டு நாழிகைக்கு முன் விழித்துக்கொண்டு இரண்டாவது மாடியினின்று எவ்விதமிறங்கலாமென யோசித்துப்பார்க்க, நூல் கயிற்றினால் இறக்கிவிடலாமெனத் தெளிந்து, மிகுந்த அழுத்தமுமுறுக்குமுள்ள நூல்கயிறு நாற்பதுகெஜம் வாங்கி, மெலிதாகவு முறுதியாகவுமுள்ள மூங்கில் கழிகளைத் துண்டுகளாக நறுக்கி, அந்தக்கயிற்றில் ஒரு அடிக்கொன்று சொருகி, அந்தக்கழிகள் விழுந்துபோகாமல் நன்றாய்ச் சுருட்டி ஒரு கள்ளிப்பெட்டியில் வைத்து இடுக்குகள் தெரியாமல் நன்றாய்த் தைத்ததின் அடியில்கண்ட கடிதமெழுதினார்.

எனது பிரியமுள்ள சுகதேவியே!

உன்னை மாடியினின்றும் எவ்விதமிறக்கி அழைத்துப்போகலாமென்பதைத் தெரிந்துகொள்வதற்காகவே நான் நேற்றுதினம் வந்து அந்த மாடிகள் தோட்டச்சுவர் முதலியவைகளைப் பார்த்து வந்தேன்; மாடியினின்று மிறங்குவதற்கு நூல்கயிற்றேணி யொன்று செய்து இத்துடனனுப்பப்பட்டிருக்குங் கள்ளிப்பெட்டிக்குள் வைத்திருக்கிறேன்; அந்தப் பெட்டியில் பொம்மைகளிருப்பதாகவும், அந்நாள் உன் கலியாணத்துக்கு ஜோடிக்கக் கொடுத்தனுப்பியதாகவும், வண்டிக்காரனிடஞ் சொல்லியனுப்புகிறேன்; அதை யுன்னறைக்கு எடுத்துப்போய் எவருக்குந் தெரியாமலெடுத்து ஒளித்துவை; தோட்டத்துச்சுவற்றிலேறி நான் விவாகதினத்து முதனாள் இரவு பனிரெண்டு மணிக்கு நீநின்று காட்டிய மாடிக்கு நேராக வந்து விடுகிறேன்; அந்த ஏணியின் தலைப்பொன்றை அழுத்தமாயுள்ள அல்லது கனமாயுள்ள இரும்பு கருங்கல் முதலியனவற்றில் கட்டித் தோட்டத்தில் தொங்கவிடவேண்டும்; மற்றொரு நுனியைத் தேறுயுள்ள பலமான மரமுதலியன வற்றில் நன்றாய்க்கட்டி

விடவேண்டும்; தோட்டத்தினின்றும் தெருவுக்குப் போக வழி யொன்று வேண்டும்; அதுமட்டுமின்றி முன் ஜாக்கிரதை செய்து வைக்கவேண்டும்; அன்றியே ராத்திரிலேனும் பகல் காலங்களில் எம் மையடையாளந்தெரிந்துகொள்ளாதபடி பந்தோபஸ்தான விடத்தி லிருக்கத்தனிவீடொன்று முன்னுடி திட்டஞ்செய்துவைக்கவேண் டும்; வீட்டுக்குவேண்டிய சாமான்கள் வாங்கிவைக்கவேண்டும்; அவைகளுக்குப் போதுமான செலவுகளுக்கு என் கையில் பண மில்லையாதலால் அவசியம் இன்றைக்கே நூறு ரூபாய்க்குக் குறை யாம லனுப்பிவைக்க வேண்டும்; காலதாமதஞ் செய்யக்கூடாது; பணமனுப்புவதை ஓர்சின்னப்பை முதலியதில் மோடிலாலுக்கு இன்ன தென்று தெரியாமலே அனுப்பவேண்டும்; நீ யொன்றுக் கும் பயப்படவேண்டாம்; தைரியமாக விருக்கவும்.

உனதன்புள்ள சந்திரலால்.

இந்தக்கடிதமெழுதியபின் சந்திரலால் ஒரு குதிரை வண்டி வாடகைக்குப்பேசி அதில் அந்தக் கல்லிப்பெட்டியை யேற்றி மோ டிலாலிடங் கடிதத்தைக்கொடுத்து "இந்தப்பெட்டியில் சில பொம் மைகளிருக்கிறது; சுகதேவியம்மாள் கலியாணப்பந்தலுக்கு ஜோடி ப்பதற்காக அனுப்பியிருக்கிறேன்; அதையாரிடத்திலுங் கொடுக் காமல் சுகதேவியிடத்தில் ஒப்புவித்து இந்தக் கடிதத்தையுங் கொ டு" என்று தானெழுதிய கடிதத்தைக் கொடுத்து அனுப்பினார். மோடிலால் அந்த வண்டியி லேறிக்கொண்டு சுகதேவி வீட்டுக்கு வந்தவுடன் பெட்டியையிறக்கி அங்கேயிருந்த காவற்காரர்களைப் பார்த்து "இந்தப்பெட்டியில் உயர்ந்த பொம்மைகளிருக்கின்றன; என்னுடைய அக்காள் சின்னம்மாளிடம் சேரில் கொடுத்து பதில் கடிதம் வாங்கிவரச் சொன்னார்கள்" என்று சொல்ல அவர்கள் அந்தப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு சுகதேவியம்மா ளிருக்கு மறையில் கொண்டுபோய் வைத்துவிட்டுப் போய்விட்டார்கள். மோடிலால் தான் கொண்டுவந்த கடிதத்தை சுகதேவியிடங்கொடு க்க அவளதை நன்றாய் வாசித்துப் பார்த்து மிகுந்த சந்தோஷ மடைந்து பெட்டியைத் திறந்து அதிலுள்ள கயிற்றேணியை யெடு த்து பந்தோபஸ்தானவிடத்தில் வைத்தபின் அடியில் கண்டபடி பதில் கடிதம் எழுதினாள்.

என தன்பிற்குரிய சிநேகிதரே!

தங்கள் கடிதமும் பெட்டியும் வந்து சந்தோஷமடைந்தேன்; இதுடன் கொடுத்தனுப்பிய ஜோல் பைக்குள் நீங்கள் கேட்டது

வைக்கப்பட்டிருக்கிறது; நான் தங்கள் வரவை யெதிர்பார்த்துக் கொண்டே யிருப்பேன்.

தங்கள் நண்பள் சுகதேவி.

சுகதேவி ஒரு துணியில் இருபது பவுனெடுத்து முடிந்து அதை யொரு சின்னத் தோல்பைக்குள் வைத்து அதற்கு முத்திரைபோட்டு அதையும் ஒரு கடிதத்தையும் நாலணாவும் மோடிலா விடங் கொடுத்து இப்பையையும் கடிதத்தையும் உன் தமயனிடம் நேரில் கொடுத்து பதில்வாங்கிவந்தால் பின்னும் நாலணா தருகிறே னென்றாள். இவனவைகளை வாங்கிக்கொண்டுபோய் சுந்திரலா லிடங்கொடுக்க அவர் பையைத்திறந்து பார்த்ததில் இருபது பவு னிருக்கக்கண்டுசந்தோஷித்து அத் தம்பியிடம் இரண்டணாகொடுத் தார்; சின்னம்மாள் பதில் கடிதம் வாங்கிவந்தால் காசு கொடுப்ப தாகச் சொன்னாள், பதில் கொடுக்கவேண்டுமென்று மோடிலால் கேட்டான்; அவரந்தப்படியே ஒருகடிதமெழுதிக் கொடுக்க, அதை வாங்கிக்கொண்டுபோய் சுகதேவியிடங் கொடுத்தான். அவள் தான் சொன்னபடி நாலணாவை மோடிலாலிடங் கொடுத்தனுப்பினாள்.

சுகதேவியம்மாளுக்குக் குறிப்பிட்ட கலியாணதினம் சமீ பித்துவிட்டதால் காலதாமதஞ் செய்யக்கூடாதென வெண்ணி சுந்திரலால் அன்றயதினமே ரயிலேறி அலகபாத் நகரத்துக்கு வந்து ஜனசந்தடி ஜாஸ்தியாக வில்லாத வொரு தெருவில் ஓர் மாடி வீடொன்று வாடகைக்குப் பேசி ஒருமாத வாடகைத் தொகை ஐம்பது ரூபாய் வீட்டுக் குடையவனிடங் கொடுத்தது மன்றி, ஸ்நானமுதலியன வற்றிற்கு வேண்டிய பாத்திரங்களும் வாங்கிவைத்துவிட்டு உடனே காசிக்குத்திரும்பி வந்து உயர்ந்த பூனிபார முடிப்பு பூட்ஸ் முதலானதும் எழுபத்தியைந்து ரூபாய்க்கு வாங்கினார். இவர் சுகதேவியின் கலியாண தினத்துக்கு முத னாள் மகதேவியம்மாள் வீட்டுக்கு வந்துபார்க்க பதினாயிரக்கணக் காகத் தொகை செலவழித்து யானைக் கொட்டாரம் குதிரைக் கொட்டார முதலிய கொட்டகைகள் மிகுந்த சிறப்பாய் ஜோடிக் கப்பட்டிருக்கிறதும், திரளான ஜனங்கள்வந்து வேலைகள் செய் வதையுங் கண்டு மிகுந்த பயங்கொண்டு, விசேஷ ஜனக்கூட்ட மாக விருக்கும்போ லிருக்கிறதே, இவர்களுக்குத் தெரியாமல் எவ்விதம் போய் சுகதேவியைக் கொண்டுவருகிறதென மிகுந்த ஏக்கங்கொண்டு, சிந்தாகலங்கி, தன் வீட்டிற்கு வந்து மிகுந்த

விசனத்துடன் படுத்திருந்தார். பின்பு ஒருவாராகத் தெளிந்து அன்றிரவு தன்வீட்டிலெல்லோரும் போஜனஞ்செய்து படுத்த பிற்பாடு அத்தெருவிலுள்ள முனிசிபல் லாந்தர் வேலைபார்ப்பவனிடம்வந்து, அவனிடமுள்ள ஏணியை இரவலாகக் கொடுக்க வேண்டுமென்றும், தன்வீட்டுப் பரணிலுள்ள சில சாமானெடுத்துக்கொண்டு அன்றிரவே ரயிலுக்குப் போகவேண்டிய அவசரக் காரியமிருக்கிறதென்றும், காலையில் கொண்டுவந்து கொடுத்து விடுவதாகவுஞ் சொல்லி லாந்தர் மரமேறு மேணியை எடுத்துக்கொண்டு வீடுவந்து சேர்ந்தார்.

பின்பு தான் லாந்தர் தொடைப்பவன்போல் ஒரு அழுக்கு வேஷ்டி பீற்றல் சட்டை போட்டுக் கொண்டும் ஒரு கள்ளிப் பெட்டியில் முதநாள் வாங்கின ஆபரண முடிப்புகள், தன்னுடைய உடுப்புகள் முதலியவற்றைவைத்து அதன்மேல் சில கிழித் துணிகளைப்போட்டு அப்பெட்டியைத் தலையிற் றூக்கிக் கொண்டும், ஏணியைத் தோளில் மாட்டிக்கொண்டும், இராத்திரி பன்னிரெண்டு மணிக்கு சுகதேவியம்மாள் வீட்டை நோக்கிச்சென்றார். இவரைப்பார்த்த ரோந்துவரும் போலிஸ் சேவகர்கள் முனிசிபல் லாந்தர் தொடைப்பவனென்று இவரை யாதொன்றுங் கேட்கவில்லை. இவர் சுகதேவியம்மா ளிருந்தமாடிக்கு நேராகப் பின்புறத் தோட்டத்துப் பக்கமாகப் பார்த்து யாதொருவரு மில்லாதிருக்கக் கண்டு சுவற்றில் அந்த ஏணியைச் சாற்றி மிகுந்த பத்திரமாயேறி கள்ளிப்பெட்டியை அச்சுவற்றி லிறக்கி வைத்துவிட்டு அந்த ஏணியைத் தூக்கித் தோட்டத்துக்குள் வைத்துக் கள்ளிப் பெட்டியை முன்போல் தலையில் தூக்கிவைத்துக்கொண்டு, மெதுவாயிறங்கி அவ்விடத்திலேயே அப்பெட்டியை வைத்துவிட்டு மாடிக்குச் சமீபமாக வந்து தான் வந்திருப்பதைத் தெரிவிக்க வேண்டியதி னிமித்தம் மெதுவாக ஒரு பிகில் கொடுத்தார். இவர் வரவை யெதிர்பார்த்துக்கொண்டு கண்ணுறக்கம் வாராமல் காத்துக்கொண்டிருந்த சுகதேவி இந்த பிகில் சப்தத்தைக் கேட்டவுடன் கைப்பிடி லாந்தரைக் கொளுத்திப்பார்க்க சுந்திரலால் அழுக்கு வேஷ்டி பீற்றல்சட்டையுட னிருப்பதைக்கண்டு புன்சிரிப்புக்கொண்டு, ஓர் இரும்பு சன்னலில் நூலேணியின் ஓர்தலைப்பைச் செவ்வையாக இறுக்கிக்கட்டி மற்றோர் தலைப்பில் தன்னுடைய புடவை முதலியதுள்ள ஓர் பெரிய தோல் பையைச் செவ்வையாகக்கட்டி அதை சப்தப்படாமல் மெதுவாகக் கீழேவிட்டாள்.

கீழே நின்ற சந்திரலால் அந்தத் தோல்பையை யவிழ்த்துக் கீழே வைத்துவிட்டு, அத்தலப்பை அங்குள்ள ஓர் நார்த்தமரத்தினடியில் கெட்டியாகக் கட்டிவிட்டார். சுகதேவி இந்த ஏணியை யிழுத்துப்பார்த்து மிக உறுதியாயிருப்பதாகத் தெரிந்து மெதுவாக அடிமேல் அடிவைத்துக் கீழே யிறங்கினாள். சந்திரலாலும் இந்த ஏணியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு நின்றார். இவளிறங்கிய வுடன் சந்திரலாலைப் பார்த்து நாம்வெளியே சுவரேறி யெவ்விதம் போகலாம்; பீட்சேவகர்கள் கண்டால் விடமாட்டார்களே! இதற்கென்ன செய்யலாமெனக் கேட்டாள். உடனே யவர் தான் கொண்டுவந்த யூனிபார முடுப்புகளை யெடுத்துக்கொடுத்து யுடுத்திக் கொள்ளும்படி சொல்ல அவளந்தப்படி காலுக்கு பூட்ஸ் ஸ்டாக்கிங்ஸ், டிராவுஷரிந்து ஜாக்கெட் கோட்டுகள் போட்டுத் தலைமயிர் தெரியாமல் 20 கெஜ நீளமுள்ள தலைப்பாகையைத் தலையெங்கும் சுற்றினாள். சந்திரலாலும் தான் கட்டியிருந்த அழுக்கு வேஷ்டி முதலியதை யவிழ்த்தெறிந்து விட்டுத் தன்னுடைய உடுப்புகளைப் போட்டுக்கொண்டு அவர்களுடைய மற்றெல்லா வுடுப்புக்களையும் தோல்பைக்குள் வைத்துப்பூட்டி அதைத் தன் தலையிற் றாங்கிக்கொண்டு ஏணியின் மேலேறி சுவற்றில் அந்தப் பையை வைத்துவிட்டு அந்த ஏணியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு சுகதேவியை ஏறச்செய்தார். அவள்மெதுவாகச்சுவற்றிலேறி யுட்கார்ந்தவுடன் இவர் தன்தலையில் முன்போல் தோல்பையைத் தூக்கிவைத்துக்கொண்டு அந்த ஏணியை மெள்ளத் தூக்கி வெளியில் வைத்து சப்தப்படாமல் கீழேயிறங்கி அந்த ஏணியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு சுகதேவியை இறங்கச் செய்தார்.

இவர்களிவ்விதம் வெளியில் வந்தவுடன் சந்திரலால் தோல்பையைத் தூக்கிக்கொண்டு முன்செல்ல, சுகதேவி பின்னால் அன்னம் போல் நடந்து சிறுபிரம்பைப் பிடித்துக்கொண்டு போகையில் பீட் கான்ஸ்டேபிலொருவ னெதிரில்வந்தான். இவனைக்கண்டவுடன் சுகதேவி பயந்து நம்மையாரென்று கேட்டால் என்ன சொல்லுகிறது என சந்திரலாலைக் கேட்க, அவர் நீ யாதொன்றுக்கும் பயப்படவேண்டாம், நான் பேசிக்கொள்ளுகிறேனென்று சொல்லி அந்தச் சேவகன் சமீபத்தில் வந்தவுடன் அவனைப்பார்த்து "ஜட்காவண்டிகள் நிற்குமிட மெங்கே யிருக்கிறது; எஜமான் இந்த மெயிலில் வண்டிக்குப்போக வேண்டியவர்களென்று

சொற்ப வதிகாரத்துடன் கேட்க, அவன் சந்திரலாலுக்குச் சமீப மாக வந்து இவர்கள் யாரெனக் காதுடன்கேட்டான்; இவர்கள் தகுந்த பெரிய மனுஷாளுடைய குமாரர்; பொர்சின் பேரில் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேலையாயிருக்கிறதென்று சொல்ல, கான்ஸ்டேபில் ஜட்காவண்டி அதிக சமீபத்தில்தா னிருக்கின்ற தென்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். அவன் குறிப்பிட்டுச் சொன்ன விடத்துக்கு இவர்களிருவருஞ்சென்று அதிவேகமாகப் போகக்கூடிய வண்டியொன்றுபிடித்து அதிலேறிக்கொண்டு ரயில் வேஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தார்கள். ரயில்வருவதற்கு அரை மணி நேரஞ் சென்றபடியால் அவர்களிருவரு மோரிடத்தி லுட் கார்ந்துகொண்டு தங்களை யாராவது பார்க்கப் போகிறார்களோ வென்று மிகுந்தபீதியுடன் சுற்றுப்பக்கங்களில் பார்த்துக்கொண் டிருந்தார்கள். பின்பு சந்திரலால் தன்னிடம் பாக்கியாக விருந்த பவுன்களைக் கொடுத்து அலகபாத்துக்கு முதலாவது வகுப்பு டிக் கெட்டுகள் கேட்டார். புக்கிங் கிளார்க்கு பவுன்வாங்குகிற தில்லை யெனச் சொல்ல, இவர் தன்னிடத்தில் பணமில்லை யென்றும், அவசரமாகப் போகவேண்டி யிருக்கிறதென்றும், பவுன் விலைக்கு இரண்டுரூபாய் பிடித்துக்கொண்டாவது டிக்கெட்டுகள் கொடு மென்றுங்கேட்டார். இரண்டு ரூபாய் லாபங்கிடைப்பதை யுத்தே சித்து சந்திரலால் கேட்ட டிக்கெட்டுகள் கொடுக்க அவைகளை வாங்கிக்கொண்டு முதலாவது வகுப்பு வண்டியிலேறி அலகபாத் வந்து சந்திரலால் தான் வாடகைக்குப் பிடித்திருந்த வீட்டுக்கு அழைத்துப்போய், அவர்களிருவரும் இரவுமுழுதும் கண்விழித் துக்கொண்டிருந்ததால் நித்திரை ஜாஸ்தியாக வரவே அவர்கள் போட்டிருந்த உடுப்புடனே அசந்து தூங்கிவிட்டார்கள். சந்திர லால் முன்னெழுந்து சுகதேவியை யெழுப்பி மேல்மாடியிற் போய்ப்படுத்து நித்திரை செய்யும்படிக்கும், தெருக்கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொள்ளும்படிக்குஞ் சொல்லிவிட்டு, தான் ஹோட்டலுக்குப்போய் ஓர் பரிசாரகப்பையனைத்திட்டஞ்செய்து, தானிருக்கும் வீட்டில் பிரதிதினமும் நாலு அண்டா ஜலம் கொண்டுவந்து கொட்டவேண்டியதென்றும், மூன்று வேளையும் ஹோட்டலிலிருந்து சாப்பாடு கொண்டுவந்து போடவேண்டிய தென்றும், அவ்விதஞ் செய்வதற்கு நாள் 1 க்கு ஒரு ரூபாய் விதங் கொடுப்பதாகவும் பேசித்தீர்மானித்து, அவனை யழைத்து வந்தார். அந்தப் பையனுக்கு வயது பதிமூன்றாக விருந்தாலும்,

அந்த சுறுசுறுப்பாக வேலைசெய்வான். இந்த ராஜகிஷ்ணராவ் பத்துமணிக்கெல்லாம் சாப்பாடு கொண்டுவந்துவைத்து இரண்டு அண்டாக்கள் நிறைய ஜலம்கொட்டிவிட்டுப்போய்விட்டான். இவர்களிருவரும் ஸ்நானஞ் செய்து, நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, சுந்திரலாலை முன்னால் சாப்பிடச்செய்து பிறகு, சுகதேவி போஜனஞ்செய்து தான் மாடியில் படுத்து கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டாள். அதன் காரண மின்னதெனத்தெரிந்த சுந்திரலால் மாடிக்குப் போகாமல் கீழேபடுத்து விட்டார்.

சுகதேவிக்குக் கலியாணஞ்செய்யக் குறிப்பிட்ட தினத்தில் அதிகாலையில் தாதிகளெழுந்து சுகதேவி படுக்குமறையின் கதவைப் பல்முறையுந் தட்டிப்பார்த்தும் யாதொரு பதிலுமில்லாததால் சந்தேகித்து மகதேவியம்மாளுக்கு அறிவிக்க, அவள் திடுக்கிட்டு இவள் படுத்திருந்த அறைக்கு வந்து தன்னால் கூடியவரையிலிறைந்து கூப்பிட்டாள். யாதொருசப்தமுங் கேட்காததால் மிகவும் மனங்கலங்கி, தோட்டத்துப் புறமாகவந்து ஏணிவைத்து யேறிப்பார்க்கும்படிச் சொன்னாள். ஓர்தாதி ஓடிவந்து பார்க்க கயிற்றேணி கட்டியிருப்பதைக்கண்டு ஆச்சரியமடைந்து அதின் வழியாகவே மாடியிலேறிப்பார்க்க சுகதேவியைக் காணவில்லை. அவளுடனே கதவைத் திறந்துகொண்டு வெளியில்வந்து சுகதேவியைக்காணோம், கயிற்றேணிவழியாக இறங்கிப்போய்விட்டதாகத் தெரிகிறதென்று ஓ வென்றலறி யழுதாள். இவ்வார்த்தை கேட்டும் கேட்காமலு மிருக்கும்போதே மகதேவியம்மாள் "ஐயோ" "ஐயோ" வென்று வாயிலு முகத்திலும் வயிற்றிலு மடித்துக்கொண்டு மூர்ச்சையடைந்து விட்டாள்.

சுகதேவி வீட்டைவிட்டுப்போன விஷயம் கலியாணத்துக்கு வந்த உறவின்முறையார் முதலிய யாவருக்குந் தெரிந்து விட்டது. ஒவ்வொருவருந் தேட வாரம்பித்து விட்டார்கள். இது விபரம் மாப்பிள்ளையாகவரத் தயாராயிருந்த வக்கீல் கேள்விப்பட்டு மிகுந்த வருத்தமடைந்து, கவர்ன்மெண்டு உத்தியோகம் போய்விட்டதே; கையிலிருந்த பணமும் போய்விட்டதே; இந்தப் பெண்ணின்பிப்பிராயத்தை நான் முன்னால் தெரிந்துகொள்ளாமல் மோசம்போனேனே; எந்தப்புருஷன்மேல் இச்சைகொண்டு போய்விட்டாளோ தெரியவில்லை; இனியவளை யழைத்துவந்து விவாகஞ்

செய்துவைப்பதாகச் சொன்னாலும் என்னைப்போன்றவர்க ளுடன்
படலாமாவென்றும், பின்னும்பலவாறாகவும், பிரலாபித்துக்கொண்
டிருந்தார். இவர்கள் குடும்ப ஏஜண்டிலொருவரோடிவர்த்து தோட்
டத்தில் ஒருபழயவேஷ்டி பீற்றல்சட்டை ஒரு கள்ளிப்பெட்டி
கரித்துணியுடன் கிடக்கிறது; சுவற்றுக்கப்பால் ஒரு ஏணிவைத்
திருக்கிறது; அதுமுனிசிபல் லாந்தர்தொடைக்கிறவன் ஏணிபோ
லிருக்கிறதென்றார். வக்கில் உடனே அவைக ளெல்லாவற்றையு
மெடுத்துவரச்செய்து, ஸ்டேஷனுபிசரைத் தருவித்து நூறுரூபா
யெடுத்துக்கொடுத்து இந்தவீட்டுப்பெண் மைனர் 14 வயதுள்ள
சுகதேவியை அவள்போட்டிருந்த நகையுடனும், வீட்டிலிருந்த
பணத்துடனும் யாரோவொருவன் சுவரேறிக் குதித்து, கயிற்
றேணிவழியாக மாடியிலேறி, அப்பெண்ணை நகைமுதலியதுடன்
கொண்டுபோயிருக்கிறான்; கூடியசீக்கிரத்தில் கண்டுபிடிக்கவேண்டு
மெனச் சொன்னார். அவர் இந்தத்தொகை எங்கள் படிச்செலவுக்
குக்கூடக்காணாது ; பெரியரூபா பொன்றுவது கொடுக்கவேண்டு
மென்றும், ஏஜண்டு ஒருவரைக்கொண்டு பிராது எழுதிவைக்கவே
ண்டுமென்றுஞ் சொன்னார். வக்கிலுக்கிருந்த ஆத்திரத்தினால் எவ்
வளவுதொகை செலவழிந்தாலும் செலவழியட்டுமென்று பின்னு
மைந்நூறு ரூபா யெடுத்துக்கொடுத்து, இந்தத்தொகையை வைத்
துக்கொண்டு வேலையைப் பாருங்கள்; பின்னால் திருப்திகரமாய்ச்
செய்துவைக்கிறே னென்றுசொல்லி, ஏஜண்டொருவரையும் அவ
ருடனனுப்பினார். அவர் மேற்சொன்ன தடயங்களை யெல்லாம்
போலீஸ்டேஷனுக்கு எடுத்துவரச்செய்து, நடந்த விஷயங்களைப்
பற்றி அந்த ஏஜண்டிடம் பிராது எழுதிவாங்கினார். சுகதேவி
யோடிப்போனவிஷயம் அப்பட்டணமெங்குந்தெரிந்து எல்லோரு
மந்த ஆச்சரியத்தை வந்துபார்க்கக் கூடினார்கள். அந்த டிவிஷன்
போலீஸ் இனிஸ்பெக்டருக்கு இதுவிபரந்தெரிந்து அந்தவீட்டி
லுள்ளவர்களைவிசாரித்ததில் இதுவிஷயமாய்பிராதுகொடுக்கஸ்டே
ஷனுக்குப் போயிருப்பதாகத் தெரிந்து அங்கே போனதில் ஸ்டே
ஷனுபீசர் ஏஜண்டிடம் பிராது எழுதிவாங்கிக் கொண்டிருந்தார்.
இனிஸ்பெக்டர் அந்தப் பெண்ணுக்கு நெருங்கிய பந்துக்கள் ஆண்
வார்சுகள் யாரிருக்கிறார்க ளென்றுவிசாரிக்க, தாய்மாமன் ஹரிநாத்
என்பவ ரிருப்பதாகத் தெரிந்தது. உடனே யவரைத் தருவித்து
அவர் தமக்கை மகளுக்கு வயதென்ன விருக்குமென்று கேட்டார்.
அவர் 16-அல்லது 17-வயதிருக்குமென்று சொல்ல " அந்தப்

பெண்ணை யாருக்குக் கொடுப்பதாக நிச்சயித் திருந்தார்கள். உமக்குக் கலியாணஞ் செய்யும்படியான பிள்ளைக ளிருக்கிறதா வென்று ஹரிநாதத்தைக்கேட்டார். ஹைகோர்ட்டு வக்கீல்முனிசிப் வேலைபார்த்த லெகராஜ்சிங் என்பவருக்குக் கொடுப்பதாக நிச்சயித்திருந்தது; எனக்கும் பெரியபிள்ளை யிருக்கிறான்; அவனுக்கும் இந்த முகூர்த்தத்துடன் சேர்த்து நடத்திவிட நினைத்திருந்தேன் என்று சொல்லிவாய்மூடுமுன், இனிஸ்பெக்டர் இந்தஹரிநாத்கன்னத்தில் ஓங்கி இரண்டு அறைகள் கொடுத்து "திருட்டுப் பயலே, போக்கிரிப்பயலே, பெண்ணையெங்கே கொண்டுபோயொளித்து வைத்திருக்கிறாய்; உன்பிள்ளைக்குக் கொடுக்க வில்லையென்று அடித்துக்கொண்டு போய்விட்டாயோ; பெண்ணுக்குப் பதின்மூன்று வயதுதானே யாகிறது; சட்டம்படித்துக் கொண்டு வந்து வயதுபதினாறு பதினேழென்று சொல்லுகிறாயோ வென்று திட்டியும், பூட்ஸ் காலாலுதைத்தும், ஒரு கானிஸ்டேபிலைக் கூப்பிட்டு இந்தக்கடியனைத் தனிமையி லழைத்துப்போய் செவ்வையாய் விசாரித்து இழுத்துக்கொண்டுவா வென்று சொன்னதுடன் மற்றொரு கானிஸ்டேபிலை யழைத்து, இவன்மகனெங்கே யிருக்கிறானென்று விசாரித்து அந்தப்பயலையும் இழுத்துக்கொண்டுவா வென்று ஆக்ஞாபித்தார். ஸ்டேஷனுபீசர் தான்கொண்டுவந்த தடயங்களைக் காண்பிக்க முனிசிபல் லாந்தர் ஏறுகிறவனுடைய ஏணியையும், அவனுடைய கரித்துணியையும் பார்த்து, அந்தக் கலியாணவீடுள்ள முனிசிபல் வார்டில் யார்யாருக்கு ஏணிகைவசமிருக்கிறது; யாருக்கில்லையென்று விசாரித்து, ஏணியில்லாதவனையிழுத்துக்கொண்டுவரும்படிச் சொன்னார். கலியாணப் பெண்ணினிடத்தில் யாரார்சமீபத்தில் அடிக்கடிவந்து பேசிக்கொண்டிருந்தார்களென்று அந்தவீட்டு வேலைக்காரி முதலியவர்களை விசாரித்ததில் அநந்தியம்மாள்.பிரதிதினமும் வந்து போய்க்கொண்டிருந்ததாகவும், அவள்தம்பி சிறுபையன் எப்போதாவது வந்துபோவானென்றுந் தெரிந்தது; அதனாலந்த அநந்தியம்மாளையும் அவள் தம்பி மோடிலாலையும், சிலகானிஸ்டேபில்கள் போயழைத்துவந்தார்கள். இந்த அநந்தியம்மாளை இனிஸ்பெக்டர் "சுகதேவியம்மாள் போயிருக்கிறவிடந் தெரியுமா" வென்று முதலில் நயமாகவும் பின்பு பயமுறுத்தியுங் கேட்டார். அவள் "எனக்கு யாதொரு சங்கதியுந் தெரியாது; அவளுக்கு நான் படிப்பு சொல்லிக்கொண்டிருந்த பழக்கத்தாலும், சினேகத்தாலும், அடிக்கடி வந்து பே

சிக்கொண்டிருப்பதுண்டு; அவனுடைய தாயார் சொற்படிக் கேட்கும்படி நான் அநேகபத்திரிகைகளைச் சொல்வதுண்டெனச் சொன்னான்; இவனைவிசாரித்துக் கொண்டிருக்கையில் மோடிலாலே ஒரு கானிஸ்டேபில் அழைத்துப்போய் விசாரித்தான்; அவன் தன் தமக்கையுடன் அந்தவீட்டுக்குப் போயிருக்கிறேன், வேறொன்றுந் தெரியாதென்று சொல்ல; அவனை ஒரு அறைக்குள் அழைத்துப் போய் கத்தி ஈட்டி முதலியவைகளைக் காட்டிப் பயமுறுத்தியும், தொடையில் திருகியும், உண்மைசொல்லாவிட்டா லுதைப்பேனென்றான். மோடிலால் நடுநடுங்கித் தன்தமையன் சந்திரலால் அடிக்கடி கடிதமெழுதிக் கொடுத்ததையும், சுகதேவி பதிலெழுதிக்கொடுத்ததையுஞ் சொன்னான். இந்த விபரத்தை இனிஸ்பெக்டருக்குத் தெரிவித்தவுடன் அவர் சந்திரலால் எங்கேயிருந்தாலும் இழுத்து வாவென்று உத்திரவு செய்தார். இவனை யப்பட்டணமெங்குந் தேடிப்பார்த்து அகப்படவில்லை; இதனால் இவனுமவளுஞ் சேர்ந்து ஓடிப்போயிருக்கவேண்டுமென்று நினைத்து, ரயில்வே ஸ்டேஷனுக்குப்போய் புக்கிங்கிளார்க்கு பிளாட்பாரம் இனிஸ்பெக்டர் முதலியவர்களைக்கண்டு ஒரு சிறுபெண்ணும் பதினெட்டு பத்தொன்பது வயதுள்ள பையனும் முதலாவது இரண்டாவது வகுப்பு டிக்கெட்டுகள் வாங்கிக்கொண்டு இராத்திரி வண்டியிலேறினார்களா? எந்தவூருக்குப் போனார்கள்? விசாரித்துவாவென்று சிலகானிஸ்டேபில்களை யனுப்பினார்; இதற்குள் ஹரிநாத் மகனையடித்தும் வைது மிழுத்துவந்து ஹிம்சித்தார்கள். சந்திரலாலுடன் போயிருப்பானென்ற ருஜுவேற்படக் கூடியதாக விருந்தபடியால் சில கானிஸ்டேபில்கள் ஹரிநாத் அவன்மக னிருவரையும் ஹிம்சித்து இரண்டாயிரரூபாய் கொடுத்தாலவர்களை விட்டுவிடுவதாகப் பேசி ஆயிரரூபாய் வாங்கிக்கொண்டு அவர்களையடித்துத் துன்பஞ்செய்யாமல் விட்டுவிட்டார்கள். ஏணியில்லாத லாந்தர்தொடைப்பவனை விசாரிக்க அவன் சந்திரலால் தன்னிடம் முதனாளிராத்திரி ஏணி இரவலாக வாங்கிப்போனதாக வொப்புக் கொண்டான். ரயில்வே ஸ்டேஷனுக்குவிசாரிக்கப்போயிருந்த கானிஸ்டேபில்கள் திரும்பி வந்து முதனாள் இராத்திரி இரண்டுமணிக்கு இரண்டுவாலிபர்கள் அலகபாத்துக்கு முதலாவதுவகுப்புட் டிக்கெட்டுவாங்கிப் போனதாகவும், ரூபாயில்லாமல் பவுனுகள் கொடுத்ததாகவும் விசாரித்ததில் தெரிந்ததாகச் சொன்னார்கள்; உடனே இனிஸ்பெக்டர் ஹரிநாத்தைக்கூப்பிட்டு [illegible]

அவர் பவுன்தான் முப்பதினுயிரரூபாய்க்குப் போய்விட்டதென் றும், முத்தாரம் வயிரக்கொத்து முதலிய நகைகளில் ஐம்பதினுயி ரத்துக்குப் போய்விட்டதென்றுஞ் சொன்னூர். அதன்மேலில் இந்த ஹெரிகாத்திடத்தில் ஒருபிராது எழுதிவாங்கினூர். அதில் மகாராவி பதினேழாந்தேதி இராத்திரி சுந்திரலால் சுகதேவியம்மாள் தோட் டத்தின் சுவரிமேலேறியும், அந்தவீட்டின் மாடியிமேலேறியும், சுகதே வியென்ற விவாகமாகாத பதினுறுவயதுள்ள பெண்ணைத் தூக்கிக் கொண்டும், அந்த அறையிலுள்ள நகைகள் சுமார் ஐம்பதினுயிர ரூபாய் பெறுமான முள்ளதும், பவுன் இரண்டாயிரமுங்கொண்டு போய்விட்டதாகவும், அவன் தமக்கை அநந்தியம்மாள் அவனுக்குத் துப்புச்சொல்லிக் கொடுத்து உடந்தையாக விருந்ததாகவும், அவன் மூலமாக பெண்ணுக்குப் போதை வஸ்துவைக்கொடுத்துப் புத்தி மயங்கச்செய்து தூக்கிக்கொண்டு போய்விட்டதாகவும் கண்டிருந் தது. அந்தப்பிராது இ. பி. கோடு 363-வது செக்ஷன்படி பெருங் குற்றமாகையால் அநந்தியம்மாளை ஜெயிலில் வைத்துவிட்டு சுந் திரலாலைப்பிடிக்க வாரண்டுக்கட்டளை பிறப்பித்தார்கள். அந்த வாரண்டைப் பெற்றுக்கொண்டு இரண்டு கானிஸ்டேபில்கள் அலகபாத்துக்கு வந்து அவ்வூரிலுள்ள ஒவ்வொரு ஹோட்டலுக் கும் போய் யார் யார் ஹோட்டல்களில் சாப்பிட வருகிறார்க ளென்று வேஷம் மாறிக்கொண்டு பார்த்துவந்தார்கள்.

சுகதேவியம்மாள் சுந்திரலால் இவ்விருவருடைய அங்கமடை யாளங்களை யெல்லாங்குறித்து வாங்கிவந்த இரண்டு கானிஸ்டே பில்களு மவ்விபரங்களை யந்தப்பட்டணத்துப் போலீஸ் உத்தியோ கஸ்தர்களுக்குமறிவித்திருந்தார்கள். சுந்திரலால் அந்தப்பட்டணத் துக்குவந்த மறுதினம் சுகதேவியைப் பார்த்து "நான் உன்னை உன் கோரிக்கையின்படி எனக்கு முனக்கு மிருந்த பாலிய சிநேகத்தி னூல் கொண்டுவந்துவிட்டேன்;(உன்வீட்டிலுள்ளவர்கள் உன்னைக் காணுமையால் என்னைத்தேடிப் பார்த்து என்னுடன்தான் வந் திருப்பாளென்று என்மேலில் ஏதாவதுபிராது செய்திருப்பார்கள்.) எனக்குக் காலம்போக்க யாதொரு வேலையுமில்லை; வாசிக்கவும் புஸ் தகம் பத்திரிகை முதலியன கிடையா ; இனிநாம் செய்யவேண் டிய வேலை யின்னதெனத் தெரியவில்லை; நீயோ தனியா யாதொ ருவரிடத்திலும்பேசாமல் ஜெயிலிலிருப்பதுபோலிருக்கிறாய்; இனி நீ என்னசெய்யவுத்தேசம் ; என்புத்திகுந்தசஞ்சலப்படுகிறது" எனக்கேட்க, சுகதேவி சற்றுநேரம் பேசாதிருந்து தாரை தாரை

யாகக் கண்ணீர்சொரிந்து "இவ்வுலகில் ஸ்திரீ ஜென்மத்தைப்
போல் பாபமான ஜென்மங்கிடையாது; விவாகமாகும் வரையில்
பெற்றோர்சொற்படி கேட்கவேண்டும்; விவாகமானபின், புருஷன்
சொற்படி கேட்கவேண்டும்; தெய்வகதியாக விதவையாகப் போய்
பிள்ளைகளிருந்தால் அந்தப் பிள்ளைகளிடமிருக்கவேண்டும்; பிள்ளை
யில்லாவிட்டால் பழயபடி பெற்றோரிடத்திலாவது, சகோதரர்க
ளிடத்திலாவது இருக்கவேண்டும்; இப்படிக்கின்றி தனித்திருக்க
விரும்புகிறவள் இல்லறம் நடத்தும் குடும்பத்திலுள்ள பெண்ணு
காள்; வெளிப்பட்டவளாகவே யெண்ணப்படுவாள்; நான் தற்கா
லம் என்விட்டைவிட்டு வெளிப்பட்டது மிகுந்த பிசகான காரிய
மென்பதர்க்குச் சந்தேகமே கிடையாது; என்னுடைய சம்மதியன்
னியிலும், எனக்கு எந்த விஷயமுந் தெரிவிக்காமலும், எனக்
குரியநாயகன் என்னகுணம் என்ன நடையுடையவரென்று நான்
தெரிந்துகொள்ள ஹேதுவில்லாமலும், மோசடியாகவும், என்னை
மிகுந்த அலக்ஷியஞ்செய்தும், முகூர்த்த மேற்படுத்தியதால்
மணம்புரிய வருபவர் என்னை மாடாக மதித்து நடத்துவா ரென்
றும், அவ்விதம் செய்யும்பட்சத்தில் நான் மனோவியாதியாலுட
னே இறந்துவிடக் கூடியதாகவிருக்கு மென்று மாலோசித்து,
என்னைப் பலர் அவமதித்தாலும் அவமதிக்கட்டும்; என்மனச்
சாக்ஷிக்கு விரோதமன்னியில் நான் நடந்து கொண்டால் ஈஸ்வர
னெந்தவிதத்திலுங் காப்பாற்றுவார்; எந்த தேசமாவது சென்று
பெண்பிள்ளை பள்ளிக்கூடத்தி லுபாத்தியாயராக விருந்து காலத்
தைக்கழிப்போம்; என்னைப்போல் மிகுந்த செல்வவந்தராயுள்ள
குடும்பத்தி லுள்ளவர்களைத்தான் விவாகஞ் செய்துகொள்ள
வேண்டு மென்பது எனது கருத்தல்ல; சுதேச பக்தியுடையவ
ராயும், புண்ணியமான தொழில்களைச் செய்து ஜீவிக்கிறவராயும்,
சபல புத்தியில்லாதவராயும், இல்லறதருமங்கள் நடத்தும் வகை
யின்னதென நன்றாய்த் தெரிந்தவராயும், என்மனதுக்குப் பிடித்த
வராயும், என்னை ஆயுள்பரியந்தங் காப்பாற்றி என்னை யன்
புடன் நடத்துகிறவராயு மிருக்கும்பட்சத்தில் அவரைத்தான்
புருஷனாகக் கொள்வேன்; மற்றெல்லோரையும் சகோதரர்களாக
வும், தகப்பனாகவும் நினைத்து, அவர்களுக்குரிய தொண்டுழியங்
களைச் செய்வேன்; நீங்கள் சொல்லுகிறபடி என்னை ஜெயிலிலடைத்
தது போல்த் தானிருக்கிறது; வேலைக்காரி யொருத்தியைச் சீக்
கிரந் திட்டஞ்செய்யவேண்டும்; இப்போது நான் கொண்டுவந்த

தொகைதான் எனக்குள்ள ஆஸ்தி; இனிநான் என் தகப்பன் விட்டுக்குத் திரும்பிப்போகேன்; அவர்கள் சொத்தையு மபேக்ஷிக்கமாட்டேன்; இந்த நகரில் பெண்பிள்ளை பள்ளிக்கூட உபாத்தியாயர் வேலையேதேனுங் காலியாகவிருந்தால் விசாரித்து வாருங்கள்; அவ்வேலைக்குப் பிரயத்தினங்கள் செய்வோம்; ஸ்வல்ப சம்பளமாகவிருந்தாலும் தற்காலம் போதுமானது; பொழுது போக்குவதற்கு அதுதான் எனக்கு நல்லவழியாகத் தோன்றுகிறது; உங்களுக்கு மேதாவது உபாத்தியாயர் வேலையகப்பட்டால் பாருங்கள்; இல்லாவிடின் பிரதிதினமும் கடைகளுக்குப்போய் எந்தெந்த வியாபாரங்கள் இவ்வூரில் மிகுதியாய் நடக்கிறது; எதெதில் செட்டு ஜாஸ்தியாய்க் கிடைக்குமென நன்றாய்த் தெரிந்துகொள்ளுங்கள்; தரகு வியாபார மெத்த நன்மை; அதையுங் கவனியுங்கள்; நீங்களுங் கூடிய சீக்கிரத்தில் ஒருதொழிலைச் செய்யவேண்டும்; வீண்காலம் போக்கினால் புத்தி கெட்டுப்போம்; சோம்பலுண்டாகும்; மனதுக்கு உற்சாகமுண்டாகாது; நாமிருவரும் பாலியத்தில் எவ்வளவு சுருசுருப்பாக வாசித்தோமோ அதுபோலவே இப்போதும் வேலைபார்க்கவேண்டும்; நமது பாலியசினேகத்தை நாம் நம்முடைய ஆயுள்பரியந்தம் மறவாமலிருக்கும்படி ஜெகதீசனைப் பிரார்த்தித்து வருகிறேன்; வேலைக்காரி இன்றயதினமே திட்டஞ் செய்யுங்கள்" எனச்சொன்னாள். இவள் கடைசியாகச் சொன்ன வார்த்தையின் கருத்தை யோஜித்து யோஜித்து இவளிஷ்டப்படி தேசபக்தியிற் சிறந்து சுதேசத் தொழில்களைச் செய்து திரவியங்களைச் சம்பாதிக்கும் பக்ஷத்தில் இவளுடைய மனம்வேறெவரிடத்திலுந் திரும்பாது; இவளது நோக்கத்தைப் பூர்த்திசெய்து இவளைச்சந்தோஷப்படுத்த வேண்டுமெனத் தீர்மானித்து, இனிநாம் அன்னியநாட்டுத் துணிகளைக் கட்டிக்கொள்வதில்லை; அன்னியநாட்டு ஆகாராதிகளை யருந்துவதில்லை; சுதேசசாமான்களையே வாங்கவேண்டும்; அச்சாமான்கள் சம்பந்தமான வர்த்தக முதலிய தொழில்களைச் செய்யவேண்டுமென ஓர்விதபிரதிக்கினை செய்துகொண்டு, கடைக்குப்போய் சுதேச வஸ்திரங்கள் சட்டை முதலியன வாங்கிவந்து அவைகளைத்தரித்து தன்னிடமிருந்த சீமைத்துணிசட்டைமுதலியனவற்றைக்கொளுத்திச் சாம்பலாக்கினார். இவ்விதங் கொளுத்திய காரணமின்னதென்பதை யறிந்த சுகதேவி சுந்திரலாலைப் பார்த்துத் தன்கண்களில் ஆனந்தபாஷ்யங்கள் பொழிய "நீங்கள் இன்றுதான் நம்பாரதமாதாவுக்குப் புத்திரனானீர்கள்; நம்முடைய

தாய் இன்றுமுதல் உங்களிடத்தில் மிகுந்த வன்புடையவளாகி நீங்கள் கோறிய காரியங்களனைவற்றையும் எவ்வித விக்கினமு மின்றி முடிப்பாள்; தெய்வபக்தியிலும் தேசபக்தியே சிறந்தது; இப்பக்தியிற் சிறந்தவர்களுக்கு எவ்வித யிடையூறுகள் வரினு மவைகளை யெவ்விதத்திலும் லக்ஷியஞ்செய்யாமல் நம் பாரதமாதாவையே தியானித்துக்கொண்டு, ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருப்பார்கள்; இன்று முதல் நம்முடைய தேசநன்மைக்கு எதெது செய்ய வேண்டுமோ அதுதையே செய்யவேண்டும்" என்று சொல்ல சுந்திரலால் மிகுந்த சந்தோஷத்துடன் நான் இன்று செய்த வைராக்யத்தை நெடுநாளும் நிறைவேற்றிவிடுவே னென்பது சத்தியம்! சத்தியம்! சத்தியம்! ஆகாயவாணி பூமிதேவியறியச் சொல்லுகிறேன்! நீயுமந்தப்படி வயிராக்கியஞ் செலுத்துவாயா? எனக்கு வேண்டிய வுதவிகள் புரிவாயா வென்றுகேட்க சுகதேவி "தேசபக்தி விஷயம் நான்தானே தங்களுக்குச் சொன்னேன்! நான்சொல்வதொன்று நடப்பது வேறாக விருக்குமா? ஸ்திரீகளுக்கு ஸ்திரபுத்தியில்லை யென்று சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது தங்களுக்குத் தெரிந்திருக்கலாம்; அவர்களில் நானு மொருவள்தானே; மேலும் எனக்குத்தங்களைபோல் சொற்பம் வயது ஜாஸ்தியாகிவிட்டால் புத்தி ஒருவிதத்தில் ஸ்திரப்படு" மென்றாள்.

சுகதேவிசொல்லும் ஒவ்வொரு வார்த்தைகளுக்கும் மிகுந்த பொருளாழ மிருப்பதை யூகித்து "ஆஹா! என்னுடைய வாழ்நாளை இவளிடத்தில் கழிக்காமல்போனால் நானிந்த மானிடஜென்மமெடுத்ததின் பிரயோஜனமென்ன; தாயைப்போல் எனக்கு எவ்வளவோ புத்திமதிகளைச்சொல்லுகிறாள்; என்னுடைய செய்கைகளைப்பற்றிக் கொண்டாடி சினேகிதரைப்போல் மிகுந்த பிரியமாகப் பேசி மனதை யுற்சாகப்படுத்தி விடுகிறாள்; இனி இவள் என்னைக் கொலைசெய்தாலும் இவளைவிட்டு வேறிடம் போகக் கூடாது; இவள் முகத்தையும், அமிர்தம்போன்ற வாக்கையும், கேட்டுக்கொண் டிருந்தால் ஆகாரங்கூட வேண்டியிருக்காதே! ஏ காசி விசுவேசா! ஏ தீனதயாளோ! ஏ ஜெகத்ரெக்ஷகா! என் மனக்கோறிக்கையை யெப்போது முடிக்கப்போகிறாய்! என்று பலிதமாக ஈஸ்வரனைப் பிரார்த்தித்தார். இவர் அன்றைய தினம் சாயங்காலம் கடைத்தெருவுக்குச் சென்று என்னென்ன சாமான்

கள் ஜாஸ்தியாக விற்கப்படுகிறது; எவையெவை சரசமான விலைக்குக் கிடைக்குமென விசாரித்தார்; மறுநாளும் போஜனஞ்செய்த பின் அந்த நகரிலெங்கெங்கே கடைகளிருக்கின்றனவோ அவ்விடங்களை யெல்லாஞ் சுற்றிப்பார்க்க வாரம்பித்தார்; ஒவ்வொரு சரக்குகளும் மொத்தமாக விற்கப்படும் தொகைக்கும், சில்லரையாகவிற்கப்படுந் தொகைக்கு மென்ன வித்தியாசங்க ளிருக்கிறதென்பதற்குக் கணக்கெடுத்தார்.

இவ்வித மிவர் இரண்டு மூன்று நாள் கடைகளுக்குப் போய் பார்த்துவிட்டு ஒரு ஹோட்டலில் டீபன் சாப்பிடப் போனபோது அங்கேயுட்கார்ந்திருந்த ஒருவன் இவரைச்சற்றுநேர முற்றுநோக்கி, உங்களைக் காசியிற்பார்த்த ஞாபக மிருக்கிறதே; இங்கே என்ன வேலையாகவந்தீர்களென்றுகேட்டான். இவனுக்கு யாதொருஉடுப்புமில்லாம லிருந்ததால் சுந்திரலாலுக்கு இவனிடத்தில் எவ்வித சந்தேகமு முண்டாகாமல் நானிவ்வூருக்கு ஒருவியாபார விஷயமாக வந்தேனென்று பதிற் சொல்லிவிட்டு டீபன் சாப்பிடப்போய் விட்டார். இவர் காசியென்று சொன்னவுடன் வாரண்டுப்பேர்வழியிவராகத்தா னிருக்குமென்று நிச்சயித்து, இவர் சாப்பிட்டு வெளியே வந்தவுடன் இவர்கையைக்கெட்டியாகப் பிடித்துக்கொண்டு "உங்களை நானடிக்கடி பார்த்திருக்கிறேன்; இராமதாஸ்த் தெருவில்த்தானே உங்கள்வீடு; உங்கள்பெயர் சுந்திரலாலென்று ஞாபகமிருக்கிறது. அந்தபெயர்தானே தங்களுக்கென்று நன்றாய்த்தெரிந்தவர் கேட்பதுபோல் கேட்க, இவர் பதில்சொல்ல சற்றேமயங்கினார். இவர்முகக்குறிப்பை நன்றாய்ப்பார்த்த மற்றொருவன் தனது போலீசு உடுப்புகளை மாட்டிக்கொண்டு இவர்கையைகெட்டியாகப் பிடித்துக் கொண்டவுடன், சுந்திரலால் "நீ எதற்காகக் கையைப் பிடிக்கிறாய்; கையை விட்டுவிடெனத் திமிர மற்றொருவனும் கையைப் பிடித்துக்கொண்டான்.

இவர்களிவ்விதம் சச்சரவு செய்துகொண்டவுடன் ஜனங்கள் கூட்டங்கூடிற்று. அந்த ஹோட்டல்காரன் போலீசானிடம் வந்து இவரை யெதற்காகப் பிடித்தாயெனக் கேட்க, இவர் ஒரு குட்டியை அழைத்துக்கொண்டு நகைபணமெல்லா மடித்துக்கொண்டு வந்துவிட்டாரென்று சொல்லி சுந்திரலாலைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அங்கே போனவுடன் வாரண்டைக் காண்பித்தனுமன்றி நீ அழைத்துக்கொண்டு

வந்த சுகதேவி யெங்கேயிருக்கிறாள் காட்டுமென்று கேட்க, இவர் தனக்கு யாதொன்றுந் தெரியாதென்று சொன்னார். அன்றயதினமே இவரை ரயிலிலேற்றி காசிக்குக் கொண்டுபோய் மறுநாள் ஜெயிலி லடைத்துவிட்டார்கள்.

சுந்திரலால் ஒருகுட்டியையும் நகை முதலியதையு மடித்துக் கொண்டுவந்து விட்டாரென்றதைக் கேழ்விப்பட்ட மேற்சொன்ன ஹோட்டல்க்காரன் அந்தக் குட்டியைத் தான் எங்கேயாவது கொண்டுபோய் விடலாமென்ற ஆசை மேலிட்டு, தன்னிடத்தில் வேலை செய்யும் ராஜகிருஷ்ணனுவைக் கூப்பிட்டு, "நீ சாப்பாடு கொண்டுபோய்க் கொடுத்துவந்தாயே அந்தவீட்டைக் காட்டுவா" வென்றழைத்துப்போனார். அந்தவீட்டுக்குப் போனவுடன் இராமச்சந்திரபனர்ஜி, அந்தப்பையனை ஹோட்டலுக் கனுப்பிவிட்டு, அந்தவீட்டின் கதவைத் தட்டினான். அவ்வீட்டுவேலைக்காரிவந்து கதவைத்திறக்க வேற்றுமனுஷாளாக விருக்கக்கண்டு "நீராரையா! எங்கே வந்தீரெனக் கேட்க, இவன் "உன் எஜமானியிடம் சிலமுக்கிய விஷயம் பேசவேண்டியதிருக்கிறது சீக்கிர மழைத்துவா" வென்றான். வேலைக்காரி ஜெகதாம்பாள் இவனைப்பார்த்து "உமக்கென்ன வேலை; அந்த அம்மாளிடத்தில் உமக்கென்ன காரியம்; அந்த அம்மாள் ஆண்பிள்ளைகளிடத்தில் பேசமாட்டார்கள்; வீணாகக் காத்திருக்கவேண்டாம் போ" மென்று சொல்ல பனர்ஜி சற்றே யாலோஜித்து "நான் இவர்களுக்கு சாப்பாடு கொண்டுவந்துபோடச்சொல்லுகிற ஹோட்டல்காரன்; நான்பிராமணன்; இந்த வீட்டு அய்யாவை போலீசார் வாரண்டில்பிடித்துக் கொண்டுபோய் விட்டார்கள்; இந்த அம்மாவையும் வாரண்டில் பிடிக்கவருவதாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்; இந்தவீட்டு அய்யா இந்த அம்மாவை வேறே யொருவூரில்க் கொண்டுபோய் வைக்கும்படி எனக்குத் தெரிவித்தார்; அதற்காகத்தா னவசரமாக வோடிவந்தேன்" என்று மிகுந்த இறக்கமாகச் சொன்னான். இதைக்கேட்ட ஜெகதாம்பாள் மாடியிலிருந்த சுகதேவியிடம் வந்து பனர்ஜி சொன்ன வார்த்தைகளைச் சொன்னவுடன் அவள்தன் கண்களினின்றும் கண்ணீர் தாரைதாரையாகச் சொறிந்து, மூர்ச்சையாகி விழுந்து சற்றுநேரங்கழித்து எழுந்திருந்து "நான் யாருமற்ற பாவியானேனே! ஐயோ விசனமின்னதென்று தெரியாமல் விளையாடிக்கொண்டிருந்த இவரை யழைத்துவந்து கிளியைவளர்த்துப் பூனைக்குக்

கொடுத்ததுபோல் கொடுத்துவிட்டேனே! ஐயோ! போலீசானைக் கண்டவுடன் அவர்மனம் யெவ்விதமாய் பதறிற்றோ! பாவிகள் அவரை யென்னதொந்திரவுகள் செய்தாரோ! ஏ ஆபத்பாந்தவா! அநாதரட்சகா! ஆதிமூலப்பொருளே! ஏ, கிருபாளோ! எங்களைக் காப்பாற்றவேண்டுமென பலவாறாகப் புலம்பி சற்றேமனந் தயிரியமடைந்து எனக்கும் வாரண்டு வருமென்று சொல்கிறாரே! நான் யாதொருகுற்றமுஞ் செய்யவில்லையே! என்வீட்டுச் சொத்தைத் தானே நானெடுத்துவந்தேன்! நான்கொண்டுவந்த நகைபணமிவைகள் தாயார் தன்னுடையதென்று சொல்கிறாளோ யென்னமோ! ஒருக்கா லந்தப்படி பிராதுகொடுத்து வாரண்டு பிறந்திருந்தாலுமிருக்கலாம்; இவ்விடத்திலிருப்பது பிசகுதான்; சுந்திரலாலை ஹிம்சித்து என்னுடைய இருப்பிடந் தெரிந்துகொண்டு இவிடம்வருவார்கள் என்று யோஜித்து, வேலைக்காரியைக் கூப்பிட்டு வந்த மனுஷனை நல்லவண்டியொன்று கொண்டுவரச்சொல்லு என்று அவளிடஞ்சொல்லி, தானணிந்திருந்த நகைமுதலியன வெல்லாவற்றையுங்கழட்டி தோல்பைக்குள்வைத்து தானொரு பழயபுடவையைக் கட்டிக்கொண்டாள். பானர்ஜி வண்டியோட்டி வருவதாகச் சொல்லிப்போனபின்பு சுகதேவி தன்வேலைக்காரியிடம் இரண்டுபவுனெடுத்துக்கொடுத்து “இதையுன்வீட்டிலுள்ளவர்க ளிடத்தில் கொடுத்துவிட்டுவா! நாமிருவரும் சொற்ப தினங்கள் வேறுபட்டணத்துக்குப் போய் வேடிக்கைகள் பார்த்துவிட்டு வருவோம்; அதற்குள் வாரண்டுச் சேவகர்கள் வந்து தேடிப் பார்த்துவிட்டு இந்தவூரிலில்லை யென்று திரும்பிப்போய்விடுவார்கள்; பிறகு நாம் பயமின்றி யிருக்கலாம்; உனக்குப்போதுமான செலவுகளுக்கு பணந்தருகிறேன்” னென்றாள். இவ்வேலைக்காரி பவுனைக் கண்டவுடன் அளவுகடந்த சந்தோஷத்துடன் தன்வீட்டுக்கோடி அதைத் தன் பெண்ணினிடத்தில் கொடுத்து இதை பத்திரமாகவைத்திரு; எஜமானி வெளியே யெந்த வூருக்கோ போகவேண்டுமாம், என்னையுமழைக்கிறார்கள்; நானும் போய்வருகிறேனென்று சொல்லிக்கொண்டு சுகதேவியிடம் வந்து தானும் பயணத்துக்குத் தயாராயிருப்பதாகச் சொன்னாள்.

இதற்குள் பானர்ஜி தன் ஹோட்டலுக்குப் போய் தன்வேஷ்டி முதலியதை யெடுத்துக்கொண்டும், ஒரு நல்ல குதிரைவண்டியை யோட்டிக்கொண்டும், சுகதேவி வீடுவந்து சேர்ந்து கதவைத் தட்டினான். உடனே வேலைக்காரி கதவைத்திறந்து பார்க்கவண்டி-

நிற்பதைக்கண்டு சுகதேவிக்குத் தெரிவிக்க அவள்தன் மூட்டையை வேலைக்காரி யெடுத்துக்கொள்ளும்படிச்செய்து கதவுகளைப் பூட்டிக்கொண்டு வண்டியி னிருபுறங்களிலு மறைவுகட்டி வண்டியிலேறினார்கள். சுகதேவி தேகமுழுவதுந் தெரியாமல் மூக்காடிட்டுக்கொண்டிருந்ததால், பனர்ஜி இவளைப்பார்க்க முடியவில்லை; செந்தாமரைபோன்ற பாதத்தின் சிலபாகத்தை பனர்ஜி பார்த்து இவளுடைய காலினழகே யிவ்விதமாக விருக்க, இவளது திருவுருவ மெப்படியிருக்குமோவென மிகக்காதல்கொண்டவனாக விருந்தான். இவன் வண்டியை ரயில்வேஸ்டேஷனுக்கு ஓட்டும்படிச் செய்து வண்டிச்சத்தம் ரயில்சார்ஜுக்கு வேலைக்காரியைப் பணங் கேட்டான். சுகதேவி அவளிடம் பத்துரூபா யெடுத்துக் கொடுக்க அதையவள் பனர்ஜியிடங் கொடுத்தாள். அவனதில் அரைரூபாய் வண்டிக்காரனுக்குக் கொடுத்துவிட்டு ஆக்ரா பட்டணத்துக்கு டிக்கெட்டுகள் வாங்கி இவர்களை பெண்பிள்ளை வண்டியிலேற்றி, ஆக்ராஸ்டேஷன் வந்தவுட னிறங்கி, வண்டியொன்று பிடித்துக் கொண்டு இவனுக்குத் தெரிந்த ஒரு ஹோட்டலுக்கு அழைத்துப் போனான். அன்றிரவில் அவர்களுக்கு நல்ல போஜனஞ் செய்து வைத்து அந்த ஹோட்டலிலேயே ஒரு பந்தோபஸ்தான அறையில் படுத்துக்கொள்ளச் செய்தான்.

இராமச்சந்திரன் மறுநாட்காலையிலெழுந்து வேலைக்காரிஜெகதாம்பாளையழைத்து, உங்களம்மாவுக்கு எவ்வளவுரூபாய் வாடகையில்வீடு திட்டஞ்செய்யவேண்டும்; கேட்டுத்தெரிவித்தால் இன்று மத்தியானத்துக்குள் திட்டஞ்செய்துவிடுகிறேன்; இந்த ஹோட்டலில் பலபேர்களும் வருவார்களென்று சொல்ல, அதை யவள் சுகதேவிக்கு அறிவித்தாள். இவள் தனக்கு மாடிவீடுதான் வேண்டுமென்றும், ஜலசவுக்கிய முள்ளதும் நல்லகாற்று வீசும்படியானது தான் தேவையென்றும், வாடகை யெவ்வளவிருந்தாலுங் கொடுக்கத்தடையில்லை யென்றுஞ், சொல்ல அவளது விபரத்தை பனர்ஜிக்குத் தெரிவித்துவிட்டாள். பனர்ஜி அந்தப்படி தெருவுகள் தோறுஞ் சுற்றிப்பார்த்து காலியாயிருந்த ஓர் மாடிவீட்டை மாதம் 1-க்கு நாற்பதுரூபாய் குடிக்கூலிபேசித்தீர்த்து ஹோட்டலுக்குத் திரும்பிவந்து, ஒருமாதவாடகை முன்னடி கொடுக்கவேண்டுமெனக்கேட்டு, அத்தொகையை வாங்கி வீட்டுக் காரரிடங் கொடுத்து, அவ்வீட்டுச் சாவிகளை வாங்கிவந்து, ஜெடுத்தது

மன்றி நல்லஜட்காவண்டியொன்று ஓட்டிவந்து இவர்களை யேற்றிக் கொண்டு அவ்விட்டுக்கு வந்து அங்கிலிருக்கச்செய்தான். பின்பு அவ்விட்டுக்கு ஏதேது வேண்டியதோ அவைகளை யெல்லாம்வாங் கிக்கொண்டுவந்து கொடுத்ததுமன்றி பிரதிதினமும் மூன்றுவே ளை அவ்விட்டுக்கு சாப்பாடுகொண்டுவந்து போடும்படிக்கு மேற் பாடுசெய்தான்.

பனூர்ஜி போஜனஞ்செய்தபின் சுகதேவியின் வீட்டுக்குவந்து ஜெகதாம்பாளையழைத்து "சாப்பாடு நன்றாயிருந்ததா" வெனக் கேட்க, அவள் சரியாகவில்லை; சிலது வெந்தும்வேகாமலுமிருக்கிற தென்று சொன்னவுடன் "அநேக பெரியமனுஷாள் வீடுகளில்வே லைபார்த்தேன்; ஒருவராவது என்சமயல் திறமாகவில்லை யென்று சொன்னதில்லை; அனேக கனவான்கள் எனக்கு சர்டிபிகேட் கொ டுத்திருக்கிறார்கள்; ஒருசப்ஜட்ஜிவீட்டில் வேலைபார்த்தேன்; எனக்கு மாதம் 1-க்கு இருபதுரூபாய் சம்பளங் கொடுத்துவந்தார்கள்; அந்த ஜட்ஜியுடையமனைவி என்னை அவர்களாயுள்பரியந்தம் அவர் கள் வீட்டிலேயே யிருக்கவேண்டுமென்று சொன்னார்கள்; நானொ ருநாளைக்கு சமயல்செய்து சாப்பாடுபோடாவிட்டால் அந்த அம் மாள் அரைவயிறுதான் சாப்பிடுவார்கள்; என்னை அரைநிமிஷமே னும் வெளியே போகவிடார்கள்; தன்னுடன் கூடவேயிருந்து வீட்டுவேலைகளும், மற்றவேலைகளும், பார்க்கச் சொல்லுவார்கள்; என்னைசற்றுநேரங் காணவிட்டால் "இராமச்சந்திரா" "இராமச் சந்திரா" வென்று எங்கே பார்த்தாலுந் தேடுவார்கள்; என்பேரி லவர்களுக்கிருந்த விசுவாச மிவ்வள வவ்வளவென்றில்லை" என் றான்.

ஜெகதாம்பாள்:—ஏனய்யா அந்த வீட்டைவிட்டு வந்துவிட் டீர்கள்.

இராமச்சந்திரன்:—அந்த அம்மாள் நான்போகவே கூடா தென்று தான் பிடிவாதமாகச் சொன்னார்கள்; அந்த ஜட்ஜி பொல் லாத கோபிஷ்டர்; எடுத்த தெல்லாம் சந்தேகம்; பெரிய மனு ஷாள் விரோதம் வேண்டாமென்று நானாகவே வந்துவிட்டேன்.

ஜெகதாம்பாள்:—நீங்கள் சரியாக சமயல் செய்யாவிட்டால் கோபித்துக்கொள்ளாம லிருப்பார்களா? நாமொருவர் வீட்டில் வேலை செய்கிறதென்று போய்விட்டால் எல்லாந்தா னிருக்கும்.

இராமச்சந்திரன்:—என்னைப்போல் பக்குவஞ் செய்பவர்கள் இந்தியாவில் யாராவதிருக்கிறார்களா? நான் சமயல் செய்தால் இரண்டுபங்கு ஜாஸ்தியாகவல்லவா சாப்பிடுவார்கள்; அந்த விஷயங்களுக்காக ஐட்ஜி யென்னை கோபித்துகொள்ளவில்லை; என் பேரிலவர்களுக்கு வேறேசந்தேக மேற்பட்டுவிட்டது.

ஜெகதாம்பாள்:—அதென்னய்யா சந்தேகம்;சொல்லக்கூடாத சந்தேகமா?

இராமச்சந்திரன்:—சமயல் செய்தபிறகு அந்த அம்மாள் என் னுடன் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருப்பார்கள்; ஒருநாள் இராத்திரி நிலாவில் அந்த அம்மாள் நாற்காலியி லுட்கார்ந்து கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள்; நான் பலகையில் படுத்துப் பேசிக்கொண்டிருந்து அசதியால் தூங்கிவிட்டேன்; ஐட்ஜி பல முறை கூப்பிட்டும், எழுந்திருக்காததால் அந்த அம்மாள் என் கிட்டவந்து தட்டி யெழுப்பினாள். அதை யந்த ஐட்ஜிபார்த்து விட் டாப்போல் தோற்றுகிறது; ஓடிவந்து என்னைப் பிரம்பாலடித்தார்; நான்மறுதினமே அவர் வீட்டைவிட்டு வந்துவிட்டேன்.

ஜெகதாம்பாள்:—ஆமாம் பெரியமனுஷாள் வீட்டில் வேலை பார்ப்பதே பிசகு; நான் சிறுகுட்டியா யிருக்கும்போது ஒரு தாசில்தார் வீட்டில் வேலைபார்த்தேன்; அந்தஐய்யா பரிகாசமாக என்னிடத்தில் பேசுவார்; சிலவேளைகளில் என்னைத் தொட்டு மடிப்பார்; அவர் பெண்ஜாதி இதை யொருநாள் பார்த்துவிட்டு என்னை ஜாடையாகத் திட்டினாள்; நான் வேலைவேண்டா மென்று வந்துவிட்டேன்.

இராமச்சந்திரன்:—உங்கள் எஜமானி தகுந்த கனதனவான் வீட்டுப்பெண்ணென்றும், ஏதோ பாலிய சேஷ்டையால் அந்தப் பய்யனுடன் கூடிக்கொண்டு வந்து மிகுந்த கஷ்டப்படுவதாக வுந்தெரிகிறது; இந்த அம்மாவீட்டில் எவ்வளவு பேர்களோ சமயல்க் காரர்களிருந்து சுசிருசியாய் சமயல் செய்தும், பலகார பட்சணங்கள் செய்துங் கொடுத்துக்கொண் டிருப்பார்கள்; இவர்களுவும் வேலைகளைக் கேட்க எத்தனையோபேர்கள் கைகட்டிக் கொண்டு நிற்பார்கள்; இவ்வளவு அந்தஸ்திலிருப்பவர்கள் யாதொருதுணையுமின்றி கஷ்டப்படுவதைப்பார்க்க என் மனம் சகிக்க வில்லை;காணிப்போது தகுந்த வேலையில்லாமல்ஹோட்டலிலிருந்து

வருகிறேன்; இவர்களைப்போன்றவர்களின் தயவு எனக்குக் கிடைக்கும்பட்சத்தில் அப்போது என்னுடைய வேலைத் திறமையைப்பார்க்க வேண்டும்; நளபாகமென்று சொல்லக் கேட்டிருக்கிறார்களேயன்றி பாகஞ்செய்து சாப்பிட்டறியார்கள்; நானொரு நாள் அந்த சாஸ்திரப்படி சமயல் செய்கிறேன்; நீங்கள் சாப்பிட்டுப் பாருங்கள்; சம்பளமின்னதென்று இப்போது நீங்கள் பேசவேண்டியதில்லை; உங்களுக்கிஷ்டப்பட்ட தொகை கொடுக்கலாம்; அம்மாளிடத்தில் சொல்லி எனக்குப் பதில் தெரிவிக்கவேண்டு மெனக் கேட்க ஜெகதாம்பாள் அந்தப்படித்தன் எஜமானியிடம் வந்து ஹோட்டல்காரர் தான் சமயல் செய்து போடுவதாகவும், கொடுத்த சம்பளம் வாங்கிக்கொள்வதாகவும், சமையல் செய்வதில் தான் மிகுந்த கெட்டிக்காரரென்றுஞ் சொல்கிறார்; தங்களிஷ்டமென்னவென்று கேட்டாள். சுகதேவி தன் வேலைக்காரி சொன்ன விஷயங்களைப்பற்றி சங்கேற யாலோஜித்து "நம்முடைய வீட்டில் இப்போது ஆண்பிள்ளை வரக்கூடாது; ஹோட்டலிலேயே நன்றாகச் சமையல்செய்து கொண்டுவந்து கொடுக்கட்டும்; அவருடைய பாகம் நன்றாயிருந்தால் அதற்குத்தக்கபடி கொடுப்போம்; வீட்டில்வந்து சமயல் செய்வதைப்பற்றிப் பின்னால் யோஜித்துக் கொள்வோ" மெனச் சொல்ல அதையவள் பஞர்ஜிக்குத் தெரிவித்தாள். இராமச்சந்திரன் அந்தப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு, பலவகை யன்னங்கள், பலகாரபட்சணங்கள் முதலியன செய்துகொண்டுவந்து கொடுத்தார். இவரிவ்விதஞ் செய்வதைப் பார்த்த அவ்வூர் ஹோட்டல்கார இராஜேந்திரலால் இவரைப் பார்த்து "நீ அழைத்துவந்த பெண்பிள்ளைகளார்; அவர்களுக்குத் தானே நீ சாப்பாடு முதலியன கொண்டுபோய் கொடுத்துக் கொண்டு வருகிறாய்; நீ எங்கேயாவது சரிப்படுத்தி அழைத்து வந்திருக்கிறாப்போல் தோற்றுகிறது; அவர்களை யெவ்விடத்தில் கொண்டுபோய் வைத்திருக்கிறாய்; சொல்லெனக் கேட்க இராமச்சந்திரன் தானந்தப்படி யாதொன்றுஞ் செய்யவில்லை; அந்த அம்மாள் ஒருபெரியமனுஷன் பெண்ஜாதி; அவரெனக்கு சிநேகம்; இவ்வூருக்கு அழைத்துப்போய் ஜாகைதிட்டஞ்செய்து வைக்கும்படிக்கும், தான் பின்னால் வருவதாகவுஞ் சொன்னார்; அதற்காகத் தான் வந்திருக்கிறேனென்று சொன்னான்.

இராஜேந்திரன்:—நீ சொல்வது முற்றிலும் பொய்; உன்னுடையலாபத்தை யுத்தேசித்துத்தான் கேட்டேன்; இந்த வூரில்

தகுந்தபிரபு ஒருவரிருக்கிறார்; அவரிவ்வித ஆசாமிகளுக்குக் கணக்கில்லாமல் கொடுப்பார்; நீ ஏழையாகவிருப்பதால் உனக்குத் தகுந்த சன்மானங் கிடைக்கும்.

இராமச்சந்திரன்:—யாரைப்பார்த்து இந்த வார்த்தை கேட்டாய்; வேறொருவன் இந்தவார்த்தை சொல்லியிருந்தால் அவன் நாக்கையறுத்துக் காக்கைக்கு விருந்துசெய்திருப்பேன்; நீ இத்தனை வருஷம் என்னிடம் சினேகமாயிருந்தும், என்னுடைய குணமறியாமல் போனாயே அடிமுட்டாளே யென்று அவனுடன் கோபித்துக்கொண்டு வேறு ஹோட்டலுக்குப் போய் அந்த ஹோட்டல்காரனுக்கு உதவியாக வேலைசெய்தும், சுகதேவி யம்மாளுக்குத் தனிமையில் சமையல்செய்து சாப்பாடு கொண்டுவந்து கொடுத்துக்கொண்டு மிருந்தான்.

இந்த இராஜேந்திரனுக்கும் அந்த டவுன் இனிஸ்பெக்டருக்கும் மிகுந்த சினேகம்; அழகுள்ள ஸ்திரீகளை யழைத்துப்போய்க் கூட்டி விடுவதும், அவரால் தகுந்த வரும்படிபெற்று வருவதும் வழக்கம்; இராமச்சந்திரன் தன்னிடத்தில் கோபித்துக்கொண்டு போனதால் அவன் கொண்டுவந்துவைத்திருக்கிற ஸ்திரீயினிருப்பிடந்தெரிந்துகொண்டு இது விபரத்தை இனிஸ்பெக்டருக்கு அறிவித்து எந்த விதமாகவாவது அவளை சரிப்படுத்தி இவனை யவமானப்படுத்திவிடவேண்டுமென்ற கவலையுடன் இவன் எந்த ஹோட்டலில் சமையல் செய்கிறானென்பதை விசாரித்துத் தெரிந்துகொண்டான். அன்றையதினம் அஸ்தமனமானவுடன் அந்த ஹோட்டலுக்கு அடுத்த வீட்டில் மறைவாக உட்கார்ந்திருந்து இராமச்சந்திரன் சாப்பாடு எடுத்துக்கொண்டு போவதைப்பார்த்தது அவனுக்குத் தெரியாமல் பின்னாலேயே போனான். அவன் சுகதேவியின் வீட்டில் சாப்பாடுகொடுத்து விட்டுத் திரும்பிவந்ததைப் பார்த்து, அவ்வீட்டினடையாளம் நன்றாய்த் தெரிந்து கொண்டு,போலீஸ்இனிஸ்பெக்டர் வேங்கடநாராயணப்பாவின் வீட்டுக்கோடி, இவ்வூரில் ஓர் தகுந்தசிலையையடித்துக்கொண்டு ஒருபார்ப்பான் வந்திருக்கிறான்; அவன் அவளை யொளித்து வைத்திருக்கிற விடந்தெரிந்து கொண்டுவந்திருக்கிறேன்; வாருங்கள் போய் அவளை விசாரிப்போமெனக் கூப்பிட்டான். இனிஸ்பெக்டர் பதினொரு மணிக்குமேல் போவோம்; நீபோய்போஜனஞ் செய்து வந்துவிடு; லாந்துக்குப் போவது போல்போய் விசாரிக்கவேண்டுமெனச்சொன்னார். இரா

ஜேந்திரன் அந்தப்படி வருவதாகச் சொல்லிப்போய் சாப்பிட்டு வந்து இனிஸ்பெக்டரை யழைத்துக்கொண்டு சுகதேவியின் வீட்டிற்கு இரவு பனிரெண்டுமணிக்கு வந்து அவ்வீட்டின் கதவைத் தட்டி, "யார் வீட்டில் கதவைத்திறவென அதிகாரத்துடன் அதட்டிக் கேட்டான். ஜெகதாம்பாள் விழித்துக்கொண்டு யார்கதவைத் தட்டுகிறதெனக்கேட்டாள். அதற்கு இனிஸ்பெக்டர் இந்த வீட்டில் சந்தேகப்பட்ட ஆசாமிகள் வந்திருக்கிறதாகத் தெரிகிறது பார்க்க வேண்டுமெனச் சொல்ல, இந்தவார்த்தையை சுகதேவி கேட்டு ஜகதாம்பாளையருகிலழைத்து எவனோ போக்கிரி போல் தோற்றுகிறது; நீ யொன்றுக்கும் பதிற்சொல்லாமல் படுத்துவிடு; கத்திப்பார்த்துவிட்டுப் போய்விடுவானென்று சொன்னாள். வேலைக்காரியந்தப்படி யாதொருபதிலுஞ் சொல்லாமற் போய் படுத்துவிட்டாள். இனிஸ்பெக்டர் அரை மணி நேரம் வரையில் பலவிதமாக பயமுறுத்தியும், கதவுகளையுடைத்தும் பதில் யாதொன்றும் பேசாததால் மிகுந்த கோபமும்வருத்தமுமடைந்து, "இந்தப் பாப்பாரப்பயல் தயிரியத்திலல்லவா இந்தச் செருக்கி பதில் கூடப் பேசமாட்டேனென்று சொல்கிறாள்; அந்தப்பயலையுஞ் செருக்கியையும் நாளையதினம் லாக்கப் செய்து ஜோட்டாலடிக்கவேண்டு" மென்று மிகுந்த ஆத்திரத்துடன் இராஜேந்திரனைப்பார்த்து அந்தப்பயலை நாளைதினங் காலமே எனக்குக் காண்பிப்பாயானால் அவனை யுதைக்கிற உதையில் உண்மையெல்லாங்கக்கும்படி செய்கிறேன்; விடியற்காலம்வந்து என்னை யெழுப்பு நேரமாயிற்று போவோமென்று சொல்லித்தன் வீட்டுக்குப்போய் விட்டார்.

இனிஸ்பெக்டர் எப்போது பொழுது விடியும், எப்போது பொழுதுவிடியுமென்று மிகுந்த கவலை யுடையவராக விருந்ததால் இராஜேந்திரனைக் கண்டவுடன் அவனை யழைத்துக்கொண்டு அந்த பார்ப்பானை காட்டும்படி கேட்க, அவனந்தப்படி மிட்டாய் கடையிலிருந்த இராமச்சந்திரனை தூரத்திலிருந்தும் காண்பித்து விட்டுப் போய்விட்டான். இனிஸ்பெக்டருடனே தன்னுடன் கூட வந்த ஒரு கானிஸ்டேபிலைக்கொண்டு அந்த இராமச்சந்திரனை யழைத்துவரச்செய்து, அவனைப்பார்த்து "உனக்கெந்தவூர்; இங்கே என்ன வேலையாக வந்தாய்; உன்னுடன் கூட வந்திருக்கிறவர்கள் யாரெனக் கேட்டார்.

அதற்கு இராமச்சந்திரன் தன் எஜமான் பனர்ஜிக்குசமையல் செய்து போடும்படி அவர்கள் செய்த உத்திரவுப்படி இவிடம் வந்தேன்; எஜமான் ஒரு அவசரமான காரியமாக காசிக்குப் போயிருக்கிறார்கள் ; எங்களுக்கிருப்பிடம் அலகபாத்; எஜமானுக்கு வக்கில் வேலை; ஸ்தலயாத்திரையாக வந்திருக்கிறோமென்று சொல்ல, இனிஸ்பெக்டர் நீ சொல்லுகிறது தெரிகிறது; இந்தப்பயலை ஸ்டேஷனுக்கு இழுத்துக்கொண்டு போய் சரியாக விசாரி; நான் வந்து சேருகிறேன் என்று சொன்னார். உடனே கானிஸ்டேபில் இராமச்சந்திரனை யழைத்துக்கொண்டு போய் ஸ்டேஷனுக்குள் ஓரறையில் போகச் செய்து, உண்மையைச் சொல்கிறாயா உதை கேட்கிறதா உடம்பு எனக்கேட்க, அவன் முன் சொன்னதையேசொன்னான். அங்கு நின்ற மற்றொரு கானிஸ்டேபில் தன் கால் ஜோட்டையெடுத்துக்கொண்டு அந்த பனர்ஜியின் தலையிலும் கன்னத்திலும் இருபது அடிக்கு மேலடிக்க அவனழுது கொண்டு எனக்கொன்றுந்தெரியாது; நான் சமயல்காரன் என்றான்; இதற்குள் இனிஸ்பெக்டரும் ஸ்டேஷனுக்கு வந்து தன் கையிலுள்ள பிரம்பாலவனையடித்தார். இராமச்சந்திரன் தானுண்மையைச் சொல்லிவிடுவதாகவும், தன்னை யடிக்கவேண்டாமென்றும் கெஞ்சிக்கேட்க, "என்னடாநடந்தது சொல்லென்றார். பனர்ஜி தான் அலகபாத்தில் ஒரு ஹோட்டல்வைத்திருப்பதாகவும், காசியிலுள்ள சுந்திரலால் என்பவர்தன் ஹோட்டலிலிருந்து பிரதிதினமும் இரண்டுபேருக்குச் சாப்பாடுகொண்டு வந்து போடும்படிப்பணங்கொடுத்து வந்ததாகவும், நாலு ஐந்து தினங்கழித்து ஷை சுந்திரலாலை போலீசார் வாரண்டில் பிடித்துப்போய் விட்டதாகவும், எதற்காக அவரை வாரண்டில் பிடித்தீர்களென அந்தப்போலீசாரைக் கேட்டதாகவும், அவர்கள் சுந்திரலால் ஒரு குட்டியைப்பணத்துடனும், நகையுடனு மடித்துக்கொண்டு வந்து விட்டாரென்று சொன்னதின்பேரில் தான் சுந்திரலால் வீட்டுக்கு வந்து அந்த அம்மாளிடஞ் சொன்னதாகவும், அவள் தன்னை இந்த ஊருக்குக்கொண்டு வந்து ஜாகைதிட்டஞ் செய்துவைக்கும்படி கேட்டுக்கொண்டதாகவும், அதன் பேரில் தான் இவிடம் அழைத்து வந்து வைத்திருப்பதாகவுஞ் சொன்னான். இனிஸ்பெக்டர் " அடபயலே கடைசியில் பொடிவைத்துச் சொன்னாயே அதென்னடா; சுந்திரலால் அடித்துக்கொண்டு வந்து விட்டானென அதைப்போல் நீயும் அடித்துக்கொண்டு வந்தாய்; உன்சங்கதி தெரிகிறது; சரிப்படுத்திப்

போட்டாபோ" எனச் சொல்லி ஸ்டேஷனுபீசரை யழைத்து, காசியில் சில நகைமுதலியது களவு போய் குற்றவாளிகளுக்கு இரண்டு பிறந்ததென்றும், ஒருவன் பிடிபட்டுப்போனவுடன் மற்றவர்கள் நகையங்களுடன் இந்நாட்டவுனுக்கு வந்திருப்பதாகவும், அந்தத் திருட்டில் இந்த பனுர்ஜி சம்பந்தப்பட்டிருப்பதாக ஒப்புக்கொள்வதாகவும், மற்றவர்களை நகையங்களுடன் பிடித்துப்பின்னுல் தெரிவிப்பதாகவும், ஆக்கான்ஸ் ரிபோர்டு கொடென்றும், இந்தப் பயனுக்கு பத்து தினங்களுக்கு ரிமாண்டுகேளென்றுஞ் சொல்லி அவிடத்திலிருந்த நாலைந்து கானிஸ்டேபில்களை யழைத்துக்கொண்டு சுகதேவியம்மாள் விட்டுக்கு வந்து சேர்ந்தார்.

அப்போது பகல் 8 மணியிருக்கும்; இவர்கள் கூட்டமாக வந்ததைப் பார்த்து அக்கம் பக்கத்திலுள்ள ஜனங்கள் இவர்களென்ன செய்யப்போகிறுர்களென்பதைத் தெரிந்துகொள்ள விரும்பி அங்கே வந்து கூடினுர்கள். இனிஸ்பெக்டர் அவ்விடம் போனவுடன் கொல்லைப்புறத்தில் இரண்டு கானிஸ்டேபில்களைப் போய் வெளியிலெவரும் போகாமல் பார்த்துக் கொள்ளச்செய்து. அவ்விட்டின் கதவைத்திறக்கும்படி பலதடவை கேட்டுந்திறக்காததால் அக்கதவை யுடைத்துத்திறக்கும்படி உத்திரவுசெய்தார். ஜனங்கள் விசேஷமாகக் கூடிவிட்டதையும், கதவையுடைத்துத் திறக்க வெத்தனப்பட்டதையுந் தெரிந்த சுகதேவி கதவைத்திறக்காதிருப்பது குற்றமாகுமென நினைத்துத்தன் வேலைக்காரியைக் கொண்டு கதவைத்திறந்துவிட்டாள். உடனே இனிஸ்பெக்டரும், கானிஸ்டேபில்களும்; இராஜேந்திரலால் முதலிய மற்றுஞ்சிலரும், அவ்விட்டிற்குள் நுழைந்து "இந்த விட்டில் வந்திருக்கிற மனுஷி யார்; அவளை வெளியே வரச்சொல்" என மிக்ககடுமையாக வேலைக்காரியைக்கேட்க, அவள் எங்களம்மாள் கோஷா; அவர்கள் வெளியேவர மாட்டார்கள்; மாடியிலிருக்கிறுர்கள்; கதவுப்பக்கமாகனின்று கேட்கலாம்; கேளுங்கள்" என்றுள். இனிஸ்பெக்டர் மட்டில் அந்தப்படி மாடியின் கதவுக்கு சமீபமாகப் போய் "உங்களுக்கிருப்பது காந்தவூர்; நீங்கள் இந்த வூருக்குத்தனிமையாய் வந்திருப்பதற்குக் காரணமென்ன சொல்லுங்களென்று கேட்டார்.

சுகதேவி:—நீங்கள் யார்? என்னுடைய சங்கதிகளைப்பற்றி நீங்கள் கேட்கவேண்டிய காரணமென்ன? விபரஞ் சொன்னுல் பதிற் சொல்லுகிறேன்.

இனிஸ்பெக்டர்:—நான் இந்த டவுன் போலீஸ் இனிஸ்பெக்டர்; சில திருட்டுத்தடயங்களுடன் நீங்களிவ்விடமிருப்பதாகத் தெரிந்து சோதனை போடவந்தோம்.

சுகதேவி:--உங்களுக்குச் சந்தேகப்பட்ட நபர்கள் யார்? யாருடைய வீட்டில் என்ன களவு போயிற்று? அந்தத்தடயங்களென்ன? ஒருக்கால் நீங்கள் வீடு நிதானந்தெரியாமல் வந்திருக்கலாம்; அதற்காகத்தான் நான் கேட்கிறேன்.

இனிஸ்பெக்டர்:—எல்லாவிஷயங்களும் பின்னால் பேசிக்கொள்ளலாம்; சந்தேகப்பட்டதும் சம்பந்தப்பட்டதுமான குற்றவாளிகளின் நிறங்குறி முதலியன என்னுடைய நோட்டிலிருக்கிறது; நேரில் பார்த்துவிட்டால் நீங்கள் அல்லது வேறென்று சொல்லிவிடலாம்; அதையுத்தேசித்துத்தான் நான் தனிமையில் வந்திருக்கிறேன்; எங்கள் வீட்டில் தங்கை தமக்கை யில்லையா; நீங்கள் வித்தியாசமாக நினைக்கிறீர்கள்; சற்றே கதவைத்திறவுங்கள்; முகத்தைமட்டில் பார்த்துவிட்டுப் போய்விடுகிறேன்.

சுகதேவி:—நீங்கள் தனிமையில் வந்திருப்பீர்களென்பது எனக்கு நன்றாய்த்தெரிந்தவிஷயந்தான்; அதனால்தான் இவ்வளவு வார்த்தைகள் கேட்டேன்; இந்தசமயம் நான் வெளியேவரக்கூடாதவளாயிருக்கிறேன்; சாவகாசமாக வந்தால் பார்க்கலாம்.

இதைக்கேட்ட இனிஸ்பெக்டர் இவள் நம்மை ஏமாற்றுவதற்காக ஜாலமாகப் பேசுகிறாள்; இவளைப்பலவிதங்களில் பயமுறுத்தியும் அவசியமானால் ஜெயிலிலடைத்து நிர்ப்பந்தங்கள் செய்தும், இவளைச் சம்மதிக்கவைக்கவேண்டுமென நினைத்து, சுகதேவியைப் பார்த்து "நீ திருடிக்கொண்டுவந்தவிடமும், தடய ஜாப்தாக்களும், எனக்குத் தெரியும்; உன்னுடைய ஜாலவித்தையை என்னிடங் காட்டாதே; நீயொரு தகுந்த பெரிய குடும்பத்தில் பிறந்தவள்; என்னால் உனக்கொரு நன்மையைச் செய்யலாம்; ஸ்திரீஜாதி ஜெயிலுக்குப்போய்விட்டால் அவளைப்பின்னால் சுவானங்கூட மதிக்காதென்று சொல்வார்களே; அதற்காகத் தனிமையில்வந்து புத்திமதிகளைச் சொன்னால் கிராக்கியெல்லாஞ் செய்துகொள்ளுகிறாயே; உன்னுடைய யோக்கியதை எனக்குத் தெரியாதென்றா நினைக்கிறாயோ; உன்னை அந்திரலால் இழுத்துக்கொண்டு வந்ததும், அவனை வாரண்டில் பிடித்து ஜெயிலிலடைத்திருப்பதும், உங்களுக்குச்

சாப்பாடு கொண்டுவந்து போட்டுக்கொண்டிருந்த பார்ப்பான் உன்னையடித்துக்கொண்டு இந்தட் டவுனுக்கு வந்ததும், உன்னிடம் திருட்டுத் தடயங்களிருப்பதும், உன்னைப் பிடிக்கவாரண்டு வந்திருப்பதும், எனக்குத் தெரியாதோ? நீ மெத்த பதிவிரதை போல் சாமார்த்தியமாகப் பேசுகிறாயே; உன்னை வாரண்டில் பிடித்து ஜெயிலிலடைக்க அதிக நாழிகை செல்லுமென்று நினைக்கிறாயா? உன்னை இந்த ஆபத்தினின்றும் தப்பிவித்து விடலாமென்று நேற்றுதினம் இராத்திரி வந்தேன்; இப்போது கேட்பதற்கும் முகத்தைக்கூடக் காட்டமாட்டேனென்கிறாய்; இப்போது கதவைத் திறந்து விட்டால் மரியாதையுடன் உன்னை விட்டு விடுவேன்; இல்லாவிட்டால் பலவந்தத்தின் பேரில் ஜெயிலுக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பேன்; என்ன சொல்கிறாய்" என்று அதட்டிக் கோபத்துடன் கேட்டார். இவர் கேட்டவிஷயங்கள் நாராசத்தைக்காய்ச்சி காதிலூற்றினாற்போல் மிகுந்த துன்பமடைந்து சுகதேவி மூர்ச்சையாகி சற்றேதெளிந்து பின்வருமாறு யோசிக்கலானாள். இவர் சொல்வதை யூகித்துப் பார்த்தால் சுந்திரலால் வாரண்டில் பிடிபட்ட விஷயம் சாப்பாடு கொண்டுவந்துபோட்ட பார்ப்பான்தான் சொல்லியிருக்க வேண்டும்; அவன் என்னையொருக்கால் கெட்டவெண்ணத்துடன் இவ்விடம் அழைத்து வந்திருக்கலாம்; இப்போது எனக்கு உதவிபுரிபவர்களொருவருமில்லையே! போலீசார் முறடர்களாயிற்றே! இவர்களுக்கு நாம் பயப்படுவோமானால் மானபங்கம்வந்து நேரும்; ஓர்வித உபாயஞ் செய்வோமென்று ஒருகடிதமெடுத்து அவ்வூர் மாஜிஸ்டிரேட்டுக்கு அடியில்கண்டபடி ஒரு மனுஎழுதினாள்.

ஆக்ரா மாஜிஸ்டிரேட் கோர்ட்டாரவர்கள் சமுகத்துக்கு

காசிமாநகரத்தில் பெருத்த சாவகாரியாயிருந்து இறந்துபோன இராமநாராயணதாஸ் என்பவரின் ஏகபுத்திரியாகிய சுகதேவி வணக்கமா யெழுதிக்கொண்டமனு.

எனக்கு 50 லட்சத்துக்குக் குறையாத சொத்துக்களிருக்கிறது. நான் ஸ்தல யாத்திரையாக இவ்விடம் கணேஷதத் தெரு 112 நெ வீட்டில் ஜாகைசெய்துகொண்டிருக்கிறேன்; என்னுடைய ஏஜண்டு அவசரகாரியமாக அலகபாத்துக்குப் போயிருக்கிறார். அவர் இல்லாத சமயம்பார்த்து இவ்வூர் போலீஸ் இனிஸ்பெக்டர் என்னை பல்வந்தஞ்செய்யவேணுமென்றகெட்ட வெண்ணத்துடன்

நேற்றுதினம் இராத்திரி வந்து கதவைத்திறக்கும்படி நிர்பந்தஞ் செய்தார்; கதவைத்திறக்கமாட்டேனென்று சொல்லிவிட்டதால் இன்று காலையில் அனேக கானிஸ்டேபில்களுடன் வந்து தடயங்கள் என்னிட மிருப்பதாகவும், சோதனை செய்யவேணுமென்றும், கதவைத் திறக்கச்செய்து, நானிருக்கும் மாடிக்குவந்து என்னுடன் காமாதுரமான வார்த்தைகள்பேசி நான் அவர் மனம்போல் நடக்காவிட்டால் பலவந்தஞ் செய்துவிடுவதாகச் சொல்கிறார். நானிப்போது யாதொரு ஆண் துணையுமின்றித் தவிக்கின்றேன்; இந்தச் சமயம் எஜமான் தயவுசெய்து உடனே புறப்பட்டுவந்து என் மானத்தைக் காக்காவிட்டால் என் உயிர்நிற்காது.

சுகதேவி.

இவ்வித மிங்கிலீஷில் இந்தக்கடித மெழுதியவுடன், "ஐயையோ என்புடவையைப் பிடித்து இழுக்க வருகிறானே! என்னைப் பலவந்தஞ்செய்ய வருகிறானே! ஆணுடன்பெண்ணுடன் பிறந்தவர்க ளொருவரு மில்லையா! நான் யாருமற்றபாவியாய்த் தவிக்கிறேனே! இதென்ன இங்கிலீஷ் இராஜ்ஜியமா! இவ்வித அக்கிரமஞ் செய்வதைப்பற்றிக் கேட்பவ ரொருவருமில்லையா" வென்று பலவாறாகக் கூக்குரலிட்டு அழுது, மாடியின் ஜன்னல் வழியாக வெளியில்நின்ற ஜனங்களைப்பார்த்து, எந்தப் புண்ணியவானாவது இந்தக்கடிதத்தைக் கொண்டுபோய் இந்தட்டவுன் மாஜிஸ்டிரேட்டிடங் கொடுங்களென்று அதை ஜன்னல்வழியாக வெளியே யெறிந்தாள். அதை அங்கே நின்றவாலிப னொருவ னெடுத்துப்பார்த்து அதை உடனே அந்தட்டவுன் டிப்டி மாஜிஸ்டிரேட்டாரிட மோடினான். இவ்வித மோடியவிபரத்தைத் தெருவில் நின்ற கானிஸ்டேபில் போலீஸ்இனிஸ்பெக்டரிடத்தில் தெரிவித்தான். சுகதேவியம்மாள் இந்தப் பய்யன் தன் மனுவை யெடுத்துக்கொண்டு போனதைப்பார்த்து அது மாஜிஸ்டிரேட் கையில் கட்டாயம் கொடுபட்டுவிடும்; அதைப்பார்த்தவுடன் மாஜிஸ்டிரேட் இவ்விடம் வந்துவிடுவாரென்று தயிரியங்கொண்டு, கதவைத்தட்டி யுடைத்துக் கொண்டிருக்கும் இனிஸ்பெக்டரிடம் வந்து அவரைப் பார்த்து "நீ கவர்ண்மெண்டு உத்தியோகஸ்தனென்று இதுவரையில் மரியாதையாகப்பேசினேன்; நீ இவ்விடத்தில் அயோக்கியத்தனமும் அதி துணிகரமுமான காரியஞ் செய்பவ னிருக்கிறாயென்று நான் சற்று மறிகிலேன்; நீ செய்யவேண்டிய வேலையின்னது உனக்குள்ள அதிகாரமின்ன தென்று எனக்குத் தெரி

யும்; கோஷா ஸ்திரீகளிருக்கு மிடத்துக்கு நீ வரலாமா? பாதப் பயலே; நீ என்னை யாரென்று நினைத்துக்கொண்டாய்? இந்தியன் பெனல் கோடு உனக்குமட்டில்த்தானு தெரியும்; அந்தச் சட்டம் போலீசாருக்கு விலக்கென்று எழுதப்பட்டிருக்கிறதோ? இ. பி கோடு 395, 376 செக்ஷன்கள் வாசித்தறிவாயோடா? அடி முட்டாளே; ஜென்மாந்திரத் தீர்ப்பும், கசையடியும்படக் காலம் வந்ததோடா! காண்டாமிருகமே; நீ சட்டப்படி சோதனை போடுவதைத் தடுப்பவர் கிடையாது; காமப்பேய் பிடித்த பதரே; உன்கெட்ட வெண்ணத்தை விட்டுவிடடா வென்று இங்கிலீஷில் இடியிடித்தது போல் மிகுந்த கம்பீரமாகப் பேசினுள். இதைக்கேட்ட இனிஸ்பெக்டர் திடுக்கிட்டு மாஜிஸ்டிரேட்டுக்கு மனுப்போயிருப்பதாலவர்வந்து விடுவாரே! அவர் வருவதற்குள் இவளை ஸ்டேஷனுக்குக் கொண்டு போய்விடவேண்டு மெனத்தீர்மானித்து, வியபசாரிகளிருவரைத்தருவித்து அவர்களைக் கொண்டு கதவைத்திறக்கும்படிக்குக் கேட்கச்சொன்னுர். அந்த ஸ்திரீகள் மிகுந்த நயமாகக்கதவைத்திறந்து விடுங்கள்; ஆண்பிள்ளைகள் ஒருவருமில்லையென்று சொல்ல, உடனே சுகதேவி கதவைத்திறந்து எனது சாமான்களை எனது பார்வையில் சோதிக்கவேண்டும்; தகுந்த அந்தஸ்துள்ள வர்த்தகர் முதலிய கனவான்கள் ஐவருக்குக்குறையாமல் இவிடம் வரவேண்டும்; அவர்கள் வந்தால் தான் என்னிடமுள்ள சாமான்களைக் கொடுப்பேனென்றுள். அந்த வியபசாரஸ்திரீகள் இது விபரத்தை இனிஸ்பெக்டருக்கு அறிவிக்க, அவர் உடனே அக்கம் பக்கம் வீடுகளிலுள்ளவர்களில் 10 பெயரையழைத்துவரச்செய்து அந்த ஸ்திரீகளைக் கொண்டு சுகதேவியை தேக சோதனை செய்யும்படிச் சொன்னது மன்றி அவளுடைய சாமான்களை யெடுத்துவந்து அவர்கள் முன்பாகவைக்கவுமேற்பாடு செய்தார். சுகதேவி வேற்று மனிதர்களைப் பார்த்தவுடன் மனுதைரியங்கொண்டு தனது தோல் பையின் சாவியைக்கொடுத்து அதிலுள்ள நகைகள் ஒவ்வொன்றையு மெடுத்து விபரமாக ஜாப்தாதயாரிக்கும்படி சொன்னது மன்றி பவுன் முதலியன வற்றையுஞ் சரியாக யெண்ணி வைக்கும்படி செய்து தான் சமீபத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்தாள். இவள் தன்தேக முழுவதும் போர்வையால் மறைத்திருந்தாலும் இவளை இனிஸ்பெக்டர் இமைகொட்டாமல் பார்த்தவண்ணமாகவே யிருந்தார்.

இவரிவ்விதம் தன்னை யுறுத்துப் பார்த்து வருவதைத்தெரிந்த சுகதேவி வேறு பக்கமாகத் தன்முகத்தைத் திருப்பிக்கொள்வாள்; இவர்கள் சோதனை ஜாப்தா தயார் செய்து அவிடமிருந்தவர்களின் சாக்ஷியும் வாங்கப்பட்டவுடன் ஸ்டேஷனுக்கு இவளையும் தடயங்களையுங்கொண்டுபோ வென்று கானிஸ்டேபில்களுக்கு இனிஸ்பெக்டருத்தரவு செய்தார். அவர்களந்தப்படி ஸ்டேஷனுக்கு வாருங்களம்மா வென்று கூப்பிட, சுகதேவி வண்டி கொண்டுவரப்போகலாமென்றாள். இதைக்கேட்ட இனிஸ்பெக்டர் இவளுக்கு வண்டி யெதர்க்காக வேண்டியது; நன்றாய் நடக்கக்கூடியவள்; சுகஜமாக வராவிட்டால் கெல்த்தா கொடுத்துக் கொண்டுபோ வெனச்சொல்ல, சுகதேவி என்னைத் தொட்ட கையைநறுக்கிவிடச் செய்வேன்; விவேகங்கெட்ட மூடா; யாரைப்பார்த்து அவளிவள் என்று பேசுகிறாய்; தலையாரி வேலை பார்க்கு முனக்கு இவ்வளவு அகம் பாவமா; துள்ளினமாடு பொதி சுமக்கு மென்ற பழமொழி யறியாயோ; என்னை இவன் அவமானமாகப்பேசியதை நீங்கள் கோர்ட்டில் சொல்லவேண்டும்; நான் ஸ்டேஷனுக்கு நடந்து போகக்கூடிய ஸ்திதியிலில்லை யென்பது இப்போது என்வசமிருந்த நகைமுதலிய வற்றினால் நீங்கள் தெரிந்து கொள்ளவில்லையா வெனக்கடுமையாகக் கோபத்துடன் சொன்னாள். இதைக்கேட்ட கனவான்களில் சிலர் அந்த அம்மாவை மரியாதையுடன் வண்டியிலழைத்துப்போக வேண்டியதுதான் ஞாயம்; அந்த அம்மாள் வெயிலில் வெளியே போயிருந்திருக்க மாட்டாளென்று தெரிகிறதென்று அங்கே னின்ற கானிஸ்டேபி ளொருவனை வண்டி கொண்டு வரும்படிக்கும் தான் வண்டிவாடகை கொடுப்பதாகவுஞ் சொன்னார். அவனந்தப்படி வண்டி கொண்டு வந்த வுடன் அந்த வீட்டின் கதவைப்பூட்டிக் கொண்டு சுகதேவி தன் வேலைக்காரியுடன் வண்டியிலேறிப் போனாள். போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனவுடன் இவர்களை யிறக்கி ஓரிடத்தி லிருக்கும்படிச்செய்து இனிஸ்பெக்டர் வந்தவுடன் ஸ்டேஷனுபிசர் இவளிடத்தில் வாக்கு மூலம் வாங்கினார். சுகதேவி தான் காசிப்பட்டணத்தில் இராமநாராயணதாஸ் மகள் சுகதேவி யென்றும், ஸ்தலயாத்திரையாக வந்ததாகவும், எழுதிவைக்க இனிஸ்பெக்டர் உனக்கு எந்தத் தெருவில் வீடு நம்பர்தெரியுமா வென்று கேட்டார்.

சுகதேவி:—கபீர்தாஸ் தெரு 25 நெ. சாவகாரி இராம நாராயணதாஸ் வீடு.

இனிஸ்பெக்டர்:—உனக்குத் தாய் தகப்பனிருக்கிறார்களா? என்ன சொத்திருக்கிறது?

சுகதேவி:—என் தகப்பனிறந்து ஐந்து வருடமாகிறது; என் தாயாரிருக்கின்றாள்; எனக்கு 50 லட்சத்துக்கு மேல் சொத்துக்களிருக்கிறது.

இனிஸ்பெக்டர்:—உன் தாயார் பெயரென்ன? அவளுயிருடனிருக்கும் போது உனக்குச் சொத்து பாத்திய மெவ்விதங்கிடைத்தது?

சுகதேவி:—என் தகப்பனார் எழுதிவைத்த உயில்ப்படி எனக்குச் சொத்துக்கள் கிடைத்தது; என் தாயார் பெயர் மகதேவி.

இனிஸ்பெக்டர்:—அந்த உயில் ரிஜிஸ்டராகியிருக்கிறதா? உனக்கு இப்போது வயதென்ன?

சுகதேவி:—அது ரிஜிஸ்டராகவில்லை; எனக்கு இப்போது வயது பதினேழாய்விட்டது.

இனிஸ்பெக்டர்:—போர்ஜரி உயிலேற்படுத்தியிருக்கிறாயோ? உன்னை யிழுத்துக்கொண்டு வந்த சுந்திரலால்தான் அதை யெழுதியிருக்கிறானோ? அந்தத் தயிரியத்தின் பேரில் தான் சொத்துக்களை கொள்ளை யடித்துக்கொண்டு ஜோடியாகப்புறப்பட்டீர்களோ? அவனை ஜெயிலிலடைத்து விட்டார்களல்லவா?

சுகதேவி:—வேறொன்று மும்மிடத்தில் சொல்ல எனக்கிஷ்டமில்லை; உம்முடைய ரூல்படி நடத்தும்.

இனிஸ்பெக்டர்:—இந்த வெளிப்பட்ட கழுதைக்கு முக்காடெதற்காகவேண்டும்; யாரடா கானிஸ்டேபில்; இந்தச் செறுக்கியின் முக்காட்டையெடு; இவள் லக்ஷணத்தைச்சற்றே பார்ப்போம்; இவள் மெத்த பதிவிரதையாம்; இவளைக்கையால் தொடாதீர்கள்; இவள் நிரம்ப ரூல்களெல்லாம் படித்திருக்கிறாளாம்.

இவர் சொற்படி இரண்டு கானிஸ்டேபில்கள் இவளை நெருங்கி இவள் முக்காட்டுத்துணியைப் பிடித்து இழுக்க அவள்ஐயையோ! ஐயையோ! படுபாவி! படுபாவி! யென்று கூக்குரலிட்டு அழுத சமயம் டிப்டி மாஜிஸ்டிரேட் அதிவேகமாய் அவிடம் வந்து விட்டார். இவரைக்கண்டவுடன் கானிஸ்டேபில்கள் மூலைக்கொருவராகப் பேரய் பதுங்கிவிட்டார்கள். டிப்டிமாஜிஸ்டிரேட் இனிஸ்பெக்டரைப்பார்த்து நீர் நேற்று இராத்திரி இந்தப் பெண் பிள்ளை

வீட்டுக்குப்போயிருந்தீரல்லவா? உண்மையைச் சொல்லும்; உம்முடைய விஷயங்களெல்லாம் நன்றாய் விசாரித்திருக்கிறேன் எனக் கேட்க, அவர் இவள் தன் சோர புருஷனுடன் சில திருட்டுச் சொத்துக்களைக் கைக்கொண்டு வந்து விட்டதாகத் தெரிந்து, இவள் இராத்திரியில் இந்தட்டவுனைவிட்டு ஓடிப்போகாமல்பந்தோபஸ்து செய்து, இன்று காலையில் சோதனைபோட்டேன்; சந்தேகப்பட்ட தடயங்களு மகப்பட்டிருக்கிறது; இவளை விசாரித்துக்கொண்டிருக்கிறேன்; இன்றைக்கே ரிபோர்ட்டு கொடுத்து விடுகிறேனென்றார். இதைக்கேட்ட சுகதேவி இவர் மாஜிஸ்டிரேட்டுதான்; தன்னுடைய மனுவின் பேரில்தா னிவ்விடம் வந்திருக்கவேண்டுமென நினைத்து அவர் காலில்விழுந்து "இவர் நேற்று இராத்திரி என் வீட்டுக்கு வந்து துராகிருதமான வார்த்தைகளைப்பேசினர். இன்று காலையில் என் வீட்டுக்கதவை நிர்பந்தத்தின் பேரில் திறக்கும்படியாகச்செய்து நானிருந்த மாடியின் கதவைத்திறக்கும்படி காமாதுரமான வார்த்தைகளைச் சொன்னார்; அவரது கெட்டவெண்ணத்தைதங்களுக்கு மனுமூலமாய்த் தெரிவித்தேன்; இப்போது என்னை இவ்விடத்தில் கொண்டு வந்து என்னுடைய போர்வையை யெடுத்து விடும்படி கானிஸ்டேபில்களுக்கு உத்திரவு கொடுக்க அவர்களந்தப்படி பிடித்திழுத்தார்கள்; நான் கத்தின சப்தம் தங்கள்காதிலுங் கேட்டிருக்கலாம்; இன்னும் சற்று நேரம் தாங்கள் வராமலிருக்கும் பட்சத்தில் என்னை மானபங்கஞ் செய்திருப்பார்கள்; இப்போது என்னை எஜமாங்கள் பார்த்து கச்சேரி அழைத்துப் போகாதவரையில், இந்த ஸ்டேஷனிலேயே நாக்கைப்பிடுங்கிக்கொண்டு சாகநேரும்; என்னுயிர் போன்ற மானத்தைக் காப்பாற்றவேண்டு" மெனக் கதறியழுதாள். மாஜிஸ்டிரேட் இவளது பரிதாப நிலையைக்கண்ணுற்று, ஸ்டேஷனு பிசரைக்கூப்பிட்டு, இந்தஅம்மாளை விசாரித்தாய் விட்டதா இல்லையா? விசாரிக்காவிட்டால் என் முன்னிலையில் விசாரி எனச் சொல்ல, ஸ்டேஷனுபீசர் விசாரித்தாய் விட்டதென்றார். உடனே மாஜிஸ்டிரேட் "விசாரணை செய்து விட்டால் இந்த அம்மாவை யிங்கேவைத்திருக்கக் காரணமென்ன? இரண்டு கானிஸ்டேபில்களுடன் வண்டியி லேற்றிக்கச்சேரிக்குக் கொண்டுபோ? இந்த அம்மாபோனபின்புதான் நானிவ்விடத்தை விட்டுப் போகவேண்டு" மெனச் சொன்னார். உடனே யொருகானிஸ்டேபில் ஓடிப்போய் ஒருஜட்கா கொண்டு வந்து அந்த சுக

தேவியையும் வேலைக்காரியு மேற்றிக்கொண்டுகச்சேரிக்குப்போய் விட்டார்கள். மாஜிஸ்டிரேட்தன் வீட்டுக்குப்போய் தனது சேவக னொருவனைக் கச்சேரிக்கு அனுப்பி, கோஷாபெண்பிள்ளை யொரு வள் கச்சேரி வாசலிலிருந்தால் அவளுடன் யார் யார் வந்து பேசு கிறார்களென்பதைத்தெரிந்து கொள்ளும்படிக்கும், அவளை யெவ ருந்தொந்திரவுகள் செய்யாமல் பார்த்துக்கொள்ளும்படிக்கும் உத் திரவு செய்தார். இனிஸ்பெக்டர் காலையிலனுப்பிய ரிபோர்ட்டை யனுசரித்து திருட்டுத்தடயங்க ளகபபட்டு ஜாப்தாவுடனனுப்பி யிருப்பதாகவும், அந்தத்திருட்டில் சுகதேவியும் சம்பந்தப்பட் டிருப்பதாக அவளுடையவாக்கு மூலத்தினாலேயே தெரிகிறதென் றும், அவளுக்குப் பத்து தினங்களுக்கு ரிமாண்டு கொடுக்கும் படிக்கும், ரிபோர்ட்டு எழுதச் செய்தது மன்றித்தான் போஜ னஞ்செய்து பதினொரு மணிக்குக் கச்சேரிக்கு வந்து விட்டார்.

டிப்டி மாஜிஸ்டிரேட் கச்சேரிக்கு வந்தவுடன் போலீஸ் ரிபோர்ட்டுகளிரண்டையும் நன்றாய் வாசித்துப்பார்த்து, தடய ஜாப்தாவில்கண்ட நகைகளை யெடுத்துத் தனக்குக் காண்பிவிக்கச் செய்தார். அவைகளைப்பார்த்தவுடன் இவைகளைக் கோட்டீஸ்வரன் வீட்டிலும் காண்பதரிதாயிருக்குமே! இதை யணிந்தவள் எவ்வித இலக்ஷணமுடைய வளாயிருக்கிறாளோ பார்ப்போம்! இவளது குடும்ப முதலியதைப்பற்றி விசாரிப்போ" மென்று குற்றவாளி யைத்தன் னெதிரில் கொண்டு வரும்படி ஆஞாபித்தார். அந்தப் படி மாஜிஸ்டிரேட் முன்பு கொண்டுவந்து நிறுத்தியவுடன் சுக தேவியைப்பார்த்து, "அம்மா ஜட்ஜி குற்றவாளியின்னா ரென்று முகத்தைப்பார்த்துத் தெரிந்துக் கொள்ளவேண்டும்; ஆகையால் முகத்தைமட்டில் காட்டுங்கள்; இந்த இடம் இராஜங்க ஸ்தானம் தோஷமில்லை" யெனக்கேட்க சுகதேவி அந்தப்படித்தன் தலை முக் காட்டைமட்டி லெடுத்துவிட்டாள். இவளது பூர்ணசந்திரன் போலும், தாவள்ளியமான தந்தம்போலு முள்ள முகத்தி னிரு பக்கத்திலும் சுக்கிரனைப்போல் பிரகாசிக்கும் இரண்டுவயிரத்தோடு களிெனொளி வீசுவதைப்பார்த்தவுடன் இவள் இரதியோ! மேனகை யோ! இந்திராணியோ! மகாலக்ஷ்மி போலுள்ள இவளை இந்த இனிஸ்பெக்டர் என்ன துன்பஞ்செய்தானோ! இவளது வரலாற் றைத் தெரிந்துகொள்ளலாமெனக் கருதி, "அம்மாஉங்கள் தாயார் மகதேவியம்மாளுக்கு சகோதரரிருக்கிறார்களல்லவா? உங்கள் வீடு நாலுமாடிக ளுள்ளதல்லவா? இரண்டாவது மாடியில், கிருஷ்ணவ

தார இராமாவதாரப் படங்களனேக மிருக்கிறதல்லவா? நிலைக் கண்ணாடிகள் நாலுபுறத்திலும் வைக்கப்பட்டிருக்கிறதல்லவா? அந்த மாடிக்கு இரண்டுபுரங்களிலிருந்தும் வரலாமல்லவா'' வெனக்கேட்டார். இவ்வார்த்தைகள் சொன்னவுடன் சுகதேவி இவர் நம்முடைய வீட்டுக்கு வந்திருக்கிறாரென்று நிச்சயமாகத்தெரிகிறது; சென்றமாதத்தில் நம்முடைய வீட்டுக்குவந்த டிப்டிகலெக்டரிவர் தானோ; இவரை நாம் அவமானப்படுத்தி யனுப்பினாலும் இவர் அதைப்பற்றி தன்மனதில் எவ்வித வருத்தமுமில்லாமல் நம்மிடத்தில் கருணையாய்ப்பேசுகிறார்; இவருடைய தயவினாலிந்த ஆபத்தினின்றுந் தப்பித்துக்கொள்ளலாம்; இவரை எந்தவிதத்தில் என் சொற்படி நடக்கச் செய்யலாமென, யோசித்துக் குனிந்துகொண்டு நின்று தலையை நிமிர்ந்து ஜட்ஜியின்முகத்தை சற்றுநேர முற்றுப் பார்த்தும், கடைக்கண்ணால் பார்த்தும், ''தாங்கள் சொல்லு மடையாளங்களெல்லாம் சரிதான்; எனக்கு மாமனிருவர்கள்; அவர்களில் மூத்தவர் ஹரிநாத்; எங்கள்குடும்ப விஷயங்களெல்லாம் தங்களுக்கு நன்றாய்த் தெரிந்திருக்கிறது; அந்தச்சொத்துக்கள் முழுவதும் என்னுடைய தென்பதுந் தங்களுக்குத் தெரிந்திருக்குமே; இந்த இனிஸ்பெக்டர் நான் திருடி என்றும், திருட்டுச் சொத்துக்களைக் கொண்டுவந்து விட்டேனென்றுஞ் சார்ஜ்செய்திருக்கிறார்களே! இந்த அநியாயமெங்கேயாவது பார்த்ததுண்டா! தாயாருக்கும் பெண்ணுக்கும் ஏதோசில விஷயங்களில் வருத்தமிருந்து வெளிதேசத்துக்கு வந்துவிட்டால் கண்டவர்கள் சொற்படிக்கெல்லாங்கேட்பார்களா'' வென்று ஜட்ஜியைக்கடைக்கண்ணால் பார்த்து கண்ணீர்விட் டழுதாள். மாஜிஸ்டிரேட் இதைக்கேட்டு மனமிரங்கி அங்கே வேடிக்கைப் பார்க்கவந்தவர்களைப் பார்த்து இந்த அம்மாளுக்கு யாராவதுஐந்நூறு ரூபாய்க்கு ஜாமீன் கொடுக்கிறீர்களா? அந்த அம்மாள் நகைகளும் பவுனும் ஐம்பதினாயிரத்துக்குமேல் என்கைவசமிருக்கிறது; அந்த அம்மா ளின்னும் ஒருவாரத்துக்கு இந்தவூரிலேயே யிருக்கும்படிபந்தோபஸ்தாய் பார்த்துக்கொள்ளச் செய்கிறேன். அந்த அம்மாள் குடும்பத்தைப்பற்றி நான் நன்றாயறிவேன்; ஆகிலும் போலீசார் ரிபோர்ட்டை விசாரித்துத்தான் முடிவுசெய்யவேண்டும்; நாளதுமாதம் 15 தேதி ஹீயரிங்கிபோடப் பட்டிருக்கிறது; அன்றையதினம் 10 மணிக்கு இந்த கோர்ட்டில் ஹாஜர்செய்யவேண்டுமெனச் சொன்னார். இதைக்கேட்டிருந்தவர்களி லொருவர் தான் அந்த அம்மாள் குடியிருக்கும் வீட்டுக்கு

அடுத்த வீடென்றும், தனக்கு ரூபா ஐம்பதினாயிரத்துக்குச் சொத்துக்களிருப்பதாகவும், ஜாமீன் கொடுப்பதாகவும் சொன்னதின் பேரில் அவரிடம்ஜாமீன் முச்சலிகா வாங்கிக்கொண்டு சுகதேவியைப் பார்த்து "உன்னை இந்த இராமதாஸின் ஜாமீன்பேரில் விட்டிருக்கிறேன்; அடுத்த 15 ம் தேதி வாயிதா போடப்பட்டிருக்கிறது; அன்றைய தினம் 10மணிகருக் கோர்ட்டிலாஜராகாவிட்டால் வாரண்டில் பிடித்து ஜெயிலில்வைப்பது மன்றி கோர்ட்டாருத்திரவுக்குக் கீழ்ப்படியாமைக்காகத் தெண்டனையும் விதிப்பார்கள்; நீர் இந்தப் பட்டணத்தில் இப்போதுள்ள வீட்டிலேயே இருக்கவேண்டும்; இந்தக் கேஸ் முடிகிற வரையில் உம்முடைய வீட்டுக்கு எவரும் வராதபடி நான் பார்த்துக்கொள்ளச் செய்கிறேன்; நான் சொன்னது தெரிந்ததாவென்று சொன்னவுடன் சுகதேவி இவர் தெரிந்ததா வென்று கேட்கிறாரே இது எதற்காகச் சொன்ன வார்த்தை யென்று சற்றே நிதானித்துக் கடைக்கண்ணால் இரண்டொருதடவை ஜட்ஜியைப்பார்த்துத் "தெரிந்து கொண்டேன்" என்று பதிற் சொன்னாள்.

உடனே ஜட்ஜி சுகதேவியைப் பார்த்து நீர் போய் வரலாமென்று சொல்ல அவள் தன் வேலைக்காரியை அழைத்து ஒரு வண்டி கொண்டுவரச் செய்து அதிலிருவரு மேறிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தார்கள். இவளது சுந்திரமான முகத்தைப் பார்த்தவுடன் இன்ஸ்பெக்டருக்குண்டாகிய காதலுக்களவில்லை; தன்னெண்ணம் நிறைவேறாமற்போயிற்றே யென்ற ஏக்கமும் ஜாஸ்தியாய் விட்டது. பின்பு ஒருவாறாகத் தன் மனதைத் தேற்றிக்கொண்டு தன்னருகிலிருந்த இராஜேந்திரலாலைக்கூப்பிட்டு இவளின்னாரென்பதை நான்முன்னாலறிந்து கொள்ளாமல் அவள் மனதுக்கு வருத்தம் வரும்படியாகச் செய்துவிட்டேன்; அவளை நயந்தேகாரியங் கொண்டுபோய் விடலாமென்று நினைக்கிறேன்; அவளிடம் இப்போது யாதொருபணமுமில்லை; அவள் போட்டிருக்கிற நகையை விற்றுத்தான் சாப்பாட்டுச்செலவு முதலானதுஞ்செய்யவேண்டும்; இப்போது அவளுக்கு வேண்டிய உதவி செய்யும்பட்சத்தில் நம்மிடத்தில் மிகுந்த பிரீதியாயிருப்பாள்; ஆகையால் நீ அவளுக்கு வேண்டிய சாப்பாடு முதலியது எடுத்துக்கொண்டு அவள் வீட்டுக்குப் போய் இராமச்சந்திரனிருந்த ஹோட்டல்காரன்; அவனுக்காக வந்ததாய்ச் சொல்லிக் கொடு; நீயே மிகுந்த சரசமாகப்

பேசி முடித்துவிடலாம்; சீக்கிரம் போவென்று சொன்னார். இதைக் கேட்ட இராஜேந்திரலால் அந்தப்படியே போய் வருவதாகச் சொல்லித் தன்னுடைய ஹோட்டலுக்குப்போய் மிருந்த சுசீந்ரி யுள்ள ரொட்டி சாதம் பட்சணை முதலியனவற்றை யெடுத்துக் கொண்டு, சுகதேவி வீட்டுக்குப்போய் கதவைத் தட்டினான். வேலைக்காரி யார் கூப்பிடுகிறதெனக்கேட்க இராஜேந்திரன் தான் ஹோட்டல்காரனென்றும், சாப்பாடு கொண்டு வந்திருப்பதாகவுஞ் சொன்னான். உடனே கதவைத்திறந்து பார்க்க வேறு மனிதனை யிருக்கக்கண்டு, நீர் யார்? முன் கொண்டு வந்தவரெங்கே யென்று கேட்க, இராஜேந்திரன் அவர் ஊரிலில்லை; என்னுடைய ஹோட்டலில் தான் அவர் சமயல் செய்தார்; அவர்தான் என்னைச்சாப்பாடு கொண்டு வந்து போடும்படிச் சொன்னார்; இதை யெடுத்துவையுங் கள்; சாயங்காலம் வருகிறே" னென்று சொல்லிவிட்டுப் போய் விட்டான். அவன் போனபின்பு தாம்பாளத்தைத்திறந்து பார்க்க பலவகை பட்சணங்களிருக்கக்கண்டு சந்தோஷித்து அவர்களிருவ ரும் போஜனஞ் செய்தார்கள். சாயங்காலமும் இராஜேந்திரன் வந்து சாப்பாடு கொடுத்துப்போனான். இவ்விதம் மூன்று நாள் வரையில் யாதொன்றும் பேசாமலும், ரூபாயாதொன்றுங் கேட் காமலும், போஜன மளித்துவந்தான்; சுகதேவியும் அவனுக்கு யாதொன்றுங் கொடுக்கவில்லை. இந்த மூன்று தினங்களிலும் பிரதி தினம் இராத்திரி காலங்களில் ஒரு கிழவன் சுகதேவியின் வீட் டுக்கு வந்து கதவைத்தட்டி யாராவதுவந்து கலகஞ் செய்கிறார் களா வென்று கேட்க, வேலைக்காரி இல்லை யென்று சொல்லி வந் தாள். நாலா நாள் தினம் அந்தக்கிழவன் கதவைத்தட்டி "யாரம் மா வீட்டில் கதவைத்திறக்கவேண்டு" மென்று கேட்க வேலைக் காரி யார் கூப்பிடுகிறதென்றாள். அதற்குக்கிழவன் "நான் டிப்டி கலெக்டர் வீட்டு சமையல் காரன்; எஜமான் அம்மாவுக்கு சில சமாசாரங்கள் சொல்லிவரச் சொன்னார்கள்; அதர்க்காகத்தான் மூன்று தினமாக வந்தலைகிறேன்" என்றான். இவர் யாரென்று வேலைக்காரிகதவைத் திறந்து பார்க்க 60 வயதுள்ள கிழவனாக விருப்பதைக்கண்டு தன் எஜமானியிடம் வந்து இவர் சொன்ன சங்கதியைத் தெரிவித்தாள். சுகதேவி சற்றே யாலோஜித்து அவனை யுள்ளே அழைத்து வா வென்றுசொல்ல, அவளந்தப்படி அழைத்து வந்து தன் எஜமானியிடங் கொண்டுவந்துவிட்டாள். இந்தக் கல்லியாணசிங் சுகதேவியைப்பார்த்து "எங்கள் எஜமான்

உங்களுக்கு இவ்வித ஆபத்து வந்ததைப்பற்றிப் படுந்துன்பத்தைச் சொல்ல ஆதிசேஷனாலுந் திரமன்று; உங்களைக் கோர்ட்டில் பார்த்தது முதல் அவர்களுக்கு நல்ல தூக்கமேகிடையாது; நடு இராத்திரியில் எழுந்திருந்து இந்த வீட்டுக்கு வந்து யாராவது கலகஞ்செய்கிறார்களா வென்று என்னைப் பார்த்துவரச் சொல்வார்கள்; நான்போய்க்கலகம் யாதொன்று மில்லை யென்று சொன்ன பிற்பாடு தான் படுப்பார்கள்; இவ்விதம் அல்லும் பகலுமுங்கள் கவலையாகவே யிருக்கிறார்கள்; எதற்காக இவ்வளவு கஷ்டப்படுகிறார்களென்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம்; இவர்களை உங்கள் மாமா அழைத்துப்போய் உங்கள் தாயாரிடத்தில் பேசிக்கொண்டு வந்திருக்கிறார்களாம்; உங்களை யாதொன்றுக்கும் பயப்படவேண்டாமென்று சொல்லச் சொன்னார்கள்; அது விஷயங்களைச் சொல்லிப் போகத்தான் வந்தேன்" னென்றான். டிப்டி மாஜிஸ்டிரேட் சொல்லி யனுப்பிய தெதற்காக வென்பதை நன்றாய்த் தெரிந்து கொண்ட சுகதேவி அந்தக் கிழவனைப்பார்த்து "நான் நிராதரவாக என்தாயார் பேரில் கோபித்துக்கொண்டு வெளியில் வந்து விட்டது வேறெந்தக் காரணங்களுக்குமல்ல; உங்கள் எஜமான் எங்களிடம் பேசினது எனக்குந் தெரியும்; ஒரு அயோக்கியன் என்தாயார் மனதைக்கலைத்து யாரோ ஒரு வக்கிலுக்குக் கொடுத்து விடுவதாக எனக்குந்தெரியாமல் முகூர்த்தம் வைத்துவிட்டார்கள்; நான் அந்த முகூர்த்தத்தைத் தடைசெய்ய முடியாதென்று நினைத்து என்னுடைய உபாத்தியாயர் தம்பியும் எனக்கு பாலிய முதல் சினேகமுமான சுந்திரலாலென்ற ஒரு சிறு பய்யனை அழைத்துக்கொண்டு உங்கள் எஜமான் அலகபாத்தி லிருப்பதாகக் கேழ்விப்பட்டு அவிடம் வந்தேன்; அந்த சுந்திரலாலை போலீசார்வாரண்டில் பிடித்துப்போய் விட்டதாகத்தெரிந்தது; எங்களுக்குச் சாப்பாடுகொண்டு வந்து போட்ட பிராமணன் டிப்டிகலெக்டர் இந்த வூரிலிருப்பதாக அழைத்துவந்தார்; அவர்களுக்கு என் வரவைத் தெரிவிப்பதற்குமுன் எனக்கு இவ்வித ஆபத்துக்கள் வந்து விட்டது; இந்தக்கேஸ் விடுதலையானவுடன் உங்கள் எஜமானை யெங்கள் பட்டணத்துக்கு அழைத்துப்போய் கோர்ட்டில் சில நடவடிக்கைகள் நடத்த வேண்டியிருக்கிறது; இவர்களுடன் என்தாயார் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டது முதல் இவர்களைக் கொண்டே என் காரியங்களை முடித்துக் கொள்ளவேண்டுமென்று அந்த நோக்கத்துடனே தான் இந்தப்

பட்டணத்துக்கு வந்தேன்; இது விபரத்தை உங்கள் எஜமானுக்குத் தெரிவிக்கவேண்டு" மென்றாள். கல்லியாணசிங் சுகதேவியின் சாதுர்யமான வார்த்தைகளுக்குச் சந்தோஷித்து அவள் சொன்ன விஷயங்களெல்லாமொன்றும் விடாமல் டிப்டிகலெக்டரிடஞ் சொன்னான். இவளை வேறொருவருக்கு விவாகஞ்செய்துவிட எத்தனித்ததி னிமித்தம் தன்னைத் தேடிக்கொண்டு வந்து விட்டதாகச்சொன்னதை டிப்டிகலெக்டர் கேட்டவுடன் ஆனந்த சாகரத்திலாழ்ந்து இவளை மானபங்கஞ் செய்ய எத்தனித்த இனிஸ்பெக்டரை யெந்த விதத்திலாவது வேலையைப் போக்கி அவரைத் தெண்டனைக்குள்ளாக்க வேண்டியதி னிமித்தம் சுகதேவி யனுப்பிய மனுவைப் பிராதாக வைத்துக்கொண்டு அதற்கு உறுதி மொழி வாங்கி எந்த சாக்ஷியத்தை யாவது கொண்டு தெண்டித்து விடத் தக்க வேற்பாடுகள் செய்துவந்தார்.

இனிஸ்பெக்டர் தானிந்த சுகதேவியை விவாகஞ் செய்ய வேண்டியதி னிமித்தம் இவள் தாயாரிடத்தில் பேசினதும், அந்த அம்மாள் பின்னால் கடிதமெழுதுவதாகச் சொன்னதும், இவளின்னா ரென்று முன்னாடித் தெரிந்துகொள்ளாமல் தகாத வார்த்தைகள் பேசியதை மன்னிக்கவேண்டுமென்றும், இந்தக் கேசைத் தள்ளுபடி செய்யும்படியாகச் செய்துவிடுவதாகவும், அவளுக்கு எடுத்துச் சொல்லி தன்பேரிலுள்ள கோபந்தணியும்படி யாகச் செய்ய வேண்டுமென்று இராஜேந்திரலாலிடஞ் சொல்லியனுப்பினார். அவனந்தப்படி நாலா நாள்தினம் சாப்பாடு கொண்டுவந்து கொடுத்து வேலைக்காரியைப் பார்த்து, உன் எஜமானியிடம் ஒரு வார்த்தை சொல்லவேண்டி யிருக்கிறது; அவர்கள் காதில்படும் படியாகச் சொன்னால் போதுமானது; நேரில்பார்த்துப் பேச வேண்டு மென்ப தவசியமில்லை" யென்றார். இந்த வார்த்தையை சுகதேவிக்கு அறிவிக்க அவள் "மாடிக்கதவுக் கப்புறமிருந்து சொல்லவேண்டிய விஷயங்களைச் சொல்லட்டும்; நான் பதிற்சொல்லக் கூடியதாக விருந்தாலுஞ் சொல்லுகிறேன்" னென்றாள். இதை இராஜேந்திரனுக்கு வேலைக்காரி அறிவிக்க அவர் மாடிக்கதவடியில் வந்து நின்று "நான் சமயல்வேலை செய்து ஜீவிப்பவன்; யார் எது சொன்னாலுந் தட்டாமல் செய்யக் கடமைப்பட்டவன்; நான் சொல்வதில் குற்றங்குறைக ளிருந்தபோதிலும் என்னை மன்னிக்க வேண்டும்; இந்தட் டவுன்போலீஸ் எஜமான் தங்கள் வீட்டுக்கு

நாலைந்து மாதங்களுக்கு முன் வந்திருந்தார்களாம்; தங்கள் தாயாருடன் பேசிக்கொண்டிருந்ததில் அவர்கள் கடிதம் போடுவதாகச் சொன்னார்களாம்; அவர்கள் அலகபாத்தி லிருந்தவரையில் பிரதி தினமும் தங்கள் தாயார் கடிதத்தை யெதிர்பார்த்துக்கொண்டே யிருந்தார்களாம்; இவிடம்வந்து ஒருமாதந்தா னாகிறதாம்; தங்கள் முகத்தைக் கோர்ட்டில் பார்த்தபின்புதான் தாங்களின்னாரென்ப தாகத் தெரிந்ததாம்; அதற்கு முன்பு நீங்களின்னாரென்று அவர்களுக்குப் பிரமாணமாகத் தெரியாதாம்; வேறு போலீசார் கையில் சிக்காதிருந்ததே மிகுந்த புண்ணியமென்றும், தங்களிடம் சில தகாதவார்த்தைகள் சொன்னதற்காக மன்னிப்புக் கேட்கச் சொன்னார்கள்; அவர்கள் பேரில்கொண்ட கோபத்தைத் தணிக்கச்சொன்னார்கள்; தங்கள் காலாலிட்ட வேலையைத் தலையால் செய்வதாகச் சொல்லச்சொன்னார்கள்; கோர்ட்டில் வாக்குமூலங் கொடுப்பது மட்டில் சில வார்த்தைகள் சொல்லிக்கொடுக்கவேண்டுமாம்; அதற்குத் தங்களுக்கெப்போது சவுகரியப்படுமென்பதைத் தெரிந்துவரச்சொன்னார்கள்” என்று சொல்ல, சுகதேவி சற்றே நிதானித்து இவர்நம்முடைய வீட்டுக்கு வந்திருந்தாலு மிருக்கலாம்; இவரிப்போது பணிவாக வார்த்தை சொல்வதை நம்பக் கூடாது; இவர் செய்த அயோக்கியத் தனத்துக்குத் தக்க சிக்ஷை விதிக்க வேண்டுமெனத் தீர்மானித்து நீர் சொன்ன இனிஸ்பெக்டர் எங்கள் வீட்டுக்கு வந்துபோனதுமட்டில் தெரியும்; அவரைப் பார்த்துச் சில விஷயங்கள் நான் நேரில் பேசஃ ஆவலுடையவளாக யிருந்தேன்; சில அயோக்கியர்கள் என்தாயார் மனதைப்பேதிக்கச் செய்து ஒரு வக்கீலுக்கு என்னைக் கலியாணஞ் செய்துவைக்க முகூர்த்தம் நிச்சயஞ் செய்துவிட்டார்கள்; என்தகப்பனாரெழுதிய உயில் ரிஜிஸ்டராகாததால் அதை மறைத்து எனக்கு நஷ்டஞ் செய்ய என்மாமன் சதியோஜனை செய்திருக்கிறான்; அந்தஉயில் வேறொருவர் கையில் சிக்கியிருக்கிறது; அவர் இருபதினாயிர ரூபாய் பணங் கேட்கிறார்; அதற்காகத்தான் வீட்டிலிருந்த பெட்டியை யுடைத்து வேண்டிய நகை பவுன்களை யெடுத்துக்கொண்டு உங்கள் எஜமானிடம் ஒப்பிவித்து அதைச்செலவுக்கு வைத்துக் கொண்டு உயில்பத்திரத்தை சோதனைவாரண்டு போட்டு எடுத்தாவது அல்லது அதை வைத்திருப்பவர் கேட்ட தொகையைக் கொடுத்தாவது வெளிப்படுத்திக் கோர்டில் தாகல் செய்து வழக்கிட்டு எனக்குள்ள 50 லட்சரூபாய் பொருமானமுள்ள சொத்துக்

களைக்கைக் கொள்ளவேண்டி யிருக்கிறது; அதற்காகத்தான் உப்முடைய எஜமானைப்பார்க்க அலகபாத்துக்கு வந்தேன்; அவிடத்தில் விசாரித்ததில் இந்தட் டவுனுக்கு மாற்றலாய் விட்டதாகக் கேழ்விப்பட்டு இவிடம்வந்தேன்; இந்தட் டவுனில் பல இனிஸ்பெக்டர்களிருப் பார்களாதலாலும், நான் அவர்களை நேரிலாவது படத்தின்மூலமாகவாவது பார்த்ததில்லை யாதலாலும், பெண்பிள்ளை புத்தியால் சில தூஷணமான வார்த்தைகளைச் சொல்லிவிட்டேன்; அந்தப்பற்றி மன்னிக்கும்படி நான் மிகுந்த வணக்கமாய் கேட்டுக்கொண்டதாகச் சொல்லவேண்டும்; சுந்திரலால் என் உபாத்தியாயருடைய தம்பி; எனக்கு நன்றாய்த் தெரிந்த சிறுபய்யன்; அவனைத்துணைக்காக அழைத்துவந்தேன்; என்னுடைய நகை பணமுதலியதைப்பற்றி கேஸ் ஏற்பட்டிருப்பதால் அவைகளென் கைக்கு இப்போது கிடைக்காது; இருபதினாயிரரூபா யாவது எனக்கு இப்போது வேண்டும்; அதை யெடுத்துக்கொண்டு என் பின்னால் காசிக்குவரட்டும்; எந்த விதமாயாவது நயந்து பேசித் தொகைகொடுத்து உயிலை வெளிப்படுத்தி விடுகிறேன்; அந்த உதவி புரிந்தால் அவர்களை நான் மறப்பேனா! இப்போது இனிஸ்பெக்டர் என் வீட்டுக்குவந்தால் எல்லோரும் சந்தேகப்படுவார்கள்; நான் சொல்லவேண்டியவைகளெல்லாம் விபரமாக எழுதி வாங்கிவாருங்கள்; நான் நெட்டுரு செய்து கோர்ட்டில் சொல்லிவிடுகிறேன்" என்றாள். இவள் சொன்ன வார்த்தைகள் ஒன்றேனும் விடாமல் இராஜேந்திரன் இனிஸ்பெக்டரிடஞ் சொல்ல அவர் மிகுந்த சந்தோஷமாகி, இவருக்கு அவள் பேரிலுள்ள காமமிகுதியால் அவள் சொல்வது உண்மையென நினைத்து, இருபதினாயிர ரூபாய் நோட்டுக்களை ஒரு கடுதாசிப் பைக்குள்வைத்து, தான் தெருவில் நின்றுகொண்டு அதைச்சுகதேவியிடங் கொடுத்து, அது வந்துசேர்ந்த விபரம் தனக்கு நேரில் தெரிவிக்கும்படிச் சொல்ல வேண்டுமென்று இராஜேந்திரனிடங் கொடுத்தார். அவனந்தப்படி வேலைக்காரியைக் கூப்பிட்டு அவள் கதவுதிறந்தவுடன் உள்ளே போய் சுகதேவியின் மாடிக்கதவடியில் நின்று அம்மா! அம்மா! வெனக் கதவைத்தட்டினான். அவள் யாரென்று கேட்க, நான்தான் பனார்ஜி; நேற்று தினம் பேசிப்போனவன்; நீங்கள் கேட்ட பணமுழுவதுங் கொடுத்து விட்டார்கள்; இதோ கொண்டுவந்திருக்கிறேன். இதை வாங்கிக்கொள்ளுங்க ளென்று சொல்ல, சுகதேவிகதவை ஒரு புறந்திறந்து உள்ளே வய்யுமென்றாள். பனார்ஜி ஒருபெரியகவரைக்

கொடுத்தவுடன் அதை யொடைத்துப்பார்க்க எல்லாம் நோட்டுகளாக யிருக்கவும், அவைகளில் இனிஸ்பெக்டர் கையெழுத்துக்களில்லாதிருக்கவுங் கண்டு, அவைகளில் அவர் கையெழுத்துசெய்து கொண்டுவந்து கொடுக்கும்படி வாபீஸ்செய்து விட்டாள். இதை யெடுத்துக்கொண்டு அவ்விட்டுக்கு எதிர்த்த வீட்டுத்திண்ணையி லுட்கார்ந்து கொண்டும் சுகதேவியிருக்கும் மாடியை நோக்கிப்பார்த்துக்கொண்டு மிருந்த இனிஸ்பெக்டரிடங் கொடுத்து, இந்த நோட்டுகளில் உங்கள் கையெழுத்துவேண்டுமாம்; அதைப் பூர்த்திசெய்து கொடுங்களென்று கேட்டான். அவர் அந்தப்படி அந்த நோட்டுகளி லெல்லாங்கையெழுத்துசெய்து கொடுக்க, அவைகளை யெடுத்துப்போய் பனர்ஜி சுகதேவியம்மாளிடங் கொடுத்து எஜமான் என்னை நம்பாமல் எதிர்த்த வீட்டுத் திண்ணையி லுட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்; தாங்கள் தயவுசெய்து மாடியில் நின்றபடி நோட்டுகள் வந்துசேர்ந்த விபரமவர்களுக்குத் தெரிவித்துவிடவேண்டு மென்று கெஞ்சினன். சுகதேவி அந்தப்படியே சொல்வதாகச் சொல்லி எதிர்விட்டுத்திண்ணையிலிருந்து தன் மாடியைப் பார்த்தவண்ணமாக விருந்த இனிஸ்பக்டரைப் பார்த்து, மிகுந்த சந்தோஷ முகத்துடனும், புன்சிரிப்புடனுமிரண்டு கைகளையுந் தூக்கி, இரண்டு கைவிரல்களையும் இரண்டுதரம் மடக்கியும், தன் கையிலுள்ள நோட்டுகளைத் தூக்கிக்காட்டியும், ஜாடைசொன்னள். மலர்ந்த செந்தாமரைப்பூப் போன்ற முகத்தில் இரண்டு நீலோத்பலம்போன்ற கண்களின் பிரகாசத்தையும், பத்தரைமாற்றுத்தங்கம் போன்ற கைகளின் விறல்களில் வயிரம் செகப்புமுதலியன வற்றின் ஒளி வீசுமழகையும் பார்த்து இமைகொட்டாமல் சித்திரப்பதுமைபோல் இவளைப் பார்த்துக்கொண்டே நின்றார். இவர் தன்னை யுற்றுநோக்கு வதைப்பார்த்து இவருக்கு பயித்தியம் பிடித்துவிடுமென்று உள்ளே போய்விட்டாள். இவள் போனபின்பு இனிஸ்பெக்டர் தான் வளர்த்தகிளி தன்கையினின்றும் பறந்து ஓடிப்போய்விட்டது போலும், அகப்பட்ட பிறைதயல் கெட்டுப்போய்விட்டதுபோலும், மனம்பதறி மிகுந்த துன்பமடைந்து, பிரமை பிடித்தவர்போல் திண்ணையில்வந்து உட்கார்ந்துவிட்டார். இராஜேந்திரன் சுகதேவியிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு மதிமயங்கியிருந்த இனிஸ்பெக்டரை யழைத்துக்கொண்டுவந்து அவருக்கு அனேகத் தேறுதல்கள் சொல்லி, இனி நீங்களெவ்வித சந்தேகமும் படவேண்டாம்; உங்கள்கைகூடிவிட்ட

தென்று சொன்னான். இதைக்கேட்ட இனிஸ்பெக்டர் இவளது சந்தோஷகரமான முகத்தையும், இவள் என்னைப்பார்த்துப் புன் சிரிப்புடன் ஜாடைவார்த்தைகள் சொன்னதையும், என்கண்கள் பார்த்து மனதைப் புண்ணாக்கிவிட்டது; நான் அவளது திரு முகத்தை யென்று காணப்போகிறேன்; அவள் பால்வடியும் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் பசி கோபத்துப் போகுமே! ஐயோ நானவளைப் பலவிதமாகத் தூஷித்துப்பேசிய தால் மனம்வருந்தி வாடுகிறாளோ; யென்ன வெண்ணங் கொண் டிருக்கிறாளோ; தெரிய வில்லையே; என்னாவி சோருகிறதே எனச் சொல்ல இராஜேந்திரன் நீங்கள் சந்தேகப்படவேண்டாம்.

கதளிவீரர் களத்திடை வையினும்
குதலை வாயிற் குழவிகள் வையினும்
மதன லீலையில் மங்கையர் வையினும்
இதமுறச் செவிக்கின்பம் விளைக்குமே.

என்ற ஆன்றோர் வாக்கியப்படி நீங்களொருவருக்கொருவர் திட்டிக்கொண்டது தேவாமிருதம் போலல்லவா விருக்கும். தம் பதிகள் பேசிக்கொள்வது சகஜந்தானே யென்று சொல்லி இனிஸ் பெக்டரை உற்சாகப்படுத்திவிட்டான்.

ஸ்டேஷனாபீசர் சுகதேவியம்மாளிடமிருந்து தடயங்களகப் பட்டதைப்பற்றி காசிநகர் போலீசாருக்குத் தெரிவிக்க அந்த இனிஸ்பெக்டர் அத்தடயங்களை காசிநகர்முதலாவது வகுப்பு மாஜிஸ்டிரேட்டாரிடமனுப்ப வேண்டியதென்றும், சுகதேவி பேரில் குற்றஞ்சாட்டப்படவில்லை யென்றும், அவள் 14 வயதுள்ள மைனரென்றும், அவளை சாட்சியாகவிசாரிக்க வேண்டியிருப்பதாலுடனே காசிக்குத்தகுந்த பந்தோபஸ்துடன் அனுப்பிவிட வேண்டுமென்று, மெழுதிவிட்டார். இந்த விபரப்படி ஸ்டேஷனாபீசர் டிப்டிமாஜிஸ்டிரேட்டுக்கு ரிபோர்ட்டு செய்து விட்டார். விசாரணைக்குக் குறிப்பிட்ட பிப்பரவரி மாதம் 15 தேதி குற்றவாளிகளாகிய சுகதேவியும் இராமச்சந்திர பனார்ஜியும் கோர்ட்டில் ஆஜர் செய்யப்பட்டவுடன் டிப்டிமாஜிஸ்டிரேட் தஸ்தாவேஜிகளைப் பார்வையிட்டு இவர்களை விடுதலை செய்திருப்பதாகவும், தடயங்கள் களவில் சம்பந்தப்பட்டதென்று தெரிவதால் அவைகள் காசிநகர் முதலாவது வகுப்பு மாஜிஸ்டிரேட் கோர்ட்டாரிடம் அனுப்பப்படுமென்றும், அந்தக் கோர்ட்டில் அவரவர்களுக்குள்ள

பாத்தியங்களை ஸ்தாபித்துப் பெற்றுக்கொள்ளலா மென்றும், சுகதேவி 14 வயதுள்ள மைனரென்றும், அவளைச் சாக்ஷியாக விசாரிக்ககாசி மாஜிஸ்டிரேட் கோர்ட்டுக்கனுப்ப வேண்டுமென்றும், தீர்ப்புசொன்னார்கள். இதைச் சொன்னவுடன் மாஜிஸ்டிரேட் சுகதேவியைப் பார்த்து "உம்மை பந்தோபஸ்தாய் உம்முடைய வீட்டில் கொண்டுபோய்விடச் செய்கிறேன்; நீர் மனுவொன்று கொடுத்திருக்கிறீரே அதைப் பிராதாக வைத்துக்கொண்டு விசாரிக்கவேண்டுமா" வெனக்கேட்டார். சுகதேவி அந்தப்படிச்செய்ய வேண்டிய தவசியமென்று சொல்ல உடனே மாஜிஸ்டிரேட் இவளிடம் உறுதிமொழி வாங்கினார். சுகதேவி தன்மனுவில் கண்ட விஷயங்களை யனுசரித்து இனிஸ்பெக்டர் தன்னிடம் நேரில்ப் பேசிய விஷயங்களையும், சமையல்காரன் இராஜேந்திரலால் மூலமாகப் பேசியதையும், இருபதினாயிரரூபாய் நோட்டுகளனுப்பித் தன்னைச் சேரும்படி சொன்னதாகவும், வாக்குமூல மெழுதிவைத்து அந்த நோட்டுகளைக் கோர்ட்டி லா்ஜர் செய்து விட்டாள்.

இவளிவ்வித வாக்குமூலங் கொடுப்பதைக் கேட்டுக்கொண்டிருந்த இராமச்சந்திரன் ஜட்ஜியைப் பார்த்து "இந்த இராஜேந்திரன் இனிஸ்பெக்டருக்கு பாட்காத்தனஞ்செய்தே காலக்ஷேபஞ் செய்கிறான்; இந்தஅம்மாவுக்கு நான் சமயல்செய்துபோட்டதால் என்னைக்கொண்டு பேசச்சொன்னார்; அதற்கு நான் உடன்படவில்லை யாதலால் என்பேரில் கேஸ் உற்பத்திசெய்து என்னை ஜெயிலிலும் வைத்துவிட்டார்" என்றான். டிப்டி மாஜிஸ்டிரேட் இவர்களிருவருடைய வாக்குமூலங்களையும் வாங்கிக்கொண்டு போலீஸ் சூபரிண்டெண்டுக்கு ஒருகடிதமெழுதி அவரைத் தருவித்து இனிஸ்பெக்டர் பேரிலேற்பட்ட குற்றங்களையெடுத்துக் காட்டியதின்பேரில் அவர் இனிஸ்பெக்டரை மறு உத்திரவு வரையில் சஸ்பெண்டு செய்து இவருடைய உடுப்பு முதலியன யாவற்றையுமுடனே வாங்கிவிட்டார். பின்பு ஜட்ஜி இனிஸ்பெக்டரைப்பார்த்து சுகதேவி கோர்ட்டில் தாகல்செய்த நோட்டுகள் உம்முடையதாவெனக்கேட்க, அவர் அவைகள் தன்னுடையதல்ல; சுகதேவிக்குக் கொடுத்துவிட்டேன்; அவளுடையதுதா னென்றார். ஜட்ஜி அந்த நோட்டுகளை யவளிடந் திருப்பிக் கொடுத்துவிடலாமா வெனக் கேட்டார். அதற்கென்ன ஆக்ஷேபனையென்று இனிஸ்பெக்டர் சொல்ல அந்தப்படியே இவளிடம் வாக்குமூலம் வாங்கிக்கொண்டு

சுகதேவியிடம் அந்த நோட்டுகளைத் திருப்பிக்கொடுத்து இவைகளை வேண்டியகாலத்தில் கோர்ட்டி லாஜர்செய்யவேண்டுமெனச் சொன்னார். சுகதேவியைக் காசிபட்டணங்கொண்டுபோய் அவ்வூர் மாஜிஸ்டிரேட் முன்பாக ஆஜர்செய்யும்படி யோக்கியதை யுடைய இரண்டு கானிஸ்டேபில்களுடன் வேலைக்காரியையும் அனுப்பினார். அவர்களந்தப்படிப் போவதற்கு முன் சுகதேவிதனது ஜடையில் சோதனைக்கு அகப்படாமல் ஒளித்துவைத்திருந்த 5 பவுன்களி லொன்றைச் சாப்பாடு கொண்டுவந்து கொடுத்த இராஜேந்திரனிடங் கொடுக்கச்செய்ததுமன்றி இராமச்சந்திர னிடத்திலும் ஒரு பவுன் கொடுத்து அவர்களைப்பார்த்து "நீங்களிருவரும் மடத்தொழில் செய்துவருவதால் உங்களுக்கு துற்புத்திக ளேற்பட்டன; அதற்கு இப்போது நடந்த சிக்ஷையே போதுமான தெனச் சொல்லிவிட்டு காசிப்பட்டணம் வந்துசேர்ந்தார்கள். உடனே சுகதேவியை மாஜிஸ்டிரேட் முன்பாக ஆஜர்செய்தவுடன் ஜெயிலிலடைத்திருந்த குற்றவாளிகள் சுந்திரலால் அநந்தி இவ்விருவரையுங் கொண்டுவரும்படி ஜட்ஜி உத்திரவு செய்தார்.

அந்தப்படி அவர்களிருவரும் ஜட்ஜிமுன்பாகக் கொண்டுவரப்பட்டு அவர்களைக் கைதிகூண்டுகளில் நிருத்தியவுடன், சுகதேவி அவ்விருவரையும் பார்த்துத் தன் கண்களினின்றுந் தாரைதாரையாகக் கண்ணீர் சொரிய இவளைபார்த்து அவ்விருவரும் அந்தப்படியே கண்ணீர் சொரிந்தார்கள். ஜட்ஜி ரிச்மண்டுதுரை சுகதேவியைப்பார்த்து உனக்கு வயதென்ன? இந்தக் குற்றவாளிகள் உன்னையெங்கேயாவது உன் தாயார் வீட்டிலிருந்து அழைத்துப் போனார்களா வெனக்கேட்க, சுகதேவி தனக்கு பதினேழு வயதாகிறதென்றும், தன்னையொருவரு மழைத்துப்போகவில்லை யென்றும், தனக்கு இஷ்டமில்லாத வொருவருக்குத் தன்னை விவாகஞ்செய்து கொடுக்க எத்தனஞ் செய்ததின்பேரில் தனக்குப் பாலியமுதல் சிநேகிதரான சுந்திரலாலைத் துணைக்காக அழைத்துக்கொண்டு போனதாகவும், அநந்தியம்மாளுக்கு இந்த விஷயங்கள் யாதொன்றுந் தெரியாதென்றுஞ் சொன்னாள். ஆக்ரா கோர்ட்டிலிருந்த இவளுடைய நகை முதலியன இவர்களுடன் கூடவே அனுப்பப்பட்டிருந்தமையால் அவைகளை சுகதேவிக்குக் காண்பிக்கச்செய்து அவைகள் யாருடையதெனக்கேட்டார். அவைகள் யாவும் மற்றும் ஐம்பது இலட்சரூபாய் பெருமானமுள்ள சொத்துக்களும் என்

தகப்பனுர் செய்த உயில்படி கிடைத்திருக்கிறதென்று சுகதேவி சொல்ல ஜட்ஜி உடனே அந்தக் கேசை நடத்தும் இனிஸ்பெக்டனைப்பார்த்து, "இந்த அம்மாள் வயதைப் பற்றியும் இச்சொத்துக்கள் யாருடையதென்பதையும் ருஜிப்பிக்க வேண்டும்; சாக்ஷிகள் ஆஜரிலிருக்கிறார்களா வெனக்கேட்டார். அவர் ஒரு வாரங் கெடு வேண்டுமெனச் சொல்ல, அநந்தியம்மாளை விடுதலை செய்திருப்பதாகவும், சுந்திரலாலுக்கு ஜாமீன் கொடுத்தால் அவரையும் விடுதலை செய்து விடுவதாகவுஞ் சொன்னார். அங்கே நின்ற நந்திலால் என்பவர் தனக்கு இருபதினாயிரரூபாய்க்குச்சொத்துக்களிருப்பதாகவும், தான் ஜாமீன் கொடுப்பதாகவுஞ் சொல்லி முச்சலிகா எழுதிக்கொடுத்து சுந்திரலாலை விடுதலைசெய்தார்.

பின்பு இம்மூவரும் தனித் தோரிடத்திறகுச் சென்று அவரவர்களுக்குற்ற துன்பங்களைச்சொல்லி ஆறுதல்செய்துகொண்டு, இனி நடக்கவேண்டிய விஷயங்க ளென்ன வென்பதைப்பற்றி யோஜித்தார்கள். சுகதேவி "என் தகப்பன் செய்த உயிலில் என்னுடைய வயது யெழுதப்பட்டிருக்கிறது; எனக்குரிய சொத்து விபரங்களு மெழுதப்பட்டிருக்கிறது; அது என்னுடைய தாயாரிடத்திலிருப்பதால் அதை யெந்தத்தந்திரஞ் செய்தாவது வெளிப்படுத்திவிடுகிறேன்; நானிப்போது என்வீட்டிற்கு போகக் கூடாது; போனுல் நான்பயந்துகொண்டு வந்துவிட்டதாக முடியும்; ஆகையால் தனிவீடொன்று வாடகைக்குத் திட்டஞ்செய்ய வேண்டும்; இனிஸ்பெக்டர் கொடுத்த நோட்டுகள் என் கைவசமிருக்கிறது; வேண்டியவரை செலவழித்துத் தப்பித்துக் கொள்ளலாம்; பயப்படாதீர்க" ளெனச் சொன்னுள். இதைக்கேட்ட சுந்திரலால் சந்தோஷமடைந்து அவளிடமிருந்த நோட்டில் நூறுரூபாய் வாங்கிக்கொண்டு சவுகரியமான வீடொன்று திட்டஞ்செய்து வருவதாகவும், காலதாமதஞ் செய்யாமல் அவர்கள் தன் வீட்டிற்குப் போயிருக்கும்படிக்குஞ் சொன்னுர். அவர்களந்தப்படி ஒருவண்டி பிடித்துக்கொண்டு சுந்திரலால் வீடுபோய் சேர்ந்தார்கள். அநந்தியம்மாளுடன் சுகதேவியும் வருவதைப் பார்த்த சுக்கன்லாலும், இந்தர் சென்சிங்கும் மிகுந்த சந்தோஷமடைந்து சுந்திரலா லெங்கே யென்றுகேட்க, அநந்தி தம்பி கற்கண்டு வாங்கப் போயிருக்கிறுன்; இதோ வந்துவிடுவான்; இந்த அம்மாள் தான் சுகதேவி; இவளுடைய வாக்குமூலத்தினுல்தான் நாங்கள்

விடுதலை யடைந்தோம்; இந்த லக்ஷிமி நம்முடைய வீட்டிலெடு
பெடுத்து வைத்துவிட்டபடியால் இனி நமக்கெல்லாம் யோகந்தா
னென்று சொல்லி சுகதேவியின் முகத்தைப்பார்த்துச் சிரித்தாள்.
அதற்குச் சுகதேவி எந்த விதத்திலாவது உங்கள் குடும்பத்
துக்கு இனி க்ஷேமகாலந்தான்; நானிந்த வீட்டுக்கு இப்போது
தானு புதிதாக வருகிறேன்; பாலியத்திலேயே வந்துகொண்
டிருந்தே னென்று சொன்னாள். சுகதேவியுடனே அந்த வீட்டி
லேயே போஜனஞ்செய்து படுத்திருந்தாள். இவள் வந்துவிட்டதும்,
வாக்கு மூலங்கொடுத்து சுந்திரலாலையும், அவர் தமக்கையையும்,
விடுதலை செய்து அவர்களுடைய வீட்டுக்குப் போயிருப்பதையும்,
இவள் மாமன் ஹரிநாத்திடஞ் சிலர் போய்ச்சொன்னார்கள்.

சுகதேவி வீட்டைவிட்டுப்போய் விட்டாளென்றதைக்கேட்ட
மகதேவி அன்றயதின முதல் பயித்தியம் பிடித்தவள்போல், சுக
தேவி" "சுகதேவி"யென்று வீடெங்குந் தேடுவதும், "காணோமே"
"காணோமே" "ஐயோ" "ஐயோ" வென்று தலையிலும் மார்பிலு
மடித்துக்கொண்டு அழுவதும், கீழேகிடந்து புரளுவதும், தாதி
கள் ஆகாரங்கொண்டு வந்தால் அவர்களைத் திட்டுவதும் பசி
யால் களைத்து விழுவதும், தாங்காத பசியுற்றால் தண்ணீர் பால்
கஞ்சி முதலியது சாப்பிடுவதுமாக விருந்தாள். இவளது பரிதாப
நிலையைக் கண்ணால் பார்க்க எவருக்கும் சகிக்காது. சுகதேவி
வந்துவிட்டாளென்றதைக் கேழ்விப்பட்டவுடன் ஹரிநாத் ஓடோ
டியும் வந்து சோகமாய் படுத்திருக்கும் தன்தமக்கையையெழுப்பி
"சுகதேவி வந்துவிட்டாள்" "சுகதேவி வந்துவிட்டாள்" எழுந்
திரு" "எழுந்திரு" வெனச்சொன்னவுடன் மகதேவி திடுக்கிட்
டெழுந்து "எங்கே" "எங்கே" யென்று மிகுந்த ஆவலுடன்
கேட்க "இதோ காண்பிவிக்கிறேன்" "இதோ காண்பிவிக்கிறேன்"
"விசனத்தை விட்டுவிடு" "விசனத்தை விட்டுவிடு" வெனத் தயிரி
யஞ் சொல்லி, லாண்டாவைக் கொண்டுவரச் செய்து, அதில்
தன் தமக்கையை யேற்றித்தானு மேறிக்கொண்டு அநந்தியம்மாள்
வீடுவந்து சேர்ந்தார்கள். அவ்வீட்டின் அறையொன்றில் சுகதேவி
படுத்து நித்திரைசெய்வதை ஹரிநாத் தன்தமக்கைக்கு அறி
விக்க அவளுடனே யோடித் தன்மகளைத் கட்டிக்கொண்டு "அடி
யென்கண்ணே! கண்ணின்மணியே! கனக ரெத்தினமே! உன்னை
பொருநாளாவது பிரிந்தறியேனே! பிள்ளையில்லாப் பாவிபாகம்

போறுலும் பிள்ளையிலும் பதின்மடங்கு அதிகமாக நினைத்து உன் தகப்பனுஸ்திமுழுவது முனக்கே கொடுக்கும் படிக்கும், ஸ்வீகாரஞ்செய்துகொள்ள வேண்டாமென்றும், உன்வயிற்றிற் பிறக்கும் பிள்ளை யவருக்கு எள்ளுந்தண்ணீரு மிறைப்பானென்றுஞ் சொன்னேனே! உன்னைப்பிரிந்திருக்க என்மனமெப்படி சம்மதித்ததடி! தோகைமயிலே! இளங்குயிலே! உன்னுடைய அமிர்தம் போன்ற வாக்கைக் கேட்காமல் நான் வாடியுருகினேனடி; அதிர்ந்து என் எதிரி லெந்த வார்த்தையும் பேசியறியாயே! உனக்கு நான் என்ன குற்றஞ்செய்தேன்; நீ சொன்ன வார்த்தைகளில் நானெதைத் தட்டிவிட்டேன்; நானின்றைக்கோ நாளைக்கோ இறக்கப்போகிறேன்; உன் தகப்ப னிறந்தபோதே யென்னுவி போயிருக்கும்; உன்னாலல்லவா இதுவரையி லுயிர்தரித்திருக்கிறேன்; உன் பிள்ளையால் நானுமுன்தகப்பனும் சுவர்கப் பேறடையலாமென நினைத்திருக்கிறேன்; இவ்வுலகி லுன்னைத்தவிர உற்றதுணை யாரிருக்கிறார்கள்? ஐயோ உன்னுடம்பெல்லாங் கறுத்துப்போயிற்றே; மெலிந்துபோயிற்றே" யெனப் புலம்பி அழுதவுடன் சுகதேவி திடுக்கிட்டெழுந்து தன் தாய் கதறியழுவதைப்பார்த்துத் தானுங் கண்ணீர் சொரிந்து,நான்தான் வந்துவிட்டேனே;உங்களுக்கினியென்ன விசனம்; என்னைப் பார்த்துக்கொண் டிருந்தால் உங்களுக்குப் போதுமானதுதானே; நீங்களும் உங்கள் சகோதரருஞ் செய்தகாரியம் என்மனதுக்கு அதிருப்தியாயிருந்தது; அதைச்சொன்னால் வருத்தமுங் கோபமுமுண்டாகும்; கோபமே பாபங்களுக்கெல்லாங் காரணபூதமாக விருந்ததால் அனேக காரியங்கள் நடத்தும்படியாக விருக்கும்; பலவித வழக்குகள் தொடுக்கநேரும்; பிணம் பிடுங்கிக் கழுகுகள் போல் காத்துக் கொண்டிருக்கும் வக்கீல்களுக்கும் அவர்கள் குமஸ்தாக்கள், சாக்ஷிக்காரர், லா யேஜண்டுகள் முதலியவர்களுக்கும், கோர்ட்டுக்கும், ஹோட்டல் காரருக்கும், எண்ணிறந்த தொகையை வாரி வாரி யிறைக்க வேண்டியதாகவிருக்கும்; நம்முடைய குடும்பச் சொத்துக்கெல்லாமழிந்துவிடும்; அந்நஷ்டங்கள் யாரால் வந்ததென்றால் உங்கள் பேரில் குற்றஞ்சொல்லார்கள்; என்னைத்தான் தூற்றுவார்கள்; ஆகையாலவ்வித நஷ்டங்கள் வேண்டாம்; உங்களுடைய தகப்பனார் குடும்பமிப்போது சீர்கேடாயிருப்பதால் அந்தக் குடும்பமாவது நல்ல ஸ்திதியில் வரட்டும் என்று எனக்கு வேண்டியதை யெடுத்துக் கொண்டுபோனேன்; எனக்குற்ற துணையில்லாததால் என்னுபாத்

தியாயர் தம்பியுமென்னுடன் பாலியத்தில் வாசித்தவருமான சுந்திரலாலே அழைத்துப்போனேன்; அநந்தியம்மாளுக்கு யாதொரு விஷயமுந் தெரியாது; அந்நியாயமாக அந்த அம்மாளையும் சம்பந்தப்படுத்தி ஜெயிலிலும் வைத்தீர்கள்; அந்த அம்மாள் தம்பியென்னை யிழுத்துக் கொண்டும், உங்கள் வீட்டுச் சொத்துக்களைக் கொள்ளையடித்துக்கொண்டு போய்விட்டதாகவும், பொய்ப்பிராது கொடுக்கச்சொன்னீர்கள்; நான் கொண்டுபோன சொத்துக்களைக் கோர்ட்டு மூலமாக வாங்கிக் கொண்டால் நீங்கள் கோட்டீஸ்வரராகப் போய்விடலாமோ; அந்த நகை பணமில்லாவிட்டால் நான் உங்கள் வீட்டிற்குத் திரும்பி வருவேனென்று நினைத்தீர்களா? எனக்கு உங்கள் சொத்து ஒரு பைசா கூட வேண்டியதில்லை; நானிடுப்பில் கட்டிக்கொண்டிருக்கிற புடவையைக் கேட்டாலுங் கொடுத்துவிடுகிறேன்; இந்த அநந்தியம்மாள் போல் உபாத்தியாயர்தொழில் செய்து ஜீவிக்கத் தெரியு" மென்று மிகுந்த ஆத்திரத்துடன் சொன்னாள். மகதேவி இவ்வார்த்தைகளைக் கேட்டு "ஐயோ நானொருபாவத்தையு மறியேனே; நீ போனதினம் படுத்த நான் இன்றுதான் எழுந்தேன்; என்னுடம்பைப் பார்த்தாயா; நீபோனதினத்தில் குளித்ததுதான்; இதுவரையில் குளிக்கவில்லை; நான் ஒருவேளைகூட சரியாய் சாப்பிடவில்லையே! இன்னும் பத்துநாள் வரையிலுன்னைப்பார்க்கா திருந்தால் என் பிராணன் போய்விடுமென்பதற் கென்ன சந்தேகம்; பெட்டிச்சாவிகளென்னிட மிருப்பதாலும், நீ சிறியவளாயிருப்பதைக் கொண்டு உன் சொத்துக்களை நான் விசாரணை செய்துவந்ததாலும், சொத்துக்களெல்லா மென்னுடைய தென்று நான் நடத்தியதாக நீ நினைக்கிறாய்; அது பிசகு; சாவிகளெல்லாமிதோ யிருக்கிறது; எடுத்துக் கொள்; இனி இவைகளை யென்னிடங் கொடுக்கவேண்டாம்; இனி உன் குடும்பக்காரியங்களை நீயே பார்த்துக்கொள்; எனக்கு அரை வயிற்றுக்குக் கஞ்சிவார்த்தால் போதுமானது; உன்தகப்பனிறந்த விடத்திலேயே நானும் இறக்கிறேன்; நான் இறக்கும் வரையில் நீ நல்ல ஸ்திதியிலிருப்பதை நான் பார்க்கவேண்டும்; நீ கண்ணீர் விட்டழுதது என் தேகத்தை அக்கினியாகக் கொளுத்துகிறது; எழுந்திரு வீட்டுக்குப்போவோம் வா வெனக் கையைப் பிடித்திழுத்தாள்.

சுகதேவி யாருடைய வீட்டுக்கு என்னைக் கூப்பிடுகிறீர்கள்; வீட்டைக்கட்டி வேட்டைநாயைக் காவல் வைத்ததுபோல் வக்கி

லொருவரை உங்கள் குடும்பவிசாரணை செய்யச்சொல்லி விட்டீர்க ளே; அவர் "புதிதாக வந்த மணியக்காரன் நெருப்பைக் கட்டி யிறைத்தான்" என்ற பழமொழிப்படி நமது பத்துவரவு பேர் வழிகள் பேரிலெல்லாம் வழக்கிட்டு அவர்களை நிர்பந்தித்துத் தொகைகளை வருலித்துவிட்டாரே; இனி யவர்களும், இந்த நிர்பந் தங்களைக் கேட்டவர்களும், உங்களிடஞ் சரக்குகள் கொள்ளுவார் களா? இதுவரையிலவரா லுண்டாகிய நஷ்டங்களின்னதென உங்க ளுக்குத் தெரியுமா? இந்தக் கிரிமினல் நடவடிக்கை இவர்தானே நடத்தியிருக்க வேண்டும்; இந்தவீட்டுக்கு மருமகனுகிவிடலா மென்று இவ்வளவு அதிகாரஞ் செய்கிறுரே; உண்மையாகவந்து விட்டால் எவ்விதம் தலைகீழாக நிற்பாரோ தெரியவில்லையே! அவர் அந்த வீட்டிலடியெடுத்துவைக்காத வழி தேடிக் கொண்டால் தான் நானுங்கேவரலாம்;வக்கீல்கள் சரியாய் குடும்பமானேஜ்செய் வார்களென்று யாருங்களுக்கு உபதேசஞ் செய்தார்கள்; நல்ல குடும்பங்களை நாஸ்தியாக்கத்தானே அவர்க ளவதரித்திருக்கிறுர் கள் எனச்சொல்ல, மகதேவி சொத்தெல்லா முன்னுடையதாக விருக்க அவர் யெனுன்னுத் திரவன்னியில் வீட்டிற்குள் நுழை வார்; தலைவாசல் காவல்காரரிடஞ் சொல்லி அவரை யுள்ளே விடா மல் வெளியே நெட்டித்தள்ளும்படி உத்திரவு கொடுத்து விட்டு வீட்டிற்குள் நுழையலாமெனச் சொன்னுள். இதைக் கேட்டு சுகதேவி சந்தோஷித்து சுக்கன்லால் முதலியவர்களுக்கு நமஸ்காரஞ் சொல்லிக்கொண்டு லாண்டாவிலேறி தாயும் பெண் ணும் வீடுவந்து சேர்ந்தார்கள். வரும்போது அவர்கள் பேசிவந்த படி தலைவாசல் காவல்காரனைக் கூப்பிட்டு வக்கீல் லெகராஜ் வந் தால் உள்ளே வரக்கூடாதென்று அம்மா இருவரு முத்திரவு செய் திருக்கிறுர்களென்று சொல்; மீறி வந்தால் பிடரியைப் பிடித்து வெளியே தள்ளி விடென்று ஆஞாபித்ததுமன்றி மகதேவி தன் னுடைய ஏஜண்டுகளைத் தருவித்து "இன்று முதல் இந்தக்குடும்பச் சொத்தி லெனக்கு எவ்வித பாத்தியமுங் கிடையாது; எல்லாம் சின்னம்மாளிடம் ஒப்புவித்துவிட்டேன்; அவள்தான் இனி உங்க ளுக்கு எஜமானி; அவள் சொற்படித்தான் நீங்கள் நடக்கவேண் டும்; வக்கீலை வீட்டிற்குள் நுழைய வேண்டாமென்று உத்திரவு செய்து விட்டேன்; அந்த உத்திரவை நீங்கள்சரியாக நிறைவேற்ற வேண்டும்; அவரிடத்தில் நீங்கள்பேசவுங் கூடாதெனக் கண்டித்

தாள்; அவர்கள் அந்தப்படியே செய்கிறோம்; சின்னம்மாளைப் பார்க்கமுடியாதே! எல்லா விஷயங்களு மெழுதி உத்திரவுவாங்குவ தாயிருந்தாலும் சாத்திய மில்லையே! என்ன செய்வோமெனக் கேட்க, மகதேவி எல்லாம் அவளுக்கு நன்றாய்த் தெரியும்; நீங்கள் புத்தி சொல்லவேண்டிய தில்லை யெனச் சொன்னாள்.

சுகதேவி தன்தாயார்கொடுத்த சாவிகளைப் பத்திரப்படுத்திக் கொண்டு தஸ்தாவேஜிகள் வைக்கப்பட்டிருக்கும் பெட்டிகளைத் திறந்து தேடிப்பார்த்துத் தன்தகப்பனார் செய்துவைத்த உயில் பத்திரத்தை யெடுத்து பின்வருவாறு சுந்திரலாலுக்கு ஒருகடித மெழுதினாள்.

எனதாபத்துக்களுக் குதவும் நண்பரே!

என் தாயார் உங்கள்வீட்டுக்குவந்து மிகுந்தவிசனமடைந்து கூப்பிட்டதினால் நான் இவிடம் வரும்படியாகநேர்ந்தது; இல்லாவிடின் நாம் பேசிக்கொண்டபடி வேறுஜாகையிலேயே யிருக்கலாம்; நீங்கள் வீடு திட்டஞ்செய்திருந்தால் அதை விட்டுவிட வேண்டாம்; அது நமக்கு அவசியம் வேண்டியதுதான்; அதன் விபரம் பின்னாலெழுதுகிறேன்; என் தகப்பனா ரெழுதிவைத்த உயில்பத்திரம் என் கைவசம் வந்துவிட்டது; இனி நீங்கள்யா தொன்றுக்கும் பயப்படவேண்டாம்; இன்றைக்கே ஒரு தகுந்த வக்கீலை வைத்து இந்த உயில்பத்திரந் தாகல்செய்யப்படவேண்டு மென்று படிகட்டிவிடுங்கள்; அந்தச் செலவுகளுக்கு நூறு ரூபாய் நோட்டொன்று இத்துட னனுப்பியிருக்கிறேன்; குறித்தவாய்தா தினத்திலேயே கேசைத் தள்ளிவிடுவார்கள்; சாக்ஷிகள் யாதொரு வருஞ் சொல்லார்கள்; மனோதைரியத்தை விடவேண்டாம்.

தங்கள் நண்பள் சுகதேவி.

இந்தக் கடிதத்தைத் தான் அலகபாத்திலிருந்து அழைத்து வந்த ஜெகதாம்பாளிடங் கொடுத்து சுந்திரலாலிடங் கொடுத்து பதில் வாங்கிவரச்செய்தாள். அவளந்தப்படி கடிதத்தைச் சுந்திரலாலிடங் கொடுக்க அவர் வாசித்து சந்தோஷத்துடன் நோட்டைக் கைக்கொண்டு "காரியத்தை முடித்துத் தெரிவிக்கிறேன்" என்று பதில்சொல்லி யனுப்பினார். இவருடனே தகுந்த வக்கீல் யாரென விசாரித்து சுரேந்திரநாத்சிங் என்பவர் மிகுந்த யோக்கியரென்றுங் கெட்டிக்காரரென்றுந் தெரிந்து அவருக்கு

தினம் 1க்கு 50 ரூபாய் கொடுப்பதாகப் பேசி நோட்டை மாற்றி ஐம்பது ரூபாய் அவர்கையில் கொடுத்து உயில்பத்திரம் தாக்கல் செய்யும்படி மகதேவி யம்மாளுக்குப் படி கட்டச் செய்தார். அந்தப்படி உயில்பத்திரத்தை கோர்ட்டி லாஜர் செய்யும்படி சமமன் வந்தவுடன் சுகதேவி தன்னுடைய ஏஜண்டுகளில் தகுந்த யோக்கியதை யுடைய ஒருவரிட மந்த உயில்பத்திரத்தைக் கொடுத்து கோர்ட்டில் தாக்கல்செய்யும்படி உத்திரவு செய்தாள். அவரந்தப்படி ஆஜர்செய்தவுடன் ஜட்ஜி அதை நன்றாய் வாசித்துப் பார்த்து லாவாதேவியில் சிலகடன்கள் நீங்கலாக மற்றெல்லாச் சொத்துக்களும் சுகதேவிக்குச் சொந்தமென்று சொல்லப்பட் டிருப்பதையும், அந்த உயிலின்படி வயது பதினேழுக்குமேலாய் விட்டதையும், நன்றாயுணர்ந்து கேசைத்தள்ளி சுந்திரலாலை விடுதலை செய்திருப்பதாகச் சொன்னதுமன்றி, எதிரிக்கு இஷ்டமிருந்தால் வாதிபேரில் நடவடிக்கை நடத்த அனுமதிகொடுக்கலாமென்றுந் தீர்ப்புச்சொன்னார்கள். இதன் விபரங்களைத் தெரிந்துகொண்டு சுந்திரலால் தன்வீட்டுக் கோடிவந்து தன்னை விடுதலை செய்த சந்தோஷ சமாச்சாரத்தைத் தெரிவித்ததுமன்றி அடியில் கண்டபடி சுகதேவிக்கு ஒருகடிதமெழுதினார்.

எனதன்பிற் சிறந்த சுகதேவி!

உன்னுடைய அபார புத்தி நுட்பத்தால் நான் விடுதலை பெற்றேன். எங்கள் வீட்டிலுள்ளவர்க ளனைவரும் சந்தோஷமடைந்தார்கள். நீ இதுவரையில் எனக்குச் சொல்லிவந்த புத்திமதிகளின்படி நான் நடந்துவந்ததில் எனக்கு எவ்வித குறைவுமில்லை; ஜெயிலி லிருந்ததில் எனக்கு விசனமு மில்லை; எல்லாமீசுவரச் செயலென்று விசுவேசரை தியானித்துக்கொண்டே காலங் கழித்தேன்; இனி விவகார விசன மற்றுப்போய்விட்டது; நானினி நடந்துகொள்ளவேண்டிய தின்ன தென்பதைச் சீக்கிரந் தெரிவிக்கவேண்டியது; நீ சொன்னபடி வீடொன்று மாதம் 1க்கு ஐம்பது ரூபாய் வாடகைக்குப் பேசிவிட்டேன்; அந்த வீடெதற்காக வேண்டுமென்பதைத் தெரிவிக்கவேண்டும்.

நின தன்பான பதிலை யெதிர் பார்க்கும் சுந்திரலால்.

இந்தக் கடிதத்தைத் தன்தம்பி மோடிலாலிடங் கொடுத்து சுகதேவியம்மாளிடங் கொடுத்து பதில்வாங்கி வரும்படிச்சொல்ல, அவன் நான் அந்தவீட்டுக்குப் போகவேமாட்டேன். போலீசார்

இழுத்துக்கொண்டுபோய் என்னை அடிப்பார்களென்று பயந்து கொண்டு ஓடிப்போய்விட்டதால் அதைத்தன்வீட்டு வேலைக்காரி யிடங்கொடுத்து சுகதேவியிட மிருந்து பதில் வாங்கிவரும்படிச் சொன்னர். அவளத்தப்படிக் கடிதத்தைக்கொண்டுபோய் கொடுக்க சுகதேவி வாசித்துப் பார்த்துச் சந்தோஷ மடைந்து பின்வருங் கடித மெழுதினள்.

என தன்பிற்சிறந்த ஸிநேகிதரே !

தங்கள் தபாலை நான் எதிர்பார்த்திருக்க நான் தங்களுக்கு புத்திமதி சொல்லத் தகுந்தவளா? புருஷர் துணையின்றி ஸ்திரீக ளெந்தக்காரியமுஞ் செய்யமுடியும். தாங்களென்னைவிட்டுப் பிரிந்தது முதல் தங்கள் முகத்தை நான் பார்க்கும்வரையில் என் மனம் பட்டபாட்டை ஈஸ்வரன்தா னறியவேண்டும்; எந்தன் பாவிகள் என்னை மானபங்கஞ் செய்ய யெத்தனித்தார்கள்; ஈசுவேச்ச கிருபையால் தப்பிவந்தேன்; இனியு மென்னென்ன ஆபத்துக்கள் வருமோ அறியேன்; எனக்குற்ற உயிர்த்துணை யாரிருக்கிறார்கள்; தங்கள்பேரி லேற்பட்ட கேஸ் தள்ளுபடி செய்யப்பட்டுப்போய் விட்டதால் என்னுடைய நகை பவுன்முதலியதைக் கோர்ட்டி லிருந்து வாங்கிவிடவேண்டும்; வகாலத்து அனுப்புகிறேன்; நீங்கள் வைத்த வக்கீலைக்கொண்டே அந்த நகை முதலியதைவாங்கி என் னிடமனுப்புங்கள்; உங்களுக்கு அலகபாத்திலசொன்னபடி சுதேச சாமான்கள் வியாபாரஞ்செய்ய நான் வட்டிக்குப் போதுமான தொகை தருகிறேன்; இப்பட்டணத்தினின்றும் பட்டுத் துணி கள் வெளி தேசங்களுக்கு மிகுதியாகப் போவது தங்களுக்குத் தெரிந்திருக்கலாம்; நல்ல பீதாம்பரங்களு மனுப்பப்படுகின்றன; இவ்விந்தியா பிரதானபட்டணங்களுக்கு நீங்கள் சுற்றுப்பயணஞ் செய்யவேண்டும்; அப் பட்டணங்கள் ஒவ்வொன்றுக்கு மொவ் வொரு ஏஜண்டுகள் நியமித்து அவர்களுக்குக் கொடுக்கும் கமி ஷன் சாமான்களைப் பெற்றுங் கொள்ளாமல் திருப்பி விடுவதா லுண்டாகிய நஷ்டத்தை வசூலித்தல் முதலிய விபரங் கண்டு அவர்களிடத்தில் உடன்படிக்கைகள் வாங்கிவிடவேண்டும்; கடன் கொடுப்பதென்ற வார்த்தையே யிருக்கக் கூடாது; நம்மிடமிருக் கும் சரக்குகளின் விபரத்தையும், விலையின் சாரத்தையு மெவரு மெளிதில் தெரிந்துகொள்ளும்படி ஜாஸ்தி சர்க்குலர்கள் பத்திரிகைகளில் யாவரும் பார்த்து வாசிக்கக்கூடிய விதத்தில் பிர

சரிக்கச் செய்யவேண்டியது மன்றி, துண்டுப்பத்திரிகைகள்மிகுதி யாக அச்சிட்டு இவ்விந்தியா வெங்கும் பரவும்படியாகவுஞ் செய்ய வேண்டும்; இச்செலவுகள் எவ்வளவு ஜாஸ்தியானாலும் பாதக மில்லை; அவ்வளவுக்கவ்வளவு லாபமுண்டு; இச் செலவுகளையெல் லாஞ் சேர்த்துப்பார்த்துத்தான் சரக்குகளை விலைமதிக்கவேண்டும்; எங்கள் குடும்பத்துத் தரிகளில் செய்யப்படும் ஜவுளி தினுசுகளை மூன்றுமாதத் தவணைக்குக் கடனாகக் கொடுக்கச் செய்கிறேன். இங்கிலீஷ் கம்பெனி ஏற்பாடாகத்தான் வியாபாரஞ் செய்ய வேண்டும்; வியாபார சம்பந்தமான பூகோள சாஸ்திரம், தேச சரித்திரம், கணக்குகள்வைக்கும் வகைகள், கடிதமெழுத வேண் டிய முறைகள் முதலிய புஸ்தகங்களைத் தருவித்து வாசித்துத் தெரிந்துகொள்ளவேண்டும்; பூமிக்குடையவரை பூமிக்குடையவர் புகழ்வார்; கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தனை கவர்ன்மெண்டு உத் தியோகஸ்தன் மதிப்பான்; அதுபோல் வர்த்தகரை வர்த்தகர்தான் மதிப்பார்கள்; அதிலும் அவர்கள் சம்பாதிக்கும் திறமைகளிலும், வரும்படிகளிலும், சற்றேறக்குறைய சமமாக விருந்தால் தான் ஒருவரை யொருவர் மதித்து சினேகிப்பதற்கு யோக்கியதையாக விருக்கும்; நான் ஏதோவெனக்குத் தெரிந்ததை யொளிக்காமல் எழுதிவிட்டேன்; என்பேரில் வருத்தங் கொள்ளக்கூடாது; என் னுடைய குடும்பவேலைகளை யினித்தான் நான் கவனிக்கப் போகி றேன்; எனக்கு வேண்டிய புத்திமதிகள் சொல்வீர்களென எதிர் பார்க்கிறேன்.

தங்கள் நண்பள் சுகதேவி.

இந்தக் கடிதத்தை வேலைக்காரியிடங் கொடுக்க அவளதை சந்திரலாலிடங் கொடுத்துவிட்டாள். இதை வாசித்துப் பார்த்த உடனிவருக்குண்டான ஆனந்தத்தை யளவிட்டுச் சொல்ல முடி யாது; இவர் வக்கீல் சுரேந்திரநாத் சிங் வீட்டுக்குப் போய் அவர் குமஸ்தாவை சுகதேவியம்மாள் வீட்டுக்கனுப்பி எஜண்டுமூலமாய் வகாலத்தைப் பூர்த்தி செய்து கொண்டு வந்து வக்கீலிடங் கொடுத்து வகாலத்தைத் தாக்கல்செய்து கோர்ட்டிலிருந்த நகை பவுன் முதலியதை வாங்கி சுகதேவியம்மாளிடஞ் சேர்ப்பித்து விட்டார். சந்திரலால் கம்பெனி யென்று தன் பேரால் கடிதம் கவர் முதலியன அச்சிட்டு சுதேச ஜவுளி சீட்டி முதலியன விபா பாரஞ் செய்யும் பெரியவர்த்தகர்களுக்கெல்லாங் கடிதங்களெழுதி ஜவுளி தினசுகளைத் தருவித்த விலையின் விபரங்களைத் தெரிவிக்க

கொண்டதுடன் சுகதேவியம்மாளுக்குக் கடிதமெழுதி தன் சுற்றுப் பிரயாணச் செலவுகளுக்கு ஐன்னூறுரூபாய் வாங்கிக்கொண்டு மிகுந்த குறைவாய் செலவுகள் செய்துகொண்டு இவ்விந்தியாவின் பிரதான பட்டணங்களுக்குச் சென்று காசிப் பட்டணத்திலுள்ள பலதினுசு பட்டு பீதாம்பரங்கள் முதலியனவற்றைக் காட்டி இவைகளை விற்பதற்கு ஆங்காங்கே கமிஷன் ஏஜண்டுகள் நியமித்து வந்தார்.

இவரிவ்விதம் யாத்திரை செய்து கொண்டிருக்கையில் ஆக்ராவில் சஸ்பெண்டு செய்யப்பட்டிருந்த இனிஸ்பெக்டர் வேங்கடநராயணப்பா சுகதேவியைப்பார்த்தது முதல் மிகுந்தகாமாந்தகாரனுகித் தன்னைக் கோர்டில் அவமதித்துப் பேசி தன் பேரில் கேசேற்படுத்தியதை நினையாமலும், அதற்காகக் கோபிக்காமலும், தன்னுடைய ஆஸ்திமுழுவதுங் கொடுத்தாலும் இவளைச்சேர வேண்டுமென்ற விருப்பத்துடன் இராஜேந்திர லாலை யழைத்துக்கொண்டு காசிப்பட்டணம் வந்து சேர்ந்து சுகதேவியின் வீட்டிற்கு எதிர் வீட்டிலுட்கார்ந்து இவளை யெவ்விதம் யார்மூலமாகப் பேசலாமென யோஜித்துக்கொண்டிருந்தார். அலகபாத் ஜெகதாம்பாள் வெளியே வரக்கண்டு இராஜேந்திரலாலோடி அவளையழைத்துப்போய் அவளிடத்தில் ஒருபவுனைக்கொடுத்து சுகதேவியம்மாளிடம் சில வார்த்தை சொல்லவேண்டும்; அதற்காகத்தான் இந்தப் பவுன் கொடுத்தது; நாங்கள் சொல்கிறபடி சொல்லிப்பதில் தெரிவிக்கிறுயா வெனக் கேட்டான். அவளந்தப்படி சொல்வதாகச் சம்மதித்தவுடன் இனிஸ்பெக்டரிடம் அழைத்துப்போய்விட அவர் “நீ உங்கள் எஜமானியிடஞ் சென்று உங்களால் இருபதினுயிர ரூபாயையும் வேலையையு மிழந்தவர் உங்கள் வீட்டிற்கெதிரில் வந்து பழிபோடுகிறேனென்கிறுர் ; அவருக்குள்ள ஐம்பதினுயிர ரூபாய் சொத்தையுங் கொடுத்து விடுவதாகவுஞ்சொல்லுகிறுர்; அவரைக்கலியாணஞ் செய்துகொள்ளத்தான் வேண்டுமென்று கேட்கவில்லையாம்; வேறு தக்கவர்கள் விவாகஞ் செய்து கொள்வதிலும் அவருக்கு வருத்தமில்லையாம்; உங்களைப் பார்த்ததினமுதல் தினேகம் அனலாகக் கொதித்துக்கொண்டிருக்கிறதாம்; அந்தத் தீயை யெந்த விதத்திலாற்றலாமென்பதைத் தெரிவிக்க வேண்டுமெனக் கேட்கச் சொன்னதாகச் சொல்லவேண்டுமென்றுர்.

இவர் சொன்ன வார்த்தைகள் முழுவதும் விடாமல் சுகதேவியிடஞ் சொல்ல, அவள் சற்றேயாலோசித்து" இந்த இனிஸ்பெக்டரின் பயித்தியத்தை யெவ்விதந் தெளியவைக்கலாம்; இவரிவ்வளவு அவமானத்தையும் பாராட்டாமலும், பணத்தைத்திரணமாக மதித்தும், காமவெறி பிடித்து அலைகிறாரே! இதுவே பயித்தியமாயிறந்து போனாலும் போவாரென்று தெரிகிறது; இதற்கென்ன உபாயஞ் செய்யலாமென்று யூகித்து ஜெகதாம்பாளைப் பார்த்து, இன்னு மொருவாரங் கழித்து வரும்படி இனிஸ்பெக்டரிடஞ் சொல்லச்சொன்னாள். இவளந்தப்படிச்சொன்னதும் சந்தோஷத்துடன் அவர்களிருவரும் போய்விட்டார்கள். பின்பு சுகதேவி ஜெகதாம்பாளையழைத்து " நான் சொல்லப்போகிற விஷய மெவருக்குந்தெரியக்கூடாது; இந்தப்பட்டணத்தில் தாசி வீடுகள் நான்கு தெருக்களுக்கப்பாலிருக்கின்றன; நீ இன்று முதல் அந்த வீடுகள் ஒவ்வொன்றுக்கும் போய் எங்கள் சின்ன எஜமான் வந்தார்களாவென்று கேள்; அவர்கள் யாரென்று கேட்டால் மகதேவியம்மாள் தம்பி மகன் தேக்சிங் என்று சொல்; இவ்விதம் ஒவ்வொரு வீட்டிலும் பார்த்து யார் என்னைப்போல் சிறுவயதாகவும், அழகாகவுமிருக்கிறாளோ அவளை நான் அழைத்துவரச் சொன்னதாகவும், பாட்டுகள் கற்றுக்கொடுத்தால் ஜாஸ்தி பவுன் தருவதாகவுஞ் சொல்லி கூடியவரையி லழகுள்ளவளைப்பார்த்து அழைத்துவாவெனச்சொன்னாள்.

ஜெகதாம்பாள் அந்தப்படி தாசித்தெருவுக்குச் சென்று ஒவ்வொரு வீட்டிலும் நுழைந்து பார்த்ததில் சுராஜ்மணியென்ற 16 வயதுள்ளவள் அனேக விதங்களில் சுகதேவியைப் போலிருப்பதைக்கண்டு, எங்களம்மா பாட்டுச்சொல்லிக்கொள்ளவேண்டுமாம்; வேண்டிய பணங்கொடுப்பதாக அழைத்துவரச்சொன்னார்களென இதைக் கேட்ட தாசி உங்களம்மாயார்? அவர்களுக்கு எவ்விடத்தில் வீடு? அவர்களுக்கென்ன சொத்திருக்கிறதெனக்கேட்டாள்? ஜெகதாம்பாள் தன் எஜமானியின் பெயர் சுகதேவி; அவர்கள் தாயார் மகதேவி; அவர்கள் கோடீஸ்வரர்; இப்போது சொற்பநாள்களுக்கு முன் தாயார் பேரில் கோபித்துக்கொண்டுபோயிருந்தார்களே அந்த அம்மாதானென்று சொன்னவுடன், மகதேவியம்மாள் மிகுந்த பணக்காரி யென்று ஏற்கனவே தெரிந்துகொண்டிருப்பதால் ஓர் வண்டி கொண்டுவரச்செய்து இருவருமேறிக்கொண்டு சுகதேவியின் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். இந்தத்தாசியை

அழைத்துவந்த சமாசாரத்தை சுகதேவிக்கு அறிவித்தவுடன் அவள் அத்தத்தாசியை மூன்றுவது மாடிக்கு அழைத்துவரச் செய்து, வேலைக்காரிகளனைவரையும் வெளியில்போகும்படி உத்திரவு கொடுத்து, அந்தத்தாசியைப்பார்த்து,“உன்னை நான் ஓர்முக்கியமான காரியமாக அழைத்துவரச் செய்தேன்; உன் குலாசாரத் தொழிலை நடத்துவதற்கே யன்றிவேறல்ல; ஓர் தருந்தபணக்காரர் வந்திருக்கிறார்; அவர் நீ கேட்ட பணங்கொடுப்பாரென்பதற்குச் சந்தேகமே கிடையாது; மிகக் காமி; உனக்காக ஓர் வீடு திட்டஞ் செய்திருக்கிறேன்; அந்த வீட்டில் போயிருக்க வேண்டும்; என் பெயரையே நீ சொல்லி என்னைப்போலவேபேசவேண்டும்; ஆக்ரா பட்டணத்தில் ஓர்மாடிவீட்டில் குடியிருந்ததாகவுஞ் சொல்ல வேண்டும்; இப்போது இருநூறுரூபாய் கொடுக்கிறேன் வாங்கிக்கொள்; அவர் மனதின்படி நடந்துகொள்; அவர் தன்னூருக்குக்கூப்பிட்டாலும் தடைசொல்லாமல் போ; ஏராளமான பணங்கொடுப்பார்; உன்னை என் வேலைக்காரி அந்த வீட்டுக்கு அழைத்துப்போவாள் என்று சொல்லி இருநூறு ரூபாயு மெண்ணிக்கொடுத்தாள். தாசி இத்தொகையை மிகுந்த சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டு தன் வீடுவந்து சேர்ந்தாள். இனிஸ்பெக்டரும் இராசேந்திரனும் சொன்ன கெடுப்படி யெதிர்த்த வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்திருந்ததைப் பார்த்த ஜெகதாம்பாள் தன் எஜமானியிடம் வந்து தெரிவிக்க அவள் அஸ்தமிக்க ஒரு நாழிகைப்பொழுதுக்கு அவர்களை வரும்படி சொல்லியனுப்பினாள். இதுவிபரம் வேலைக்காரி தெரிவித்தவுடன் அந்தப்படி வருவதாகச் சொல்லிப்போய் விட்டார்கள்.

அதன் பிறகு சுகதேவி தன் வேலைக்காரி ஜெகதாம்பாளைத் திரலால் வீட்டுக்கு அனுப்பி அவர்தனக்காக வாடகைக்குப் பேசியிருந்த வீட்டின் சாவியை வாங்கிக்கொண்டு அந்த வீட்டினுடையாளத்தையும்பார்த்துவரச்சொன்னாள். இவளந்தப்படி அவர்களிடஞ்சென்று அவ்வீட்டின் சாவியை வாங்கிக்கொண்டதுமன்றி அந்த வீட்டினுடையாளமுந்தெரிந்து வந்தாள். உடனே சுகதேவி நூறு ரூபாய் நோட்டொன்று ஜெகதாம்பாளிடங்கொடுத்து தாசி வீட்டுக்குச்சென்று அவளிடஞ்சொல்லி, அவள் மனுஷாளைக்கொண்டு படுக்கை சாமான்களெல்லாம் வாங்கி அந்த வீட்டில் போட்டுவிட்டு விபரந்தெரிவிக்கும்படி உத்திரவு கொடுத்தாள். இவ்வேலைக்காரி தன் எஜமானியினுத்திரவுப்படி தாசியின் வேலைக்காரர்களைக்

கொஸ்கெட்டில்மெத்தை தலையணை முதலியன வெல்லாம் வாங்கி அந்த வீட்டில் போட்டுவிட்டு வந்து தெரிவிக்க, உடனே அவளுக்குப் பத்து ரூபா யிருக்கொடுத்து "நீ இதுவரையில் செய்தது பெரிதல்ல; இனித்தான் சரியாயிருக்க வேண்டும்; நீ இப்பொழுதே போய் அந்தத் தாசியை நன்றா யலங்கரித்துக் கொண்டு அழைத்துவா; வண்டிவைத்து பெரியமனுஷாள் வீட்டுப் பெண்கள்போல் நிறைய முக்காடிட்டு அழைத்து வரவேண்டும்; அவ ளின்னா ரென்று இந்த வீட்டி லுள்ளவர்களுக்கு நீசொல்லக்கூடாது; அவள் போகிற விடமுஞ் சொல்லக் கூடாதென்று சொல்ல, ஜெகதாம்பாள் தாசி வீட்டுக்குச் சென்று அவளை அலங்கரித்து முக்காடிட்டு வண்டியி லழைத்து வந்து சுகதேவி யிடங் கொண்டுவந்து விட்டாள். இத்தாசி யலங்கரித் திருப்பது சந்தேகத்துக் கிடமாகுமென நினைத்துத் தன்னுடைய உயர்ந்த பட்டுப் புடவையைக் கொடுத்து தன்னைப்போ லுடுத்திக் கொள்ளும்படி சொன்னாள். அஸ்தமன சமயமாய் விட்டதால் இன்ஸ்பெக்டர் எதிர்வீட்டில் வந்துவிட்டாரோவென்று எட்டிப் பார்த்ததை அவரும் இராஜேந்திரனும் பார்த்து தன்னைத்தான் பார்க்கிறாளென்று மிகுந்த சந்தோஷத்துடன் எழுந்து நின்றார்கள்.

சுகதேவி இவர்களைப்பார்த்து தெற்கே கையைக் காட்டிவிட்டு தலையை உள்ளே இழுத்துக்கொண்டாள். உடனே தன் வேலைக் காரியைக்கொண்டு லாண்டா போடச்சொல்லி தாசியையும் ஜெகதாம்பாளையும் அவ்வண்டியி லேற்றி வாடகைக்குப் பிடித்த வீட்டில் கொண்டுபோய்விட்டு வரச்செய்தது மன்றி இவர்கள் வண்டி யேறுமுன் ஜெகதாம்பாளை இன்ஸ்பெக்டரிடமனுப்பி தான் லாண்டாவில் போகும்வீட்டை அடையாளம் பார்த்துக்கொண்டு இரவில் பனிரெண்டுமணிக்கு வரும்படி சொல்லச் சொன்னாள். இது விபரத்தை இவள் இன்ஸ்பெக்டரிடந் தெரிவித்தபின்பு, தாசியுந் தானும் லாண்டாவி லேறிக்கொண்டு அந்தவீடு வந்துசேர்ந்து கதவைத்திறந்து வீட்டுக்குள் போய் விட்டார்கள். வண்டிக்காரன் சுகதேவி வீட்டிற்குத் திரும்பி வந்துவிட்டான். இந்த லாண்டா போகுமிடம் பார்க்கவேண்டுமென்ற அவாவின்பேரில் இன்ஸ்பெக்டரும் இராஜேந்திரனும் தலைதெறிக்க அவ்வண்டியின்னே லோடியுங் கண்டுபிடிக்க முடியாமல், அவசரமாக ஒருஜட்காவண்டி பிடித்துக்கொண்டு அதிவேக

மாகக் குதிரையைத் துரத்தச் செய்து வண்டாய்ப்போய், நின்ற வீட்டை நன்று யடையாளந் தெரிந்துகொண்டார்கள்.

தாசி அவ்வீட்டின்கதவை உடனே சாற்றிக்கொண்டதால் இவர்கள் யாதொருவரையும் பார்க்க சரிப்படவில்லை. இனிஸ்பெக்டர் தான் நீண்ட காலமாகக்கொண்டிருந்த ஆசை நிறைவேறு மென்ற பெருத்த நம்பிக்கையுடன் சுசிருசியுள்ள போஜனமருந்தி, சந்தனபுஷ்பங்களணிந்து, தாம்பூலந் தரித்து, அத்தர் பன்னீர் முதலிய வாசனைத் திரவியங்களெல்லாம் பூசி, இரவு 10 மணிக்கு அவ்வீட்டிக்கு வந்தார்; இதற்குள் தாசி தன்வீட்டிக்குச் சென்று போசனஞ்செய்து தாசிகள்செய்யும் வழக்கப்படி ஓர் பாத்திரத்தில் காய்ச்சிய பாலுங் கற்கண்டுமெடுத்துக்கொண்டு வந்து இரண்டு ஷேட்டுகளைக் கொளுத்திவைத்துவிட்டு மெத்தையில் படுத்துவிட்டாள். இவர் எப்போ வருவாரென்று எதிர்பார்த்திருந்தபடியால் இவருடைய கால் பூட்ஸ் சத்தங்கேட்டவுடன் கதவைத் திறந்துவிட்டாள். இவர் சுகதேவிபேரில் மிகுந்த காத லுடையவராக விருந்தாலும், இத்தாசி வயது உருவமுதலியனவற்றில் அனேகமாக அவளைப்போலவே யிருந்தபடியாலும், இவருக்கிருந்த காம மயக்கத்தாலும், சுகதேவி யிவளல்லவென்று சந்தேகிப்பதற்கு இடமேயில்லை. இத்தாசி தன் குலாசாரப்படி கிட்டேநெருங்கிவந்து அவர் கையைப்பிடித்துக்கொண்டு "நான்கேட்ட பணம் கொண்டு வந்தீர்களா இல்லையா" வெனச் சிரித்துக்கொண்டு சொல்ல, அவர் பணமாகக் கொண்டு வரவில்லை நோட்டாகக் கொண்டு வந்தேனென்று பத்து நூறுரூபாய் நோட்டுகளை யெடுத்து அவள் கையில் கொடுத்தார்; அதையவ ளுடனே பத்திரமாக வைத்துக் கொண்டு தன் தாசித் தொழிலை நடத்தி அவரை மகிழச் செய்தாள்; இவள்தான் தாசியென்று அவர் தெரிந்துகொள்ளா திருக்கச் செய்யவேண்டியதின் நிமித்தம் இரவு இரண்டுமணிக்கு எழுப்பி நான் ஒருவருக்குந் தெரியாமல் வீட்டுக்குப்போய் விடவேண்டும்; லாண்டா வந்துவிடும்; வேலைக்காரிகள் வருவார்கள்; இது என் பாட்டியார்வீடு; அவளூரி லிருப்பதுபோலும், அவளைப்பார்த்து வரவேண்டுமென்றும், சாக்குப் போக்குகள்சொல்லி நானிவ்விடம் வந்தேன்; இனி நீங்க ளிவ்விடமிருப்பது பிசகு; போய் வாருங்கள்; இனி நீங்க ளிவ்விடம் வரவேண்டியதில்லை; நானே உங்களூருக்கு வருகிறேன்; நான் காலந்தெரிந்து வேலைக்காரியை அனுப்பு

கிறேன்; இன்றையதினம்போல் சரியாய்க் கொடுக்க வேண்டுமென்றாள். அதற்கு இனிஸ்பெக்டர் இப்படிச் சொல்லலாமா! கூடிப்பிரிவாருண்டா! இத்தனைநாள் கழித்துத்தான் இப்போது வந்தாயே! இனியெப்போ பார்க்கப்போகிறேன் என்று கெஞ்சிக் கேட்கத் தாசி "நான் பிரதிமாதமும் கடைசி வெள்ளிக்கிழமைகளில் ஆக்ராவில் நானிருந்த வீட்டுக்கு வருவேன்; நீங்கள் இந்தப் பட்டணத்துக்கே வரக்கூடாது; அந்த வீட்டை வாடகைக்குப் பிடித்துப் படுக்கை சாமான்கள் தயார் செய்துவைக்க வேண்டுமென்று சொன்னாள். இனிஸ்பெக்டர் அந்தப்படிச் செய்வதாக வாக்குறுதி சொல்லிவிட்டுப்போன பின்பு "பணங்கண்ட தேவடியாள் பாயில் படுக்கமாட்டா" ளென்ற பழமொழிப்படி வேலைக்காரி ஜெகதாம்பாளை யழைத்துக்கொண்டு இவள் ஆக்ராவுக்கு மாதந்தவறாமல் போய் தடவை யொன்றுக்கு ஆயிர ரூபாய் வீதம் வாங்கி வந்தாள்.

மகதேவியம்மாள் குடும்பக்காரியங்களை மேல்விசாரணைசெய்து வந்த வக்கீல் லெகருஞ் வழக்கப்படி அவ்வீட்டிற்குவர வாசற் காப்போன் அவரைப் போகக் கூடாதெனத் தடுத்துவிட்டதின்பேரில் மிகுந்த அவமானமடைந்து ஹரிநாத்தின் வீட்டிற்குச் சென்று தன்னை அவ்வீட்டிற்குள் போகக்கூடாதென்று சொன்னதற்குக் காரணந்தெரியுமாவென்று கேட்டார். அதற்கவர் குடும்பவிசாரணை முழுவதும் சுகதேவியம்மாளிடம் ஒப்பிவித்தாய்விட்டது; அவளுக்கு உங்கள்பேரில் மிகுந்தவருத்தமிருக்கிறது; அதனாலந்த உத்திரவு செய்திருக்கிறாள்; நீங்கள் மரியாதையாக விலகிவிடுவதுதான் மேன்மை யெனச் சொல்ல, வக்கீல் துக்க சாகரத்திலாழ்ந்து என் வேலையுமிழந்து, பொருளையுஞ் செலவிட்டு, பெண்பிள்ளையால் அவமானமும் வந்ததே! இதை யாரிடத்தில் சொல்லப்போகிறேன்; உங்களிடங் கொடுத்த தொகையாவது கொடுத்தாலதைவிட்டுப்போய் விடுகிறேனென்றார். ஹரிநாத்தன்னிடத்தில் முழுத்தொகையுஞ்சேரவில்லை யென்றும், அதில் சிறிது கலியாணவேற்பாட்டிலும், சிறிது போலீசார் கேசிலுஞ் செலவழிக்கப்பட்டுப் போய் விட்டதென்றும், தன் கையில் பணமில்லையென்றுஞ் சொன்னதை வக்கீல் கேட்டு பதில் சொல்ல வகையின்றித் தன்வீடு வந்து சேர்ந்து, ஓர்வித யோஜனை செய்து, மகதேவியம்மாளுக்கும் ஹரிநாத்துக்கும் தனித்தனியே நோட்டீஸ்கள்

கொடுத்தார். அவைகளில் தனக்குச் சுகதேவியைக் கொடுப்பதாக வும், தான் குடும்பக்காரியங்களை இந்தப் பட்டணத்திலிருந்து பார்த்து வரவேண்டுமென்றும் செய்து கொண்ட உடன்படிக்கையின் படி தன்னுடைய டிஸ்டிரிக்ட் முனிசிப் வேலையை இராஜினமா கொடுத்துவிட்டு வந்து விட்டதாகவும், அதனால் தனக்கு ஐம்பதினாயிரரூபாய்க்கு மேல் நஷ்டம் நேரிட்டிருப்பதாகவும், அதை நோட்டீஸ்பார்த்த ஒருவாரத்துக்குள் கொடாவிட்டால் இருவர் பேரிலும் வழக்கிட்டு சகல செலவுகளுடன் வசூலிக்கப்படுமென் றுங் கண்டிருந்தது. இந்த நோட்டீஸ் கிடைத்தவுடனிதைச் சுக தேவியிடமனுப்ப அவள் அடியில்கண்ட பதில் நோட்டீஸ் கொடுக்கும்படி செய்தாள்.

தங்களுடைய நோட்டீஸ் பார்த்தவுடன் அது தங்களாலெழுதபட்டிருக்கமாட்டாதென்று சந்தேகங்கொண்டேன். நான்சுகதேவிக்கு கார்டியனல்ல வென்பதும், கிரமப்படி வார்சுசர்டிபிகேட் பெறவில்லையென்பதும், அதனாலவளுக்காக நான்யாதொருநடவடிக்கையும் நடத்த பாத்தியமில்லையென்பதும், வக்கிலாயுள்ள தங்களுக்குத் தெரியாத விஷயமல்ல; நான் வெளியே போகும் வழக்கமில்லை யென்பதை யாவரும் நன்றுயறிவார்கள்; உங்களுக்குத் தெரிந்த சட்டப்படி நடவடிக்கைகள் நடத்துவதைபார்த்து மகிழத் தயாராயிருக்கிறேன்.

இந்தப் பதில் நோட்டீஸ்கிடைக்கப் பெற்ற வக்கீல் இதை நன்றுய்க் கவனித்து இது வக்கீல்களால் தயாரித்துக்கொடுக்கப் பட்டதல்ல வென்றும், சுகதேவியின் சொந்த அபிப்பிராயப்படி கொடுக்கப்பட்டதென்றும், விசாரித்துத்தெரிந்துகொண்டதின்பேரில் இவளது மேன்மையான புத்தி தீக்ஷண்ணியத்துக்கு மகிழ்ந்து "இவளது கையைப்பற்ற பாக்கியமில்லாத பாவியானேனே! ஐயோ என்தலையெழுத்து யாரைக்கொண்டுவந்து விடப்போகிறதோ வறியேனே" யென்று மிகுந்த வருத்தப்பட்டார்.

இவள் மாமன் ஹரிநாத்துக்கு இந்த வக்கீலுடைய நோட்டீஸ் கிடைத்தவுடன் வாசித்துப்பார்த்து மனம் வெதும்பித் தன் தமக்கை மகதேவியிடம் வந்து "ஐயோ உன் பெண்ணால் என்னுடைய குடும்ப சொத்துக்கள் நாசமடையக்காலம் வந்து விட்டதே! தெரியாத்தன்மையாக இந்த வக்கீலை யிவ்விட்டில் கொண்டுவந்து சேர்த்தேனே! இனிநான் என்ன செய்வேன்; முனிசிப்வேலையை

விட்டுவிட்டு வந்ததால் ஐம்பதினாயிரரூபாய் தனக்கு நஷ்டம்வந்து விட்டதாகச் சொல்கிறாரே" எனக் கதறிப் பதறியழ, மகதேவி அவனது துயரத்தையாற்றி நீயொன்றுக்கும் பயப்படவேண்டாம்; சுகதேவியிடம் போய்ச் சொல்லு; அவள் எல்லா விவகாரத்தையும் பார்த்துக்கொள்வாளெனச் சொன்னாள். இவர் அந்தப்படி தனக்குற்ற வருத்தங்களைப்பற்றி சுகதேவியிடஞ் சொல்ல, அவள் புன்சிரிப்பு கொண்டு "மாமா நீங்களேன் விசனப்படுகிறீர்கள்; வெளிப்பட்டு ஒருவரை யழைத்துக்கொண்டு போன என்முகத்தை யினி யெவரும் திரும்பிப்பாரார்கள்; நானினியிந்தக் கோலத்துடன் தான் என்னாயுளைக்கழிக்கவேண்டியதாகவிருக்கும்; இந்தச்சொத்துக்களை யாருக்குநான் கொடுக்கப்போகிறேன்; உங்கள் பெண் சரஸ்வதியை அந்த வக்கீலுக்குக் கொடுப்பதாகவும், வரதக்ஷிணை இருபத்தியையாயிர ரூபாய் கொடுப்பதாகவும் பேசுங்கள் அவர் கட்டாயம் சம்மதித்துவிடுவார்; உங்கள் பெண்ணிருவரையும் இன்று தினமுதல் என்னுடனிருக்கும்படியாகஉத்திரவு செய்யுங்கள்; அவர்களுக்கு நன்றாய் இங்கிலீஷ்படிக்கவுமெழுதவுங்கற்பிக்கச் செய்து விடுகிறேன்; இது விபரத்தை அந்த வக்கீலுக்கு இன்றயதினமே சொல்லுங்கள்" எனச் சொல்ல; ஹரிநாத் மன மகிழ்ந்து வக்கீலிடம் வந்து "நான் தங்கள் நோட்டீசை சுகதேவியிடங்காட்டினேன்; அவள்தான் இனி விவாகமில்லாமலே யிருந்துவிடப்போவதாகவும், அவள் சொத்துக்களை எங்கள் குடும்பத்துக்கே சேர்த்துவிடப்போவதாகவும், என்பெண்களுக்கு நன்றாய் இங்கிலீஷ் கற்பித்துத் தகுந்த கனவான்களுக்கு வரதக்ஷிணைமட்டில் இருபத்தியையாயிர ரூபாய்க்குக் குறையாமல் கொடுத்து விவாகஞ்செய்து வைக்கப்போவதாகவுஞ்" சொல்லிவிட்டாள்; நான் தங்களைச் சிநேகித்தது முதல் தங்களை யெங்கள் குடும்பஸ்தர்களி லொருவராகச் செய்துவிடவேண்டுமென்பது எனது நோக்கம்; தங்களபிப்பிராயந்தெரிவிக்கவேண்டுமெனக் கேட்டார். வக்கீல் இவர் சொன்ன விஷயங்களுண்மை யென்றும், மிகுந்த சொத்துடன் பெண் கிடைப்பதே மேலானதென்றும், தன் கையைவிட்டுப்போன தொகையில் பாதிகிடைத்தாலும் போதுமானதென்றும் நினைத்து "நான் உங்கள் வார்த்தையை நம்பித்தானிவ்விடம் வந்தேன்; நீங்களெது சொன்ன போதிலுந் தட்டாமல் நடக்கக் கூடியவனாக விருக்கிறேன்; நோட்டீஸ் கொடுத்ததைப்பற்றி

என்னை மன்னிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று மிகுந்த வணக்கமாய்ச்சொல்ல ஹரிநாத் அதிக சந்தோஷமாகி, வக்கீலுக்கு மிகுந்த உபசாரமான வார்த்தைகள் சொல்லிவிட்டு சுகதேவியிடம் வந்து, வக்கில் சம்மதித்துவிட்ட விஷயங்களைச் சொல்லி மற்றொரு பெண் பத்மாபாய்க்குத்தகுந்த புருஷர்வேண்டுமே? அவளுக்குஞ் சேர்த்தே முகூர்த்தம் நடத்திவிடவேண்டாமா வெனச் சொன்னார்.

இதைக்கேட்ட சுகதேவி "மாமா நீங்களழைத்துவந்த டிப்டிகலெக்டருக்கு இன்னும் விவாகமாகவில்லை; சரஸ்வதிக்குத் திட்டமாகிவிட்டதையும், வக்கீலுக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட வரதக்ஷிணையுந் தெரிவித்து, அதேவிதங் கொடுக்கத் தயாராயிருப்பதாகவும், பத்மாபாய் நன்றாய் இங்கிலீஷ் வாசித்தவள் அழகிற் சிறந்தவளென்றும், தகுந்த மனுஷாள் மூலமாகப்பேசி அவர்கள் சம்மதியைத்தெரிந்து வாருங்களென்று சொன்னாள். ஹரிநாத் அந்தப்படி தன் பந்துக்களில் சிலரையனுப்பி டிப்டிகலெக்டர் டோனோஜியின் சம்மதியைத் தெரிந்துவாச்செய்தார். இவரிவ்விதந் தகுந்த மனிதரை டிப்டிகலெக்டரிட மனுப்பிய விபரந்தெரிந்துகொண்ட சுகதேவி அடியிற்கண்டவிதம் அந்த டிப்டிகலெக்டருக்கு ஒரு கடிதம் இங்கிலீஷிலெழுதினாள்.

ம-ா-ா-ஸ்ரீ- டோனோஜி அவர்களுக்கு சுகதேவி மிகுந்த வணக்கமா யெழுதிக்கொண்டது.

நான் தங்களிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு காசிநகர் வந்ததும்எனது நண்பர் சந்திரலாலவர்களை விடுதலைசெய்து கொண்டு வீடுவந்து சேர்ந்தேன்; அவர் பேரி லேற்பட்ட குற்றந் தள்ளுபடியாகி என்னுடைய நகை முதலியன யாவும் நான் வாங்கிக் கொண்டேன். இனிஸ்பெக்டர் என்னை மானபங்கஞ் செய்யாமல் காப்பாற்றிய தங்களுக்கு நானென்ன உபகாரஞ் செய்யப் போகிறேன்; தாங்களெனக்குச் செய்த நன்றியை என்னாயுள் பரியந்தம் மறவேன்; எங்கள் வீட்டுக்குத் தாங்கள் கோரிவந்தவிஷயம் ஈஸ்வரசங்கல்பத்தால் வேறு விதமாய் முடிந்து விட்டபடியாலதைப்பற்றி வருத்தப்படுவதில் பிரயோஜனமில்லை; என்மாமன் பெண் பத்மாபாய் அழகிற்சிறந்தவள்; நன்றாய் வாசித்தவள்; அவள் இங்கிலீஷில் நன்றா யெழுதப்படிக்கத் தெரிந்து கொள்வதற்குத் தகுந்த பெண்பிள்ளை உபாத்தியாயர் திட்டஞ் செய்திருக்கிறேன்;

இது விஷயமாய்ப் பேச தங்களிடம் எங்கள் பந்துக்களை யனுப்பி யிருக்கிறேன்; தாங்கள் தயவுசெய்து முடித்துக்கொண்டால் தங்கள் அபிப்பிராயப்படி நடந்துகொள்ள சித்தமா யிருக்கிறேன்; என்னை யவமானப்படுத்த கெட்ட வெண்ணங்கொண்ட இனிஸ்பெக்டருக்கு வேலை தள்ளுபடியாய்விட்டதைப்பற்றிச் சந்தோஷிக்கிறேன்; அவரெண்ணத்துக்குத்தகுந்தபடி அவரை யவமானப்படுத்தியாய் விட்டது; அது விபரமவரின்னமுந்தெரிந்து கொள்ளாமல் தனது திரவியங்களை வீணாய்ச் செலவழிப்பதாகத் தெரிகிறது; அவர் கொடுத்த நோட்டுகளை அவருக்குத் தங்கள் முன்னிலையில் கொடுத்து அவர் இந்தத் தொகையை வைத்துக்கொண்டாவது நல்ல வழியில் இனி பணத்தைச் சம்பாதிக்கும்படியாகப் புத்திபுகட்டலாமென நினைக்கிறேன்; எனதெண்ணத்தைப் பூர்த்திசெய்ய விரும்பும்.

தங்கள் சகோதரி சுகதேவி.

இந்தக் கடிதத்தைத் தபாலில் போடும்படிச் செய்தாள். இதை டிப்டிக்கலெக்டர் பார்த்த மறுதினம் ஹரிநாத் அனுப்பிய பந்துக்கள் போய் பத்மாபாய் விஷயமாகப் பேச அவர் தனக்கு சுகதேவி யம்மாளிடமிருந்து இதுவிஷயமாகக் கடிதம் வந்திருப்பதாகவும், அவள் சொற்படி நடக்கத் தான் தயாராயிருப்பதை யவளுக்குத் தெரிக்க வேண்டுமெனச் சொன்னதுமன்றி அது விபரங்கண்டு சுகதேவிக்கு பதில்கடிதமும் போட்டு விட்டார்; இவர் சம்மதித்துவிட்ட விஷயத்தை ஹரிநாத் கேள்விப்பட்டு மிகுந்த சந்தோஷமடைந்து சுகதேவியிடம்வந்து சொல்ல "உங்கள் பெண்களுக்குமட்டில் மிகுந்த சிரத்தையாய்த் தகுந்த கனவான்களுக்குப் பேசிமுடித்து விட்டீர்கள்; அவர்களைப்போல் நானுமொரு பெண்ணல்லவா? நான்தானுபாவஞ்செய்தவள்; உங்கள் பிள்ளைக்கு யின்னு மேற்பாடு செய்யவில்லையே? வெளிப்பட்டுப்போன யென்னைத் திரும்பிப்பார்பாரா" வெனப் பரிகாசமாகச்சொல்ல, அதையவர் தெரிந்துகொள்ளாமல் எவரும் விரும்பாத வங்கஹீனமாயிருந்தாலும், விவாகஞ்செய்துவைக்க வேண்டியது என்னுடைய கடமையல்லவா? உனக்கு முதலில் கலியாணஞ் செய்துவைத்த பின்புதான் என் பிள்ளை பெண்களுக்கு விவாகஞ் செய்வேன்; உன்னுடைய குடும்பஅந்தஸ்துக்கு நல்ல குலத்திற் பிறந்தவராயும், மாதம் 1 க்கு ஐந்நூறு ரூபாய்க்குக் குறையாத வரும்படி சம்பாதிக்கக்கூடிய வாயு மிருந்தால் மெத்த நன்மைக்

என் பிள்ளையின் யோக்கியதை யுனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கிறது; எனக்குக் கேட்க வாய்வரவில்லையே யென்ன செய்வேனெனச் சொன்னார். அதற்குச் சுகதேவி "நீங்களிப்போது சொன்ன வாக்கிய முறுதியானது தானே" யெனச்சொல்ல ஹரிநாத் அதற்கென்ன தடையென்று சொல்லிப் போய்விட்டார்.

சுந்திரலால் தேசசஞ்சாரஞ்செய்து இரண்டு மாதங்களின் பின் திரும்பிவந்து சுகதேவியிடம் ஐம்பதினாயிரரூபாய் தணிந்த வட்டிக்குக் கடன்வாங்கி, பலதினசு ஜவளி பட்டு பீதாம்பரங்கள் வாங்கியும், ஐம்பதினாயிர ரூபாய் பொருும்படியான சுதேச ஜவளி தினுசுகளைக்கடனாகவாங்கியும், பெருத்த வியாபாரஞ் செய்து வந்ததில் மாதம் 1 க்கு ரூ 500 க்குக் குறையாமல் லாபங் கிடைத்து வந்தது; இது விபரம் சுகதேவிக்குத் தெரிந்தவுடன் தன் மாமன் ஹரிநாத்தைத் தருவித்து "எனது பாலியசினேகிதரும், கல்வி அறிவொழுக்கங்களிற் சிறந்தவரும், என்னுடைய சுகதுக்கங்கள் அவருடையதாகப் பாவித்து நடத்திக்கொண்டு வருபவருமானவர் மிகுந்த தேசபக்தியுடையவராய் மேன்மையான சுதேச ஜவளி வியாபாரங்கள் செய்து மாதம் 1 க்கு ரூபாய் 500 க்குக் குறையாத வரும்படி சம்பாதித்து வருகிறார்; எனக்குற்றதுணையவரையன்றி யிவ்வுலகில் வேறொருவருமில்லை யாதலால் அவரிடம் போய்ப்பேசி சம்மதிக்கச் செய்து, முகூர்த்தம் ஏற்படுத்திவிடுங்கள்; உங்கள்பெண் இருவருக்கும் பதினாயிரத்துக்குக் குறையாத தொகைக்கு நகை தருகிறேன்; சொன்ன வரதக்ஷிணையை மாப்பிள்ளைகளுக்குக் கொடுத்து அழைத்துவாருங்கள்; கலியாணச் செலவுகளுக்கு ஐம்பதினாயிர ரூபாய் திட்டமேற்படுத்துங்கள்; உங்கள் மகனுக்கு ஐம்பதினாயிரரூபாய் கொடுக்கிறேன்; கலியாணச் செலவுகளுக்குப் போதுமான தொகையும், நகைக்கும் பதினாயிரரூபாயுந் தருகிறேன்; இப்போது சொன்ன செலவுகளுக்கு வேண்டிய தொகை தங்கள் மூலியமாகச் செலவழிக்கச் செய்கிறேன் என்று சொல்லி ஷராப்பைத் தருவித்துத் திட்டஜாப்தா கொடுத்து அதன்படி உத்திரவுசெய்தாள். சுகதேவி சொன்ன வார்த்தைகள் ஹரிநாத்துக்கு தேவாமிர்தம் போன்றதாக விருந்ததால் சுந்திரலாலிடஞ் சென்று சுகதேவி சொன்ன விஷயங்களைச் சொல்ல அவரானந்த சாகரத்தில் மூழ்கினவராய் ஹரிநாத்துக்கு மிகுந்த மரியாதை செய்து சுகதேவியின் சொற்படிக் கேட்கத் தயாராயிருக்கிறேனென்று சொன்னார்.

ஹரிநாத் தன்னுடைய மருமகன் டிப்டிகலெக்டர் வக்கீல் இருவருக்கும் பேசிய வாதகூலிகளைக் கொடுத்து அவர்களையழைத்து வந்தும், தன்பெண்களுக்கு உயர்ந்த நகைகள் பூட்டியும், தன்பிள்ளைக்குத் தருந்த பெண்பேசி அவளுக்கு ஐயாயிரரூபாய்க்கு நகைபோட்டும், சுந்திரலாலை மிகுந்த மரியாதையுடனழைத்துவந்தும், இந்நால்வருக்கும் ஏககாலத்தில் விவாகோற்சவத்தை மிகுந்த சிறப்பாய் நடப்பிவித்து அந்தப் பட்டணத்திலுள்ள சகல ஜனங்களும் சுகதேவியின் தேசபக்தியையும், பதிவிரதாத் தன்மையையும், மிகுந்த புத்தி கூர்மையையும், உதாரகுணத்தையும் பற்றிக் கொண்டாடச் செய்தார். ஆக்ராடிப்டிகலெக்டருக்கு சுகதேவி வீட்டில் விவாகம் நடக்கப்போவதாகவும், அந்தக்கலியாணத்துடன் சுகதேவியை சுந்திரலாலுக்கு விவாகஞ் செய்து கொடுப்பதாகவும், கலியாணப்பத்திரிகைகள் ஆக்ராவுக்கு வந்தவிபரம் இனிஸ்பெக்டர் வேங்கடநாராயணப்பா கேழ்விப்பட்டு, ஆச்சரியமடைந்து, இதனுண்மையைத் தெரிந்துவருவோமென நினைத்து சுகதேவி கலியாணதினத்தில் காசிநகர்வந்து இவள் வீட்டிற்கு வரும்போது தாசி சுராஜ்மணி பாட்டுக்கச்சேரி நடத்திவிட்டு வெளியேவர அவள் இவரைப்பார்த்துக் கும்பிட்டு கலகலவெனச் சிரித்ததும், இனிஸ்பெக்டர் மூன்றும் பேஸ்து வைத்தவர்போல் முகத்தை முழுந் தொங்கப்போட்டுக் கொண்டு தன் வீடுவந்து சேர்ந்தார்.

கலியாணம் மிகுந்த சிறப்பாய் நடந்தேரியபின் தம்பதிகள் அன்னியோன்னியமாக ஒருவரை யொருவர் நேசித்துக் கூடி வாழ்ந்திருந்தார்கள்.

இவ்விவாகம் நடந்த இரண்டுமாதம் கழித்து சுகதேவி தன்புருஷன் சுந்திரலாலுந் தானுந் தனித்து மிகுந்த உற்சாகமாகப் பேசிக்கொண் டிருக்கையில் அவரைப்பார்த்து இவ்வீட்டுக்கு மருமகனுகவந்து என்னுடையசொத்துக்களையடைய வாசைகொண்டவர்கள் ஒவ்வொருவருக்கு மொவ்வொரு விதமாகத் திருப்திசெய்து அவர்களை சந்தோஷிக்கச் செய்து விட்டேன், என்னை மானபங்கஞ் செய்ய வெத்தனித்த இனிஸ்பெக்டருக்கு மற்றெல்லோரைப் பார்க்கிலும் மிகுந்த சந்தோஷப்படுத்தி விட்டேன். அவருடைய தொகை இருபதினுயிரரூபாயென்னிட மிருக்கிறது; அதை யவர் பிரியமனைவி தாசி சுராஜ்மணி மூலமாக அவரிடங் கொடுத்து அந்தத் தொகையை யாவது வைத்துக்கொண்டு

நல்ல தொழிலைச்செய்து ஜீவிக்கும்படியாகச் செய்யவேண்டுமென அவருடைய கதைமுழுவதும் விடாமல்சொன்னாள். இதைக் கேட்ட சுந்திரலால் மிகுந்த ஆச்சரியமடைந்து சுகதேவியிடம் இருபதினாயிரரூபாயும் பெற்றுக்கொண்டு ஆக்ராபட்டணம் வந்து டிப்டி கலெக்டர் டோனோஜி வீட்டிறங்கி அவர்மூலமாக ஷ தொகையை வேங்கட நாராயணப்பாவிடங் கொடுத்து இனியாவது அக்கிரமச்செய்கைகளுக்கு உடன்படாமல் சுதேச சாமான்களை வாங்கி விற்று சுகஜீவனஞ் செய்யும்படியான புத்தியைக் கற்பித்து விட்டுத் தன்வீடுவந்து சேர்ந்தார்.

சுந்திரலாலும் சுகதேவியும் மன்மதனும் ரதியும்போல் நேசித்து இரண்டு அழகிய குமாரர்களையும், மதிமுகம் போன்ற இரண்டு கன்னிகைகளையும் பெற்று களிப்புற்று நீடூழிகாலம் வாழ்ந்து வந்தார்கள்.

முற்றிற்று.

சுபம்.



## புத்தக விளம்பரம்.



எங்களிடம் கிடைக்கக்கூடிய புதிய தமிழ் நாவல்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜடாவல்லபர் ஓர்-கிராம முன்சீப்பின் சரித்திரம் முதல்பாகம் | | | 0 | 8 | 0 |
| ஷை இரண்டாம் பாகம் | | ... | 0 | 10 | 0 |
| வசீகரி-ஓர் இனிய நாவல் | ... | ... | 1 | 0 | 0 |
| மங்களாம்பாள் சரித்திரம் | ... | ... | 0 | 8 | 0 |
| ஞானாம்பாள் திவ்யசரித்திரம் | ... | ... | 0 | 6 | 0 |
| சந்திரசேகரன் | ... | ... | 0 | 8 | 0 |
| பிரேமகலாவதீயம்-இரண்டாம் பதிப்பு | ... | ... | 0 | 12 | 0 |
| கனகவல்லி | ... | ... | 1 | 0 | 0 |
| சுசீலா | ... | ... | 1 | 0 | 0 |
| தீனதயாளு-மூன்றாம் பதிப்பு | ... | ... | 0 | 8 | 0 |
| தலையணை மந்திரோபதேசம் ஷை | ... | ... | 0 | 8 | 0 |
| ஸ்ரீமாமி கொலுவிருக்கை | ... | ... | 0 | 8 | 0 |
| மதிகெட்ட மனைவி | ... | ... | 1 | 0 | 0 |
| வேணீ ஸம்ஹாரம் | ... | ... | 0 | 3 | 0 |
| முத்திராராக்ஷஸம் | ... | ... | 0 | 4 | 0 |
| மிருச்சகடி | ... | ... | 0 | 4 | 0 |
| ஷேக்ஸ்பியர் நாடகக் கதைகள் | ... | ... | 0 | 6 | 0 |
| லலிதாங்கி | ... | ... | 0 | 8 | 0 |
| ஸுஜாதா | ... | ... | 0 | 8 | 0 |
| வனஸுதா | ... | ... | 0 | 8 | 0 |
| விராஜினி | ... | ... | 0 | 8 | 0 |
| பங்கஜாக்ஷி | ... | ... | 0 | 8 | 0 |
| பவாணந்தா | ... | ... | 0 | 8 | 0 |
| வாஸந்திகா | ... | ... | 0 | 8 | 0 |
| சுந்தரன் | ... | ... | 0 | 12 | 0 |
| லக்ஷ்மி | ... | ... | 0 | 8 | 0 |

---

மானேஜர்,

வாணிவிலாஸினீ புஸ்தகசாலை,

திருவல்லிக்கேணி,

சென்னை.